E-mail : omsakthieditorial@gmail.com
https://archive.org/search.php?query=omsakthi

# ஓம் சக்தி

ஏப்ரல் 2018
விலை ரூ.15

நிறுவனர் :
நா. மகாலிங்கம்



## அருள்மிகு முருதீஸ்வரர் திருக்கோவில்

(கர்நாடகம்)

# சுரங்கம்

அருட்செல்வர் 2003–ஆம் ஆண்டு இந்தக் கட்டுரையை ஒரு யோக நிலையில் எழுதினார். 'பாரதம்' என்ற அந்தப் பண்டைய பண்பாட்டுச் செல்வத்தை எண்ணி ஏற்பட்டதுதான் அந்த யோகநிலை.

அரசியல் சட்டத்தில் நிகழ்ந்துவிட்ட ஒரு பிழையை அல்ல, பிசகை நுட்பமாகச் சுட்டிக்காட்டி நமக்கு எடுத்துக் காட்டியுள்ளார். அருட்செல்வரின் இந்த உணர்வை வாசகர்கள் இந்தமாதச் சுரங்கத்தில் அனுபவிக்கலாம்.

– இ.ஆர்.

# நம் நாடு 'பாரதம்'

நமது அரசமைப்புச் சட்டம் ஆரம்பமாகும் பொழுது "இந்தியா என்கிற பாரதம்" (India that is Bharath) என்றுதான் தொடங்குகிறது. அரசமைப்புச் சட்டத்தின் முதல் வரியே இவ்வாறு தொடங்குவதற்குக் காரணம் இருக்கிறது.



1947, ஆகஸ்ட் 15–ஆம் தேதி இந்தியாவுக்கு மட்டும் சுதந்திரம் கிடைக்கவில்லை. அதே நாளில், அதே நேரத்தில் இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் என்ற புதிய பெயரில் ஒரு பகுதி பிரிவினையாகிச் சுதந்திரம் அடைந்தது.

அதன் முதல் அதிபராக கெய்த் – இ – அஜாம் என முஸ்லீம் மக்களால் அன்போடு அழைக்கப்பட்ட முகமது அலி ஜின்னா அவர்கள் பதவி ஏற்றார். முஸ்லீம்களுக்குப் பாகிஸ்தான் என்ற தனி நாடு கேட்பதற்கு முன்பு, முகமது அலி ஜின்னா திலகருடைய தீவிர சீடராகத்தான் இருந்தார். கோகலேயின் அபிமானத்திற்கு உரியவராகவும் இருந்தார். முழுக்க முழுக்கக் காங்கிரஸ்காரராகத்தான் முகமது அலி ஜின்னா இருந்தார்.

ஜின்னா அவர்களுக்கும் ஆசாத் அவர்களுக்கும் நல்ல உறவு விளங்கியது. ஆனால், ஆசாத் அவர்கள் தேசிய முஸ்லீமாக இருந்தவர்.

திலகர் காலத்திலும் கோகலே காலத்திலும் காங்கிரஸ் கட்சி நடத்திய தேசிய மாநாடுகளில் முஸ்லீம்களின் உரிமைகளைப் பற்றித் தனிக் கூட்டம் போட்டுக் காங்கிரஸ் தலைவர்கள் பேசுவார்கள். அதே போல ஹரிஜனங்களைப் பற்றியும், பெண்களைப் பற்றியும் தனித் தனியாகக் கூட்டங்கள் நடக்கும்.

அப்போதெல்லாம் முஸ்லீம்களுக்குக் காங்கிரஸ்மீது எந்தச் சந்தேகமும் ஏற்படவில்லை. காந்திஜியின் சகாப்தத்தில்தான் காங்கிரஸ்மீது முஸ்லீம்களுக்கு ஏனோ சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. ஜின்னா அவர்களுக்கு நேருஜி மீது நம்பிக்கை ஏற்படவில்லை.

உண்மையில், ஜின்னா ஒரு பிரிவினைவாதி அல்லர். அதேசமயம் முஸ்லீம்களின் உரிமைகளுக்காகத் தொடர்ந்து போராடியவர். அதனால்தான் முஸ்லீம்களைப் பெரும்பான்மையாகக் கொண்ட தனி தேசத்தை உருவாக்க வேண்டும் என்று முகமது அலி ஜின்னா விரும்பினார்.

இந்துக்கள் பெரும்பான்மையாக உள்ள இந்தியாவிலிருந்து பிரிந்தால்தான், முஸ்லீம்களைப் பெரும்பான்மையாகக் கொண்ட தேசத்தை உருவாக்க முடியும் என்று முகமது அலி ஜின்னா தனிநாடு கேட்டார்.



பாகிஸ்தான் என்ற தேசம் புதிதாக உருவாக்கப்பட்ட தேசம். பழைய நமது பூகோள சரித்திரத்தில் பாகிஸ்தான் இல்லை. பஞ்சாப், காஷ்மீர், சிந்து, இண்

டாக்டர் நா. மகாலிங்கம்

டஸ் பள்ளத்தாக்கு ஆகிய பிரதேசங்களைச் சேர்த்து உருவாக்கப்பட்ட தேசம்தான் பாகிஸ்தான் தேசம். (P- Punjab a part, A- Afganisthan a part, K - Kashmir a part, I-Indus Valley, S - Sindu)

அதேசமயம் இந்தியாவுக்கு ‘பாரதம்’ என்பது பண்டைய பெயர். அது வேதகாலப் பெயர். ஐந்தாயிரம் ஆண்டுப் புராதன இதிகாசம் இதற்கு உண்டு. இந்தத் தேசம் மிகப் புராதனமான தேசம். பாண்டவர்களின் வம்சத்தில் வந்த ரிக் ரிஷியினுடைய குமாரனாகிய பரதனின் திருப்பெயரில் அமைந்ததால், இது ‘பாரதம்’ என்று பெருமை பெற்றது. குடும்பத்தில் நடக்கும் எல்லா விசேஷங்களுக்கும் சம்ஸ்கிருத மொழியில் ஒரு மகா சங்கல்பத்தை ஓதுவார்கள்.

“பரார்த்தே ஸ்வேத வராக கல்பே
வைவஸ்வத மன்மந்த்ரே
அஷ்டா விம்சதி தமே கலியுகே
பிரதமே பாதே ஜம்பூத்தீத்வே பாரத வர்ஷே
பரத கண்ட மேரு ஹோ”




இதன்மூலம் பாரத கண்டத்தின் தொன்மையை அறியலாம்.

இந்த பாரதத்தில்தான் பாகிஸ்தானும், இன்றைய பங்களாதேசும் இருந்தன.

இந்தியாவிலிருந்து பாகிஸ்தானும், பாகிஸ்தானிலிருந்து பங்களாதேசும் பிரிந்து சென்றன.

மிச்சமிருக்கிற இந்திய நிலப்பகுதியை இனிமேலும் இந்தியா என்று அழைப்பது பூகோள ரீதியில் சரியில்லை.

இந்த மிச்ச இந்தியாவைத்தான் நமது அரசமைப்புச் சட்டம் “இந்தியா என்கிற பாரதம்” (India that is Bharath) என்கிறது. அரசமைப்புச் சட்டத்தின் முதல் வாக்கியம் உண்மையை முழுமையாகப் பிரதிபலிக்கவில்லை.

பாரதமே புராதன காலம் முதல் இந்தியாவாக இருந்தது. அரசமைப்புச் சட்டப் புத்தகத்தில் அதைச் சுட்டிக்காட்ட வேண்டும் என்றால், “Bharath that was India” என்றுதான் எழுதியிருக்க வேண்டும். India that is Bharath என்று எழுதியிருக்கக்கூடாது. அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கியவர்கள் ஏனோ இதனைக் கவனிக்கத் தவறிவிட்டார்கள்.

முஸ்லீம்கள் பெரும்பான்மையாக உள்ள தேசத்தைப் பாகிஸ்தான் என்பதைப்போல, இந்துக்கள் பெரும்பான்மையாக உள்ள தேசத்தை பாரதம் என்று அழைக்கலாம் என நமது மூத்த தலைவர்களில் பலர் அன்றைக்கு விரும்பினார்கள் என்பது உண்மைதான்.

ஆனால், சிறுபான்மை மக்களின் உரிமைகளை மதிக்கவும், பாதுகாக்கவும் வேண்டும் என்று மிகப் பெருந்தன்மையோடு “மிச்ச” இந்தியாவை “பாரதம்” என்கிற ‘இந்தியா’ என்றே குறிப்பிட்டனர்.

பாரதம் என்ற பண்டைய பெயரை மறக்காத மத்திய அரசு, தமது பல்வேறு தொழில் நிறுவனங்களுக்குப் ‘பாரதம்’ என்ற பெயரைச் சூட்டியுள்ளது.

பாரத் ஹெவி எலக்ட்ரிக்கல்ஸ் லிமிடெட், பாரத் பெட்ரோலியம், பாரத கனரகத் தொழிற்சாலை, பாரத ஸ்டேட் வங்கி என்று இந்நிறுவனங்களுக்குப் பெருமிதத்தோடு பெயர் சூட்டப்பட்டுள்ளன.

அதுமட்டுமல்ல, இந்தியாவின் மிக உன்னதமான விருதுக்கு நாம் சூட்டியுள்ள பெயர் “பாரத ரத்னா” என்பதாகும். இவ்வாறு, பாரதம் என்ற பூகோள ரீதியான வேதகாலப் புராதனப் பெயரை நாம் முற்றாக மறந்துவிடாமல், ஆங்காங்கே கௌரவத்தோடு கையாண்டும் வருகிறோம்.

பாகிஸ்தான், சிலோன், பங்களாதேஷ், இந்தியா, பர்மா வரை உள்ள நாடுகளை இணைத்து ‘இந்தியன் பெடரேஷன்’ என்று எதிர்காலத்தில் அமைக்கலாம். அதற்கு வேண்டுமானால் ‘இந்தியா’ என்ற பெயரை வைக்கலாமே தவிர, பாரதத்தை இனிமேலும் ‘இந்தியா’ என்ற பெயரில் அழைப்பது பொருந்தாது.

மகாகவி பாரதியார் அவர்கள்,

“பாரதநாடு பழம்பெரும் நாடு
நீரதன் புதல்வர் –
இந் நினைவகற்றாதீர்” என்றும்
“பாரத தேசம் என்று தோள் கொட்டுவோம்”

என்றும் 'பாரதம்' என்ற அத்திருப்பெயரைப் பெரு மிதத்தோடு கையாண்டுள்ளார்.

மகாகவி தாகூரும் வங்காள மொழியில் வழங்கிய தேசிய கீதத்தில் "பாரத பாக்ய விதாதா" என்று, 'பாரதத்தில் பிறப்பதற்குப் பாக்கியம் செய் திருக்க வேண்டும்' என்று குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு பார்க்கும்பொழுது, 'இந்தியா' என்ற பொதுப்பெயர் நமது நாடடிற்குப் போதாது. பாகிஸ் தானும் இந்தியாதான். பங்களா தேசும் இந்தியாதான். மூன்றுமே இந்தியாக்கள்தான். மூன்றும் சேர்ந் திருந்தால்தான் இந்தியா.


திலகர்


கோகலே

இரண்டு இந்தியாக்களுக்குத் தனிப்பெயர்கள் சூட்டப்பட்டுள்ளன. இதேபோல முன்றாவதாக உள்ள பெரிய இந்தியாவுக்கும் தனிப்பெயர் அவசியம்.

'இந்தியா' என்ற பெயர் அதன் தனிச்சிறப்பை இப்போது இழந்து நிற்கிறது. அதனால், 'பாரதம்' என்ற பண்டைய கலாச்சாரப் பெயரில் நமது நாட்டை அழைப்பதுதான் நமக்குப் பெருமிதம்.

உலகத்தில் பல நாடுகள் தங்களுடைய நாட் டின் பெயர்களை வரலாற்று ரீதியில் மாற்றி அமைத்துக் கொண்டுள்ளன. பக்கத்தில் உள்ள சிங்களர் தேசத்தை பிரிட்டிஷார் 'சிலோன்' என்று அழைத்தனர். அப்பெயரை 'ஸ்ரீலங்கா' என்று அந்த அரசு மாற்றியுள்ளது. பர்மாவை 'மியான்மர்' என்று மாற்றி விட்டார்கள்.

'கோல்ட் கோஸ்ட்' என்ற ஆப்பிரிக்கா தேசத் தின் பெயரை 'கானா' என்று மாற்றி விட்டனர்.

நாமும் 'இந்தியா' என்பதை 'பாரதம்' என்று பெயர் மாற்றுவது நியாயம்.

ஆனால், பாகிஸ்தான் என்று பெயர் வைத் திருப்பதுபோல இந்தியாவுக்கு 'இந்துஸ்தான்' என்று பெயர் வைக்க வேண்டும் என்று டெல்லி யில் கூடிய துறவியர் பேரவை தீர்மானம் ஒன்றை சென்ற மார்ச் மாதம் நிறைவேற்றி உள்ளது.

'ஹிந்துஸ்தான்' என்று இந்தியாவை பிரிட்டி ஷார்தான் கூறிவந்தனர். பிரிட்டிஷ் கம்பெனி ஒன்று தனது கிளையை இந்தியாவில் ஆரம்பித் துள்ளது. அதற்கு அவர்கள் வைத்த பெயர் 'இந்துஸ்தான் லீவர்' என்பதாகும். அது பிரிட்டிஷ் கம்பெனி. இந்துஸ்தான் என்பதாலேயே அது இந் தியக் கம்பெனி அல்ல. அதே கம்பெனி பாகிஸ் தானில் 'பாகிஸ்தான் லீவர்' என்றுள்ளது.

'இந்துஸ்தான்' என்ற பெயரையும் நாம் புழக்கத்தில் வைத்திருக்கிறோம். 'இந்துஸ்தான் பெட்ரோலியம்', 'இந்துஸ்தான் போட்டோ பிலிம்ஸ்' என்று மத்திய அரசின் நிறுவனங்கள் சில உள்ளன. இந்துஸ்தான் என்ற அரசின் நிறுவ னங்கள் சில உள்ளன. இந்துஸ்தான் என்ற பெயர் பண்டைய நமது கலாச் சாரப் பெயர் அல்ல.

அண்மையில், 'இந்துத்வம் என்பது மதம் சார்ந்தது அல்ல, அது ஒரு வாழ்க்கை முறை' என்று பிரதமர் வாஜ்பாய் ஒரு புதிய விளக்கத்தை வழங்கியுள்ளார். அதன் படி 'இந்துத்வம்' என்பது பிற சமயத்தாரையும் சமமாக மதிப்பதற்குரிய பண்பாடு என்றே பொருள் தரப்படுகிறது. இதனை எல்லோரும் வரவேற்க வேண்டும்.

இந்த அடிப்படையில், இந்தியாவில் உள்ள 16 கோடி இஸ்லாமியச் சகோதரர்களும், 4 கோடி கிறிஸ்தவச் சகோதரர்களும், மதங்களால் இஸ்லா மியர்களாகவும், கிறிஸ்தவர்களாகவும் இருக்கிறார் களே தவிர, கலாச்சாரத்தாலும், பிறப்புரிமையாலும் அவர்கள் இந்தியர்களே!

இந்திய முஸ்லீம்களுக்கும், இந்தியக் கிறிஸ் தவர்களுக்கும் இந்தியாதான் தாய்நாடு. அரேபிய இஸ்லாமியர்களுக்குத் தாய்நாடு அரேபியா. அமெரிக்கக் கிறிஸ்தவர்களுக்குத் தாய்நாடு அமெரிக்கா. அதேசமயம் இந்தியக் கிறிஸ்தவர் களுக்குத் தாய்நாடு அமெரிக்கா அல்ல.

இஸ்லாம் என்ற மதத்தால் முஸ்லீம்கள் எல் லோரும் ஒன்றுபட்டாலும், இவர்களின் தாய்நாடு கள் வேறுவேறு. இதேபோலத்தான் கிறிஸ்தவர் களுக்கும்.

இந்தியாவுக்கு 'இந்துஸ்தானம்' என்ற பெயர் வைத்தால், அது இந்து மதத்தைத் தழுவிய நாடோ என்று பிற சமயத்தார் ஒருவேளை சந்தேகப்பட லாம். சந்தேகப்பட்டால், 'பாரதம்' என்ற பெயரைத் தவிரப் பண்டைய பெயர் நமக்கு இல்லை.

இது சம்பந்தமாக உச்சநீதிமன்றமும் சில வரவேற்கத்தக்க தீர்ப்புகளை வழங்கியிருக்கிறது. 'செக்யூலரிசம்' என்கிற மதச்சார்பற்ற அரசு என்ப தற்கு இதுவரை மதங்களுக்கு எதிரானது என்றே பலரும் கூறிவந்தனர்.

ஆனால், செக்யூலரிசம் என்பது மதங்களுக்கு எதிரானது அல்ல. எல்லா மதங்களையும் சமமாக நடத்த வேண்டும் என்பதுதான் செக்யூலரிசம். சுருக்கமாகச் சொன்னால் சமய சமத்துவம் தான் செக்யூலரிசமே தவிர, சமயச்சார்பற்ற நிலை அல்ல.

அரசு நடத்துகின்ற கல்விக்கூடங்களில் மாணவர்களுக்கு அனைத்துச் சமயங்களையும் போதிக்கலாம். செக்யூலரிசம் என்ற பெயரில் மாணவர்களுக்கு மத போதனையைக் கிடைக்காமல் தடுத்துவிடக்கூடாது என்று உச்ச நீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளது.

இத்தகைய புதிய சூழ்நிலையில் நமது பாரதக் கலாச்சாரத்தை அனைத்து பாரதவாசிகளும் சமயங்களைக் கடந்து ஏற்றுக்கொள்ள முன்வரவேண்டும்.

பாரதக் கலாச்சாரம் ஹிந்துக்களுக்கு எவ்வளவு உரிமையுடையதோ, அந்த அளவுக்கு இஸ்லாமியர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் உரியதாகும்.

காந்திஜியின் நண்பர்களாகக் கிறிஸ்தவர்களும், முஸ்லீம்களும் பலர் இருந்தனர். கிறிஸ் தவர் ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கடைத் தேற்றம்' (Unto this Last) என்ற புத்தகம்தான் காந்திஜியைச் சர்வோதயத்தைக் கண்டறியச் செய்தது.

இஸ்லாமிய அறிஞர் ஜாஹீர் உசேன் அவர்களைத்தான் காந்திஜி சுதந்திர இந்தியாவுக்கான கல்வித்திட்டத்தைத் தயாரிக்கும் குழுவிற்குத் தலைவராக்கினார்.

'ராமராஜ்யம்' என்று காந்திஜி தமது சுதந்திர இந்தியாவைப் பற்றிக் குறிப்பிட்டு வந்தார். அவ்வாறு கூறியது, தசரதச் சக்கரவர்த்தித் திருமகன் ராமர் பெயரை நினைவு கூர்வதற்காக அல்ல என்று தெளிவுபடுத்தினார்.

'ராம ராஜ்யம் என்று சொல்கிறபோது நான் 'கடவுள் ராஜ்யம்' என்பதைத்தான் குறிப்பிடுகிறேன்' என்றார்.

ராமபிரானுக்கு ராமன் எனத் தசரதச் சக்கரவர்த்தி பெயரிடுவதற்கு முன்பே நம்முடைய சாஸ்திரத்திலே ராம நாமம் பிரபல்யமாக இருந்தது. அதைத்தான் ராமருக்குத் தசரதர் பெயர் சூட்டினார்.

அஷ்டாட்சர மந்திரமாகிய 'ஓம் நமோ நாராயணாய' என்பதிலிருந்து 'ரா'வும், பஞ்சாட்சர மந்திரமாகிய 'நமசிவாய' என்பதிலிருந்து 'ம'வும் சேர்த்துத்தான் 'ராம' நாமத்தை நம் முன்னோர்கள் உருவாக்கினர். வைணவ – சைவ இணைப்புக்காகவே இதைச் செய்தனர்.


பாரதியார்


ரவீந்திரநாத் தாகூர்

'ரா' என்ற எழுத்தை ஏன் எடுத்தனர் என்றால், அது தான் 'நாராயணாய' மந்திரத்தில் ஜீவ எழுத்தாக உள்ளது. 'ரா' என்ற எழுத்தை எடுத்துவிட்டால் 'நாயணாய' என்று ஆகிவிடும். அயணம் என்றால் வழி. நாயணாய என்றால் வழி இல்லாதது எனப்படும்.

'நமசிவாய' என்ற ஐந்தெழுத்து மந்திரத்தில் ஜீவநாடியாக உள்ளது 'ம' என்ற எழுத்துத்தான். அதனை எடுத்துவிட்டால் 'நசிவாய' என வரும். நசிவு என்றால் அழிவு.

இவ்வாறு ரா, ம என்ற இரு ஜீவ எழுத்துக்களையும் இணைத்துத்தான் ராம நாம மந்திரத்தை உருவாக்கினர்.

ஆனால், காந்திஜி அரசியல் சுயராஜ்ஜியம், பொருளாதார சுயராஜ்ஜியம், இறுதியாக ஆன்மீக சுயராஜ்ஜியம் உள்ள ராஜ்யம்தான் 'ராமராஜ்யம்' என்றார். ராமராஜ்யம் என்பது சுயதேவைகள் அனைத்தும் பூர்த்தியான, நேர்த்தியான ஒரு கிராம சுயராஜ்ஜியம்.

சுருக்கமாகச் சொன்னால், கிராம ராஜ்யத்தையே காந்திஜி ராமராஜ்யம் என்றார். பாரதக் கலாச்சாரம் என்பது நமது பட்டி தொட்டிகளையும், பாளையங்களையும் மையமாகக் கொண்டதே தவிர, நகரங்களை நாயகமாகக் கொண்டதல்ல.

6 லட்சம் கிராமங்களைக் கொண்ட பாரதம், 6 லட்சம் கிராமக் குடியரசுகளாகத் (Village Republics) திகழ வேண்டும். இந்தியாவின் உயிர்நாடி கிராமங்களில்தான் இருக்கிறது என்று, எவரும் கண்டறிந்து சொல்வதற்கு முன்பு காந்திஜிதான் கூறினார்.

இந்தியாவை 'இந்துஸ்தான்' என்று இங்கிலீஸ்காரர்களின் வார்த்தைகளால் அழைக்காமல், நமது இதிகாச புராணப் பண்டைய வரலாற்றுப் பெயராக உள்ள 'பாரதம்' என்ற பெயரில் அழைக்க வேண்டும் என்பதே தேசபக்தர்களின் ஆசையாகும். ஆகவே, 'பாரதம்' என்ற பெயரே இந்தியாவுக்குச் சூட்டப்பட வேண்டிய சுயமரியாதையுள்ள பண்டைய கலாச்சாரப் பெயராகும். ●

**கட்டுரை**

டாக்டர். அப்துல் கலாம் ஆலோசனைப்படி, நவீன நீர்வழிச்சாலைத் திட்டமானது ஒவ்வொரு மாநிலத்திற்கும் அந்தந்த மாநிலங்களுக்கு நிறைவேற்றிக்கொள்ளும்படியாகவும் பின்னர் மற்ற மாநிலங்களுடன் இணைத்துக்கொள்ளும்படியாகவும் கொடுக்கப்பட்டது. பீகார் மற்றும் குஜராத் மாநிலங்களுக்கான நீர்வழிச்சாலைத் திட்டம் குறித்து இங்கு பார்க்கலாம்.




குஜராத் நீர்வழிச்சாலைத் திட்டம்

# நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் 5

## பீகார் மற்றும் குஜராத் நீர்வழிச்சாலைத் திட்டம்

**பொறியாளர் ஏ.சி. காமராஜ்**

**பீகார் நீர்வழிச்சாலைத் திட்டம் :** பீஹார் மாநிலத்தின் மத்தியில் கங்கை நதி ஒடுகிறது. ஆனால் பீஹார் மக்களுக்கு அதன்மூலம் ஒரு சொட்டு நீர் கூடப் பயன் இல்லை எனப் பீஹார் முதலமைச்சர் மாண்புமிகு நிதிஷ்குமார் அவர்கள் இந்தியா டுடே 2006–ஆம் ஆண்டு மார்ச் 27 இதழில் குறிப்பிட்டு இருந்ததை அறிந்த அன்றைய ஜனாதிபதி மாண்புமிகு டாக்டர் ஏ.பி.ஜெ. அப்துல் கலாம் அவர்கள் அது குறித்து ஆச்சரியமடைந்து என்னிடம் அதன் காரணத்தைக் கேட்டார்.

அதற்கு நான், “கங்கை நதி பீஹார் மாநிலத்தின் மத்தியில் ஒடுகிறது. ஆனால் அந்த நீரை உபயோகிக்க முடியாது. அதற்குக் காரணம், கங்கை நதி பீகாரின் மத்தியில் இருந்தும் கடல் மட்டத்திலிருந்து 70 மீட்டர் உயரத்தில் ஒடுகிறது. ஆனால் பீகாரின் நிலப்பகுதிகள் அனைத்தும் வாட்டமாக உயரத்தில் அமைந்துள்ளன. அதாவது கடல் பகுதியிலிருந்து 100 மீட்டர் முதல் 300 மீட்டர் உயரத்தில் உள்ளன. ஆதலால் ஆற்றைவிட உயரம் கொண்டதாக பீஹார் நிலப்பகுதிகள் இருப்பதன் காரணமாக கங்கை நீரை பீஹார் மாநிலம் உபயோகிக்க முடியவில்லை” என விளக்கமளித்தேன்.

அப்பொழுது ஜனாதிபதி அப்துல் கலாம் அவர்கள், “இதற்குத் தீர்வு இருக்கிறதா?” என்று கேட்டார். பீஹார் மக்களுக்கு கங்கை நதி நீரை வழங்குவதற்கான தீர்வு நாங்கள் கொடுத்த கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலையே என்பதை விளக்கமாகவும், விரிவாகவும், அன்றைய ஜனாதிபதி அப்துல்கலாம் அவர்களிடம் எடுத்துக் கூறினேன்.



திரு. அப்துல்கலாம் அவர்களும் பீஹார் மாநிலத்திற்கெனத் தனியாக நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தைத் தயாரித்து தர என்னிடம் கேட்டுக் கொண்டார். அதோடு அவர் கூறினார், “நான் பீஹார் மாநில சட்ட சபையில் உரையாற்றுகிறேன். அதுவும் நான்கு நாட்களில். அதற்குள் திட்டம் கொடுத்துவிட முடியுமா?” என்று கேட்டார். நானும் “தருகிறேன்” என்றேன்.

அதன்படி உரிய ஆவணங்களைச் சேகரித்து ஆய்வுகள் செய்து பீஹார் மாநிலத்துக்கான தனி நீர்வழிச்சாலைத் திட்டம் தயாரித்துக் கொடுத்தோம். இத்திட்டம் தயாரிக்கப் பொறியாளர் நண்பர் காசி அவர்கள் பெரும் துணையாக இருந்தார். 2006–ஆம் வருடம் இத்தனித்திட்டம் குறித்து பீஹார் மாநில சட்டமன்றத்தில் மாண்புமிகு ஜனாதிபதி அப்துல்கலாம் அவர்கள் விரிவாகப்

தொடர்ச்சி : 10–ம் பக்கம்



# ஒரு தூண்டுகோல்

நதிகள் இணைப்புக்குத் தமிழ்நாடு தவமாய்த் தவமிருந்தாலும் அது வரமாய்க் கிடைக்க வாய்ப்பே இல்லை. காரணம், இந்தியாவின் கடைமடை மாநிலம் தமிழ்நாடு. இது இயற்கையின் சாபமோ, தமிழ்நாட்டின் தவக்குறைவோ!

அண்டை மாநிலங்களின் நதிகளில் கெண்டையும், கெளுத்தியும், விலாங்கும் நீந்திக் கொண்டிருக்கின்றன. விவசாயத்திற்கான பாசன நீரோ, அங்குள்ள பூமிகளின் தேவையைவிட உபரியாக இருப்பதால், வங்கக் கடலிலும், அரபிக் கடலிலும் சங்கமிப்பது நமக்குக் கண்ணீரை வரவழைக்கின்றன.

'உபரித் தண்ணீரைத் தந்து உதவுங்கள்' என்று அவர்களிடம் கேட்டாலோ, வறண்டு போன மாநில உறவுகளால், விரோதம் மட்டுமே வெள்ளப் பெருக்காக வருகிறது. கங்கை, காவிரி, வைகை என இணைக்கத் திட்டமிட்டால், அது கானலாய் – கனவாய் – கதையாய்ப் போனதன்றிக் கண்ட பலன் ஒன்றுமில்லை.

பாதி இந்தியாவிலிருந்து மகாநதியைக் கடத்தி வரலாம் என்றால், அந்த அசரீரிக்கு ஆந்திரமோ, கர்நாடகமோ, கேரளமோ ஆதரவாய் இல்லை. இந்தப் பின்னணியில் மௌனமாக ஓர் இடி நம் தலைமீது விழுந்தது, நதிகளை இணைப்பதே சுற்றுச்சூழலுக்குக் கேடு என்று.

நதிகள் இணைப்பு நடக்காது. இது விதியின் பிழை. நதியின் பிழையல்ல. இந்நிலையில், யாரோ ஒரு நீரியல் நிபுணர் ராஜதந்திர ரசவாத வித்தை செய்து, நதிகள் இணைப்பு வேண்டாம், அதற்குப் பதிலாக நவீன நீர்வழிச்சாலையை அமைப்போம் என்று முதலடியை எடுத்து வைத்தார்.

அவருடைய குரலில் தெளிவும், தேர்ச்சியும், தீட்சண்யமும் திருப்பமும் பின்னிக் கிடந்தன. இதைக் கவனித்த அருட்செல்வர், அந்த நல்ல மனிதரை நாடி நன்கொடை வழங்கி, அவருக்குத் துணை செய்தார்.

இது தமிழ்நாட்டிற்கு மட்டுமான நீர்வழிச்சாலை அல்ல, வட இந்தியாவின் அஸ்ஸாம் வரைக்குமே இந்த நீர்வழிச் சாலையில் பயணிக்கலாம். சரக்கு வாகனங்களை இயக்கலாம். ஒரு தோற்றத்தில் இது நீர்வழிச் சாலை. மறுதோற்றத்தில் இக்கால்வாயிலிருந்து பாசன நீரைப் பக்கத்து மாநிலங்கள் பயன்படுத்திக் கொள்ளலாம்.

இதன் தொழில்நுட்பத்தைக் கண்டறிந்த நீரியல் நிபுணர் நவாட்டெக் தலைவர் பேராசிரியர் திரு. ஏ.சி. காமராஜ் அவர்களை, அமெரிக்கா, கனடா நாடுகள் அழைத்துப் பாராட்டின. முன்னாள் பிரதமர் திரு. வாஜ்பாய் முதல், மத்திய அமைச்சர் நிதின் கட்காரி வரை வாழ்த்துப் பெற்றார். மேதகு அப்துல் கலாம் அவர்கள் இவரோடு கை குலுக்கி, இந்தியாவை வல்லரசாக்கும் மனித ஏவுகணையாகவே இவரைப் போற்றினார்.

இதன் எதிர்ப்பக்கத்தின் செய்தியைத் தவறாமல் படியுங்கள். வாழ்நாளில் ஏதேனும் தினையளவு பயனாவது இச்சமுதாயத்திற்குச் செய்ய விரும்புகிறவர்களுக்கு ஒரு வாய்ப்பாக, வரப்பிரசாதமாக ஏன் வரமாகவே கூட இது கிடைத்திருக்கிறது.

ராமர் பாலம் கட்ட உதவிய அணில் போலும், அனுமன் போலும் உதவலாம்.

●

# ஒரு வேண்டுகோள்



வெள்ளப்பெருக்கு என்ற வேதனையையும், வறட்சி என்ற வெங்கொடுமையையும் சமநிலைப்படுத்திச் சமூக மக்களைக் காக்கும் திட்டம்தான், நீரியல் நிபுணர் திரு. ஏ.சி. காமராஜ் அவர்களின் "நவீன நீர்வழிச்சாலைத் திட்டம்." இது நவ பாரதத்தையே நந்த வனமாக்கும் திட்டமாகும்.

இத்திட்டத்தின் பிதாமகர் பொறியாளர் ஏ.சி. காமராஜ் அவர்கள் செய்து வந்த ஆராய்ச்சிப் பணிகளில் பல அறிவியலாளர்களும், பொறியாளர்களும் அல்லும் பகலும் உழைத்து வருகின்றனர்.

இந்த நற்காரியத்தை பத்மபூஷண் அருட்செல்வர் டாக்டர் மகாலிங்கம் அவர்கள் அறிந்த நொடியிலேயே, சக்தி நிறுவனத்தின் சார்பில் 2014–ஆம் ஆண்டு பொறியாளர் ஏ.சி. காமராஜ் அவர்களை அழைத்துப் போற்றிப் பாராட்டி நன்கொடை வழங்கி ஊக்கப்படுத்தி உத்வேகப்படுத்தினார்.

அதனைத் தொடர்ந்து, சென்னை சில்க்ஸ் நிறுவனம், ராம்ராஜ் காட்டன் நிறுவனம், டிவிஎஸ் நிறுவனம், சக்தி மசாலா நிறுவனம் ஆகியவையும் நன்கொடைகளை நல்கிப் பெருமை பெற்றன.

நவீன நீர்வழிச்சாலைத் திட்டப் பணிகளைத் துரிதப்படுத்த ஆராய்ச்சி மையம் ஒன்று அமைக்க வேண்டியுள்ளது. மின்சாரப் பிணைப்பில் எவ்வாறு மின்சாரம் இருவழியில் பாய்கின்றதோ, அதே விதியின்படி இந்த நவீன நீர்வழிச்சாலையில் இருவழியாகத் தண்ணீர் பாய்கிறது.

இந்த விஞ்ஞானக் கோட்பாட்டை வெளிநாட்டு நிபுணர்கள் கண்டு வியக்கிறார்கள். இதன்படி நீர்வழிச்சாலைக் கால்வாயிலுள்ள தண்ணீர், சுயசக்தியோடு ஓடுகிறது. அதனால், அதை எங்கு வேண்டுமானாலும் திருப்பிவிட முடியும். அதேநேரத்தில் போக்குவரத்திற்கும் பயன்படுத்த முடியும். நமது நெடுஞ்சாலைகளில் வாகன நெரிசல் குறையும். இதில் ஓடும் வாகனங்களுக்கு டயர் சக்கரங்கள் அவசியமில்லை.

நீர்வழிச்சாலையின் தண்ணீரை மேலாண்மை செய்கிற தொழில்நுட்பம் ரிமோட் சென்சிங் முறையில் உள்ளது. கனடாவிலும், நெதர்லாந்திலும் இதனைக் காணலாம். இங்கும் அதே நுட்பத்தைக் கையாண்டு அதனை அவசியப்பட்டவர்களுக்கு அதனைக் கற்றுக் கொடுக்கவும், அதன்மூலம் வேலை வாய்ப்பைப் பெருக்கவும், "நவீன நீர் வழிச்சாலை ஆராய்ச்சி மையம்" செயல்பட உள்ளது.

**இதன் முதல்கட்டப் பணிக்குக் குறைந்தபட்சம் ரூ. 10 கோடி தேவைப் படுகிறது.** இந்நிதியின் மூலம் ஒரு நதி நமது விதியை நிர்ணயிக்கும் நவாட்டெக் இன் ஆராய்ச்சி மையத்திற்கு நமது பங்களிப்பு என்ன? பாரதி சொன்னதைப்போல நிதி மிகுந்தவர் பொற்குவை தரட்டும். நிதி குறைந்தவர் காசுகளோ, காசோலையோ தரட்டும்.

இந்நற்காரியத்தால் இந்தியாவை நல்லரசாக்குவோம், வல்லரசாக்குவோம்.

**வங்கியில் பணம் செலுத்த :**

ஸ்டேட் பேங்க் ஆஃப் இந்தியா, NAWAD TECH.
எண் : 30972620957, விநாயகா நகர் கிளை,
மதுரை - 625020. IFSC : SBIN*0001479*.

**காசோலை / டி.டி.-யினை**

**மதுரையில் செலுத்தத்தக்கவாறு அனுப்ப :**

'NAWAD TECH' என்ற பெயரில் காசோலை / டிடி எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு உங்கள் விலாசத்துடன் அனுப்பலாம்.

NAWAD TECH, 577, முதல் தளம்,
3–ஆவது குறுக்குத் தெரு, கே.கே. நகர் மேற்கு,
மதுரை – 625020. போன் : 0452– 4219215,
மின்னஞ்சல் : office@nawadtech.com

நன்கொடையாளர்களுக்கு 80G வருமான வரி விலக்கு உண்டு.

*7–ம் பக்கத் தொடர்ச்சி*

பேசினார்கள். அதனை முதலமைச்சர் உள்ளிட்ட அனைவரும் வரவேற்று ஆதரித்தனர்.

அதன்பின் பீகார் அரசு பலமுறை என்னை அழைத்துத் திட்டத்தைப் பற்றி விரிவாகக் கேட்டது. நாங்களும் விளக்கம் கொடுத்தோம். இந்தக் கூட்டங்களுக்குப் பலமுறை முன்னாள் தலைமைப் பொறியாளர்கள் திரு. கே. பாண்டி அவர்களும், திரு. டி. கிருஷ்ணசாமியும் பீஹாருக்கு உடன் வந்திருந்தனர். மாண்புமிகு முதல்வர் நிதிஷ்குமார் அவர்களின் கட்சித் தேர்தல் அறிக்கையிலும், பீகார் நீர்வழிச்சாலைத் திட்டம் நிறைவேற்றப்படும் என வாக்குறுதி வழங்கப்பட்டது.

இந்த அறிவிப்புகளுக்குப் பிறகும் பீஹார் அரசின் அமைச்சர் உள்ளிட்ட உயர் அரசு அதிகாரிகளோடும், பீஹார் அரசின் பல்வேறு பொறியியல், அறிவியல், தொழில்துறை அமைப்புகளோடும் 2007 முதல் 2009–ஆம் வருடம் வரை தொடர்ந்து எனது தலைமையிலான தேசிய நீர்வழிச்சாலைத் திட்டக்குழு பல கூட்டுக்கூட்டங்களையும் ஆலோசனைக் கூட்டங்களையும் நடத்தியுள்ளது.

அக்கூட்டங்களில் பீஹார் அரசு இத் திட்டத்தை ஏற்றுச் செயல்படுத்தப் பல நிலைகளில் தனது ஆதரவையும் சம்மதத்தையும் வழங்கியுள்ளது. 2009 ஜூலை 9, 10 ஆகிய தேதிகளில் பீஹார் நீர்ப்பாசன அமைச்சர் உள்ளிட்ட பீஹார் அரசு உயரதிகாரிகளுடன் பாட்னாவில் நடந்த கூட்டங்களிலும், இறுதியாக மாண்புமிகு



*பொறியாளர் ஏ.சி. காமராஜ் மற்றும் டாக்டர் அப்துல்கலாம் அவர்களுடன் பீகார் மாநில நீர்வளத்துறை முதன்மைச் செயலர் திரு. அஜய் நாயக் மற்றும் அதிகாரிகள்.*

முன்னாள் ஜனாதிபதி அப்துல்கலாம் அவர்கள் முன்னிலையில் 2009– ஆம் ஆண்டு செப்டம்பர் 8–ஆம் தேதி அன்று பீகாரின் முதன்மைச் செயலாளருடன் டெல்லியில் நடந்த கூட்டத்திலும் பீஹாருக்கான தனி நீர்வழிச்சாலைத் திட்டத்தை நிறைவேற்றுவதை பீஹார் அரசு முழு மனதோடு ஏற்றுச் செயல்படுத்த முடிவு செய்துள்ளது. இத் திட்டம் தான் பீகாரின் வறுமையையும் அதன் பட்டினி நிலையையும் போக்கும் என்பதோடு பீஹாரை ஒரு வளர்ச்சி பெற்ற மாநிலமாக ஆக்கும் என்பதும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

பீஹார் நீர்வழிச்சாலைத் திட்ட ஆய்வுகளை மேற்கொள்ளத் தேவையான நிதியினை வழங்கும்படி மத்திய அரசின் திட்டக் குழுவிடம் பீஹார் அரசு கேட்டுக் கொண்டது. மத்திய அரசும் இத் திட்டத்தைத் தேசியத் திட்டமாக அறிவித்துப் போதிய நிதியை ஒதுக்கி உள்ளது. தேசிய நீர்வள மேம்பாட்டு முகமை (NWDA) திட்ட ஆரம்ப ஆய்வினைத் தானே செய்வதாக ஒப்புக்கொண்டது. ஆனால் இதுவரை அவர்கள் ஒன்றும் செய்யவில்லை.




இந்தியாவில் மிக அதிக நீர்வள மிக்க மாநிலங்களில் ஒன்றான பீகாரின் வடபகுதியில் வெள்ளச் சேதம் என்றால் அதே நேரத்தில் அதன் தென் பகுதியில் கடும் வறட்சி ஏற்படுகிறது. வெள்ளச் சேதத்தைக் கட்டுப்படுத்தவும், வறட்சியைப் போக்கவும் கொடுக்கப்பட்டதே பீகார் நீர்வழிச்சாலைத் திட்டம். பீகார் நீர்வழிச்சாலை மூலம் பிணைக்கப்படும் நதிகள் :

மேற்கில் இருந்து கிழக்கே 1000 கி.மீ நீளமுள்ள பீகார் நீர்வழிச்சாலை, வடக்கு பீகாரில் கன்டாக், பாக்மாதி, கர்ஷா, கோசி மற்றும் மகாநந்தா ஆறு

களையும் தெற்கு பீகாரில் சோன், புன்புன், பால்கு மற்றும் தாதர் ஆகிய அனைத்து பிரதான மற்றும் சிறு நதிகளையும் இணைக்கிறது.

**நன்மைகள் :** இத்திட்டம் மூலம் பீகாரில் மட்டும் 68 இலட்சம் ஏக்கருக்குப் புதிதாகப் பாசனத்தைக் கொண்டு வர முடியும். 6.5 கோடி மக்களுக்குத் தூய குடிநீர் வழங்க முடியும். 1000 கி.மீ. தூர நீர்வழிச்சாலை அமையும். 2100 மெகா வாட் நீர்மின் உற்பத்தி கிடைக்கும். 1.25 கோடி மக்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கும்.

**நிதி மற்றும் வருமானம் :** இத்திட்டத்திற்கு சுமார் ரூ. 60,000 கோடி செலவாகும். அதே நேரத்தில் வருடா வருடம் ரூ. 6450 கோடி வருமானம் கிடைக்கும்.

**குஜராத் நீர்வழிச்சாலைத் திட்டம் :** எந்த நேரத்திலும் இடைவிடாது தண்ணீர் கிடைக்கக் கூடிய தண்ணீர் வளமிக்க மாநிலம் குஜராத் மாநிலம். இம்மாநிலத்தில் வெள்ளம் கட்டுக் கடங்காத வண்ணமாய் இருக்கின்றது. வருடா வருடம் நிகழும் இந்த வெள்ளத்தைக் கட்டுப் படுத்தி, தேக்கி, இருவழிப்பாதையில் பயன்படும் வண்ணம் அமைக்கப்பட்ட திட்டம்தான் ‘‘குஜராத் நீர்வழிச்சாலைத் திட்டம்’’. இந்த நீர்வழிச்சாலைத் திட்டம் சபர்மதி, மஹி, நர்மதா, தபி முதலிய ஆறுகளை இணைகிறது.

கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலையின் ஒரு பகுதியான குஜராத் நீர்வழிச்சாலைத் திட்டம் கடல் மட்டத்திலிருந்து 230 மீ. உயரம் கொண்டதாகவும், அகலம் மற்றும் ஆழம் முறையே 120மீ மற்றும் 10 மீ கொண்டதாகவும் இருக்கும். இத் திட்டத்தால் வருடந்தோறும் கடலுக்கு செல்லும் நீரைத் தேக்கிப் பயன்படுத்த முடியும். இத்திட்ட மானது மிகப்பெரிய மழைநீர் சேகரிப்பு அமைப்பாகும்.

மேலும் இத்திட்டத்தில் எங்குமே நீரேற்றம் செய்ய வேண்டிய அவசியமில்லை. இத் திட்டத்தைச் செயல்படுத்த ஆகும் மொத்தச் செலவு ரூ.40,000 கோடி ஆகும். ஆனால் இதன் மூலம் அரசிற்கு ஆண்டுதோறும் கிடைக்கும் வருமானம் ரூ.5,400 கோடி ரூபாய் ஆகும். இத்திட்டத்தைத் தனியாருடன் இணைந்து 5 ஆண்டுகளில் நடைமுறைப்படுத்த முடியும்.

**குஜராத் நீர்வழிச்சாலையின் பலன்கள் :** குஜராத் நீர்வழிச்சாலைத் திட்டத்தின் மூலம் எதிர்காலத் தண்ணீர்த் தேவையைப் பூர்த்தி செய்யும் அளவிற்குக் குடிநீரைப் பெறமுடியும். இத் திட்டத்தின் மூலம் 2000 மெகாவாட் திறனுள்ள மின்சாரத்தை உற்பத்தி செய்யமுடியும். இத்திட்டம் அமல்படுத்தப்படும் பொழுது 60 லட்சம் ஏக்கர் அளவிலான நிலம் பாசன வசதி பெறும். வருடம் முழுவதும் நடைபெறக்கூடிய 665 கி.மீ. தொலை விலான நீர்வழிச்சாலைப் போக்குவரத்து நடைபெறும். 75 லட்சம் வேலைவாய்ப்பினை பெற முடியும். இத்திட்டம் அமல்படுத்தப்படும் பொழுது சுற்றுலாத்துறை மேம்பாடு அடையும்.

குஜராத் நீர்வழிச்சாலைத் திட்டத்தை நிறை வேற்றும் பொருட்டு, சமீபத்தில் குஜராத்தின் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் ஆலோசகரும், மாண்புமிகு நீர்வளத்துறை அமைச்சர் உமா பாரதி அவர்களின் ஆலோசகரும், தற்போதைய பிரதமரின் முன்னாள் ஆலோசகருமான திரு. நவாலாவாலா அவர்களை நானும், நவாட் டெக் அமைப்பின் இயக்குனரில் ஒருவருமான திரு. ஜெயச்சந்திரன் அவர்களும், லண்டனைச் சேர்ந்த மாரிஸ்வின் அவர்களும் சந்திக்கச் சென்றிருந் தோம்.

அந்நேரத்தில் குஜராத்தின் தண்ணீர்த் தேவையைப் பூர்த்தி செய்யும் பொருட்டு இயற் றப்பட்ட கல்பசார் திட்டத்தைப் பற்றியும் அதில் தேவைப்படும் அதிகப்படியான மின்சாரத்தைப் பற்றியும் திரு. நவாலாவாலா கூறி, இப்பிரச்னை களுக்குத் தீர்வு கூறும்படி கேட்டுக் கொண்டார். மாநிலத்தில் உற்பத்தியாகும் மின்சாரத்தில் பெரும் பங்கு கல்பசார் திட்டத்திற்குத் தேவைப்படுவதால் இத்திட்டத்திற்குத் தீர்வு வேண்டுமென அவர் கருதினார்.

இத்திட்டத்திற்கு மாற்றாக, பலவகையிலும் நன்மை தரும் நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தின் ஒரு பகுதியான குஜராத் நீர்வழிச்சாலைத் திட்டத் தைப் பற்றி முழு விபரங்களையும் கேட்டறிந்தபின், அவர் முதன்மைப் பொறியாளரைச் சந்திக்கும்படி கூறினார். அவர் கூறியது போல முதன்மைப் பொறியாளர் திரு. விவேக் கபாடியா அவர்களைச் சந்தித்து குஜராத் நீர்வழிச்சாலைத் திட்டம் குறித்து முழுவிபரங்களும் கூறப்பட்டது. திட்டத் தின் சாத்தியக்கூறுகளைப் பற்றிப் பொறியாளர் அவர்கள், நன்கு அறிந்ததால் இதிட்டத்தை நிதி அயோக் (திட்டக் குழுவுக்கு) முன்மொழிந்தார். நிதி அயோக் *(Planning Commission)* தற்போது நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தைச் செயல் படுத்தப் பரிசீலித்து வருகின்றது. ●



அஞ்சலிக் கட்டுரை

# விஞ்ஞானி ஸ்டீபன் ஹாக்கிங்

பிரம்ம ரகசியங்களைப் பற்றி இந்தியத் தத்துவ ஞானிகள் எத்தனையோ சிந்தனைகளை வெளியிட்டிருக்கிறார்கள். மறைந்த மாமேதை ஸ்டீபன் ஹாக்கிங் பிரம்ம ரகசியங்களை அல்ல, பிரபஞ்ச ரகசியங்களை வெளியிட்டுப் பிரமிக்க வைத்தவர்.

ஞானச் சிசுவாகப் பிறந்த ஸ்டீபன் ஹாக்கிங் தனது 21–ஆவது வயதில் சந்தித்த சோதனை, உலகத்தில் யாரும் சந்தித்திராத சோதனை. 65 வயது மாமேதை மார்க்ஸ் அவர்களுக்கு மரணத்தைச் சம்பவித்த நோய், நுரையீரல் வீக்கம் (Pluracy) நோயாகும்.

மார்க்சுக்குச் சமமான இந்த விஞ்ஞான மேதைக்கு நிலநடுக்கத்தில் கட்டடங்கள் இடிந்து விழுவதைப்போல இவருடைய நரம்பு மண்டலமே சிதைவுற்றது. இதனை அவருடைய வார்த்தைகளையே இரவல் வாங்கிச் சொல்வதென்றால், அந்நோய் 'கருங்குழியில்' இவரைத் தள்ளிவிட்டது.

இந்த மாமேதை கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் மாணவராக இருந்து, பேராசிரியரானவர். இவரே ஒரு பல்கலைக்கழகம். இவருக்குக் கீழ்தான் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம் என்றால் அது மிகையல்ல.

நரம்பு மண்டலம் கழுத்துவரை நாசமாக்கப்பட்டதால் தவித்த இந்த மனிதனின் மூளை, உலகத்தையே புரட்டிப் போட்டது. விஞ்ஞான உலகம் வியந்து போனது. மெய்ஞ்ஞான உலகத்தில் போப்பாண்டவரே மிரண்டு போனார்.

தத்துவங்களைத் தலைச்சுமையாய்த் தூக்கிக்கொண்டு அவர்கள் அலைந்து திரிந்ததைப் பார்த்து சீக்காளி ஹாக்கிங் கால் சிரிக்க முடியவில்லை.

ஸ்டீபன் ஹாக்கிங் பேச முடியாதவர். நடக்க முடியாதவர். நம்மைப் போல் சாப்பிட முடியாதவர். இப்படி இருந்தும் அவர் நம்மைவிட அதிகமாகச் சிந்தித்தவர். நியூட்டன், ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் இடங்களை இட்டு நிரப்பியவர்.

அத்தகைய மாமேதை பிரபஞ்ச ரகசியத்தை அறிவதற்காக CERN எனும் ஆராய்ச்சிக்கூடத்தை பிரான்ஸ் – சுவிட்சர்லாந்து எல்லையில் 10 ஆயிரம் விஞ்ஞானிகளுடன் ஜெனீவாவில் நிலத்திற்குக் கீழே 27 கி.மீ. சுற்றளவில் நிறுவியவர்.

அந்தப்பணி இன்னும் முடிந்து விடவில்லை. அது நிறைவேறுகிறபொழுது இந்தப் பூமிக்கோளம் மட்டுமல்ல, சூரியக் குடும்பத்தின் கோளங்களை மட்டுமல்ல, எத்தனையோ சூரியக்

குடும்பங்களையும் – சுருக்கமாகச் சொன்னால் – இந்த அண்டவெளி முழு வதையும் பற்றிய அறிவு நமக்குக் கிடைத்துவிடும். இனி அதை யார் கிடைக்கச் செய்யப் போகிறார்களோ? கடவுளுக்குத்தான் தெரியும் என்று சொல்லலாம் என்றால், ஸ்டீபன் ஹாக் கிங்கோ 'கடவுளா? யார் அவர்?' என்று கேட்கிறார்.

இவர் என்ன பெரியாரைப் போல நாத்திகரா என்றால், பெரியாரையும் விட நாத்திகர் என்றுதான் அவருடைய வரலாறு சொல்கிறது. பெரியாருக்கு இவரைப் பற்றி எதுவுமே தெரியாம லேயே போய்விட்டது. அவருடைய புகழ் பெற்ற புத்தகம் 'காலம் ஒரு சுருக்க வரலாறு' (A Brief History of Time) இதனைத் தெளிவுபடுத்துகிறது.

இவரைப்பற்றி அருள்நிதி டாக்டர் ஜி. அழகர் ராமானுஜம் 'மூலத்தைத் தேடும் முதன்மை விஞ்ஞானி : ஸ்டீபன் ஹாக்கிங்' என்று ஒப்பற்ற ஒரு தொடர் கட்டுரையை 2006–இல் 'ஓம் சக்தி'யில் எழுதி வந்தார். அதில், ஸ்டீபன் ஹாக் கிங் அவர்களின் பிரபஞ்சம் மற்றும் கடவுள் பற்றிய கருத்துக்களை அலசி அலசிப் பதிவு செய்துள்ளார். டாக்டர் அழகர் கொடுத்ததை அப்படியே மறு பிரசுரம் செய்துள்ளோம்...

"கடவுள் என்ற கருத்துப் பற்றிய தனது விமர்சனத்தை ஹாக்கிங் தவிர்க்க முடியவில்லை. இந்த தர்மசங்கடத்தைப் பற்றி ஹாக்கிங் கூறியது : "It is difficult of discuss the beginning of the universe without mentioning the concept of God. My work on the origin of the universe is on the borderline between science and Religion, but I try to stay on the scientific side of the border."

விஞ்ஞானத்தின் பக்கம் நின்று, கடவுளைப் பற்றி இவர் கூறிய சில கருத் துக்கள் பெரிய புயலையே உருவாக்கின. ஹாக்கிங் பேசுகிறார் : "கடவுள் பற்றி எனக்குத் தெரியாது"; "கடவுள் இருக்க லாம்", "விஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்ட தால் எனக்கும் அதற்கும் சம்பந்த மில்லை" என நெத்தியடியாக விமர்சிக் கிறார்.

கடவுளைப் பற்றி மேலும் கேட்ட போது, நிறுத்தி நிதானமாக ஹாக்கிங் கூறியது : "அப்படியெல்லாம் ஒருவரு மில்லை; அவருக்கு இங்கு வேலையு மில்லை; அப்படியொருவர் அவசியமு மில்லை" என்றார்.

ஆரம்பத்திலிருந்து இன்றுவரை பிர பஞ்சத்தின் வளர்ச்சியை "அக்குவேறு ஆணி வேறாக" எடுத்துரைத்த 'பெரும் வெடிப்புக்' கொள்கையில், கடவுளைப் பற்றிச் சொல்லவில்லையே! கடவுள் இல்லாத பிரபஞ்சமா? உயிரினமா? எனக் கலங்கிப் போனார்கள் மதத் தலைவர்கள்.

இப்படியே விட்டுவிட்டால் கதை கெட்டுவிடும் என்று சொல்லி, வாடிகன் நகரில் போப் ஆண்டவரும் விஞ் ஞானிகளும் சந்திக்க ஏற்பாடு செய்யப் பட்டது. அதில் போப்பும் ஹாக்கிங்கும் கலந்து கொண்ட உரையாடல்...

**போப் : கோளம் வெடித்துப் பிரபஞ்சம் தோன்றிய பரிமாணத்தைப் பேசுகிற உங்கள் கோட்பாட்டில், "What place you have assigned for God?"**

**ஹாக்கிங் :** In my theory, there is no place for God! முற்காலத்தில் மழைக்கென்று ஒரு கடவுளையும், புயலை உற்பத்தி செய்ய ஒரு கடவுளையும், நோய் வந் தால் அதையும்கூடக் கடவுளின் தண்ட னையாகவே கருதினோம். ஆனால் அப் போதெல்லாம் எங்கோ உட்கார்ந்து கொண்டு எல்லாச் செயல்களையும் கட வுள்தான் செய்து கொண்டு வருகிறார் என்று நம்பினோம். In those days, God was full of jobs; but now we have made God increasingly jobless!

கனத்த மௌனத்திற்குப் பிறகு உரை யாடல் தொடர்கிறது!

**போப் : கோளம் வெடித்ததாகச் சொல் கிறீர்களே! கோளத்தை வெடிக்கச் செய் தது யார்? Who caused the Big Bang?**

நிதானமாக வருகிறது பதில்.

**ஹாக்கிங் :** Perhaps there, to cause the Big bang, We may require God!

தொடர்ச்சி : 94–ம் பக்கம்

நேர்காணல்

விவசாயிகளுக்கு வேளாண்மைத் தொழிலுடன் துணைத்தொழிலாக இருப்பது பால் தரும் கால்நடைகள் வளர்ப்பு. பால் பண்ணைத் தொழிலையே தனியாக நடத்துபவர்களும் பலர் இருக்கிறார்கள். ஒரு மாடு இருந்தாலும், பல மாடுகள் இருந்தாலும் அவற்றை முறையாகப் பராமரிக்காவிட்டால் அவற்றைப் பல நோய்கள் தாக்கும் ஆபத்துக்கள் இருக்கின்றன.

அப்படிப்பட்ட ஆபத்தான நோய்களில் ஒன்று மாடுகளுக்கு வரும் மடி நோய். இந்த மடிநோயைக் கவனிக்காவிடில் பெரும் இழப்புகள் ஏற்படும் வாய்ப்புகள் உள்ளன.

இந்நோயைப் பற்றியும், இதனைத் தடுக்கும் முறைகளைப் பற்றியும், நோய் வந்தால் செய்ய வேண்டிய மருத்துவ முறைகளைப் பற்றியும் அறிய, கோவை சரவணம்பட்டியிலுள்ள தமிழ்நாடு கால்நடை மருத்துவ அறிவியல் பல்கலைக்கழகப் பயிற்சி மையத்தின் இணைப் பேராசிரியர் மற்றும் தலைவர் டாக்டர் க. சிவக்குமார் அவர்களை அணுகினோம். அவர் அளித்த பேட்டி...



# மாடுகளைத் தாக்கும் மடிநோய்

**கேள்வி : மாடுகளுக்கு வரும் மடிநோய் பற்றிக் கூறுங்கள்...**

**பதில் :** மாட்டிற்கு அது பால் தரும் மடி மிகவும் முக்கியமான உறுப்பு ஆகும். நம் முன்னோர் மாட்டின் மடியில் பல்வேறு கடவுள்கள் இருப்பதாக நம்பி வணங்கினர். மடிநோய் வந்தால், மடி சூடாகி, மடியில் உற்பத்தியாகும் பால் திரி திரியாகத் தயிர் போல் ஆகி, கடைசியில் ரத்தம் கலந்த சீழ் வடிந்து அந்த மடி பாகம் கல் போன்று ஆகிவிடும்.

**கேள்வி : மடி நோய் வருவதற்கான காரணங்கள் என்னென்ன?**

**பதில் :** இதற்கு முழுக்க முழுக்கக் காரணம் நோய்க்கிருமிகள்தான். பாக்டீரியா, வைரஸ், பூஞ்சை நச்சு எனப் பல்வேறு வகையான கிருமிகளால் மடிநோய் வருகின்றது. மடியில்தான் பால் உற்பத்தியாகிறது. இந்தப் பால், நோய்க்கிருமிகளுக்கு நல்ல உணவாக இருப்பதனால், பால் உற்பத்தியாகும் இடத்தில் இந்த மடி நோய் வருகிறது.

மடி என்பது பஞ்சு போன்ற திசுக்களாலானது. மிகவும் எளிதில் நோய் தொற்றிக் கொள்ளும் வாய்ப்புள்ளது. மடியிலுள்ள நான்கு காம்புகளும் நான்கு அறைகளைக் கொண்டவை. அந்தந்தக் காம்பின் வழியே நோய்க்கிருமிகள் உள்ளே சென்றால் அந்தந்த அறையில் நோய் வருவதற்கு வாய்ப்புண்டு.

மடிநோய் வருவதற்கு முக்கியமான காரணம் மாடு அல்ல, நாம்தான். பொதுவாக மாட்டுக் கொட்டகையின் சுகாதாரம் முக்கியம்.

முற்காலத்தில் மாடுகளிடம் பால் கறந்த பின், மாட்டுக் கொட்டகையிலிருந்து இடத்தை மாற்றி, மரத்தடியிலோ, வேறு இடங்களிலோ கட்டி வைப்பர். காற்றோட்டமுள்ள, உலர்ந்த இடத்தில் மாடுகள் கட்டி வைக்கப்படும்போது மடிநோய் வருவதில்லை.

தற்போது, மாட்டுப் பண்ணைகளில் அதிக எண்ணிக்கையிலான மாடுகள் ஒரே கொட்டகை யிலேயே கட்டி வைக்கப்படுகின்றன. அந்தக் கொட்டகையின் சுகாதாரம் மிகவும் முக்கியம்.

மாடுகளுக்கு மண்தரைதான் நல்லது, காரை கடினமானது என்ற கருத்து விவசாயிகளிடம் பொதுவாக உள்ளது. ஆனால், மண்தரையைப் பொறுத்த அளவில், அங்கே மாட்டின் சாணம், சிறுநீர், மாட்டின் மடியைக் கழுவும் தண்ணீர் முதலியன தரையிலேயே படிந்து ஈரமான சூழ் நிலையிலேயே இருக்கும்.

அந்த இடத்திலேயே மாடுகள் படுக்கும் போது, அந்தச் சகதியில் உற்பத்தியாகும் கிருமி கள் மாடுகளின் காம்பு வழியே உட்சென்று மடி நோயை உண்டாக்குகின்றன. மாட்டு மடியின் சுகாதாரம் மிகவும் முக்கியம். இந்த மடி நோய் என்பது, மாட்டின் மடியில் பால் தங்குவதாலும் வருகிறது.

அடுத்து, பால்காரர் பால் கறப்பது.



டாக்டர் க. சிவக்குமார்

பால்காரருக்கு அவருடைய எண்ணம் பால் கறந்து எடுத்துக்கொண்டு போய் அதனை விநியோகிப் பதிலேயே இருக்கும். மடிகளைக் கழுவிச் சுத்தம் செய்வது பற்றிய எண்ணம் குறைவாகவே இருக் கும். அவர்கள் மடியைக் கழுவிப் பால் கறப் பதில்லை. மடியில் தண்ணீர் தெளித்து, பால் சுரந் ததும் கறக்கத் தொடங்குவார்கள். கைகளைச் சோப்புப் போட்டுச் சுத்தமாகக் கழுவாமல் வெவ்வேறு இடங்களில் உள்ள மாடுகளிடம் சென்று பால் கறந்து வரும்போது, ஏதே னும் ஓரிடத்தில் உள்ள மாட்டிடமிருந்து நோய்க் கிருமிகள் அவரது கைகள் மூலமாக மற்றோரிடத்தில் உள்ள மாடு களுக்கும் பரவும் வாய்ப்புள்ளது. மடி நோயைப் பரப்புவதற்கு அவர்களும் காரணமாகலாம்.



பால் மடியில்
பொட்டாசியம் பர்மாங்கனேட்
தெளிப்பு

மாட்டின் உரிமையாளரே தங்கள் கைகளையும் நன்கு கழுவி, மாட்டின் மடியை நன்கு கழுவிப் பால் கறந்தால் மடி நோய் வருவதில்லை.

பல இடங்களில் காளைக்கன்றுகள் ஈன்றால், அவற்றை ஒரு வாரத்திலேயே விற்று விடு கிறார்கள். கன்றுகளே இல்லாமல் கைகளில் பால் கறக்குமிடத்தில் மடிநோய் வருகின்றது. பெண் கன்றுகள் இருக்குமிடத்தில் அவர்கள் பால் கறந்த பின் கன்றுகளுக்கும் கொஞ்சம் பால் ஊட்ட விடு கிறார்கள். அவை மடியிலுள்ள பாலை முழுமை யாகக் குடித்து விட்டால், பால் தேங்காமல் முழுமையாக வெளியேறும். இதனாலும் மடிநோய் வருவதில்லை.

எனவே, மடிநோய் வராமல் தடுக்க வேண்டு மானால், அந்த மடியில் பால் தங்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பால் கறக்கத் தொடங்கும் போது பால் அதிகமாக இருப்பதால் கறப்பதற்கு

எளிதாக இருக்கும். கடைசியாகும்போது அதிக அழுத்தம் கொடுக்க வேண்டியிருக்கும். அதில் ஒரே மாதிரி சீரான அழுத்தத்தில் கறக்க முடியும்.

பால் கறவை இயந்திரம் நல்ல தொழில் நுட்பம். அதில் நன்கு பால் கறக்கலாம். அதனை முழுமையாகப் பயன்படுத்திக் கறக்காவிட்டாலும் மடிநோய் வரும். இயந்திரத்தில் கறக்கும்போது கடைசி நேரத்தில் சற்று அழுத்தம் கொடுத்தால் முழுமையாகக் கறந்துவிட முடியும். பால் கறவை இயந்திரத்தை முறையாகப் பயன்படுத்தினால் மடிநோய் வராது.

**கேள்வி : இயந்திரத்தில் முழுமையாகக் கறந்து விட்டால் கன்றுக்குப் பால் இருக்காதே?**

**பதில் :** கன்றுக்குட்டிகளுக்கு அவற்றின் உடல் எடைக்குத் தகுந்தவாறு பாலூட்ட நாம் விடுவதில்லை. கன்றின் உடல் எடையில் 10 சதவீதம் பால் குடிக்கவிட வேண்டும். எனவே, இயந்திரத்தில் பாலைக் கறந்து, அதை அதற்கென்று உள்ள புட்டியில் தரலாம். அது சரி யாகக் கொடுக்க உதவியாக இருக்கும். அல்லது வாயகன்ற பாத்திரத்தில் பாலை ஊற்றியும் குடிக்க வைக்கலாம். ஓரிரு நாள்களில் இதனைப் பழக்கி விடலாம்.

**கேள்வி : மடிநோய் வராமல் தடுக்கும் வழிமுறை கள் என்னென்ன?**

**பதில் :** மாடுகளிடம் பால் கறந்து முடித்த பின், காம்புகளின் துளைகள் அரை மணி நேரம் திறந்திருக்கும். எனவே, பால் கறந்த உடனே மாட்டினைத் தரையில் படுக்க விடக்கூடாது. தரையில் சேறு, மாட்டின் சிறுநீர், சாணம் என எத்தனையோ அசுத்தங்கள் இருக்கும். எனவே, படுக்குமிடத்தில் அசுத்தமிருந்தால் அங்குள்ள கிருமிகள் எளிதாகப் பால்காம்பின் துளைகள் வழியாக மடிக்குள் புகுந்து விடும்.

எனவே, மாட்டைப் பால் கறந்தவுடன் இடத்தை மாற்றிக் கட்டலாம். அல்லது மாடு படுக் காமலிருக்க அவற்றின் எண்ணங்களைத் திசை திருப்பும் வகையில் தீவனம் தந்தால், அவற்றைத் தின்றுகொண்டு படுக்காமல் இருக்கும்.

மாடுகளுக்கு வழுக்காத வகையில் சொர சொரப்பான சிமெண்ட் காரையிலான தரையைச் சாய்வாக அமைத்து விட்டால், மாட்டின் சிறுநீர், மடி கழுவும் தண்ணீர் முதலியன அங்கிருந்து வெளிவந்து விடும். தரையைக் கழுவினாலும் விரைவில் உலர்ந்து தூய்மையாகி விடும்.

மாடு கன்று ஈன்று, மீண்டும் சினையான 7 மாதங்கள் கறப்பிற்குப் பின் கறப்பை வற்ற வைப் பார்கள். கறப்பைச் சிறிது சிறிதாகக் குறைத்துக் கடைசி வேளை பால் கறப்பை நிறுத்தியபின் ஒரு வாரத்திற்கு அந்த மாட்டின் காம்புத் துளைகள் திறந்தே இருக்கும்.

அந்த ஒரு வாரத்தில் அசுத்தமான சூழ்நிலை யில் மாடு படுக்க நேர்ந்தால், கிருமிகள் மூலம் மடிநோய் வரும் வாய்ப்புள்ளது. எனவே அதற்கு Dry Cow Therapy என்னும் மருத்துவ முறையில் நான்கு காம்புகள் வழியாக மருந்தினைச் செலுத்தி, அந்தத் துளைகளை மூட வைக்கலாம். இதனால் கிருமிகள் உள்ளே செல்லாது.



மடி நோய் வந்த பால்மடி

மடிநோய் வந்த பாலை மாடு கட்டி யிருக்குமிடத்திலேயே கறந்து கீழே விட்டு விடக்கூடாது. நோய் தாக்கிய காம்பி னைத் தொட்டுவிட்டு, அம்மாட்டின் பிற காம்புகளையோ, வேறு மாட்டின் காம்பு களையோ கைகளைச் சுத்தமாகக் கழுவாமல் தொட்டால், அவற்றிற்கும் இந்நோய் பரவிவிடும்.

தாது உப்புக் கலவையில் 'செலி னியம்' என்று ஒரு தாதுச்சத்து உள்ளது. இந்தச் செலினியம் மடியின் திசுக்களுக்கு நல்ல வலிமையைக் கொடுக்கிறது. எனவே, தாது உப்புக் கலவையை நாளும் தீவனத்துடன்

கலந்து கொடுத்து வந்தால் மடிநோய் வரும் வாய்ப்புக் குறையும்.

பொதுவாகவே நாள்தோறும் பால் கறந்தபின் பொட்டாசியம் பர்மாங் கனேட் கலந்த நீரில் மடியைக் கழுவி வந்தால் கிருமிகளின் தாக்குதல் இருக்காது.

உள்நிலை மடிநோய் என ஒன்று உள் ளது. பால் நன்றாக இருந்தாலும், உள்ளே இருந்து மடிநோயைக் கிருமிகள் உண்டாக்கும். இந்த நோயின் ஆரம்பநிலையில் அந்தப் பாலைக் குடித்துப் பார்த்தால், அந்தப் பால் உப்புக் கரிக்கும். இது ஒரே மாட்டின் பால் என்றால் கண்டுபிடிக்க முடியும். பல மாடுகளின் கலப்புப் பாலென்றால் கண்டுபிடிக்க இயலாது.



காரமடை ஒன்றியத்தில் மடிநோய் தடுப்புச் செயல்விளக்கக் கூட்டம்

இந்த ஆரம்பநிலை மடிநோயை விவசாயிகள் எளிதாகக் கண்டுபிடிக்கலாம். முற்றிய நிலையில் மடிநோய் வந்து அதற்குச் செலவு செய்வதைவிட, தொடக்க நிலையிலேயே அதைக் கண்டுபிடிக்க, ''கலிஃபோர்னியா மடிநோய் கண்டறியும் சாதனம்'' என்னும் கருவி உள்ளது.

இதில் நான்கு காம்புகளிலும் இருக்கும் பாலைத் தனித்தனியே எடுத்து இக்கருவியில் வைத்து, அவர்கள் கொடுத்திருக்கும் ஒரு திரவத் தைச் சேர்த்துக் கலக்கும்போது, 20 விநாடிகளில் பால் பாலாகவே இருந்தால் அந்தக் காம்பு மடி சுத்தம். அப்படியில்லாமல் பால், சளி மாதிரி, கூழ் மாதிரி ஆயிற்றென்றால், அந்தப் பாகத்தில் தொடக்கநிலை மடிநோய் இருக்கிறதென்று பொருள்.

எனவே, மாடுகளை வைத்திருப்போர் இக்கருவியை வாங்கி வைத்துக்கொண்டு 15 நாட்களுக்கொருமுறை சோதித்துப் பார்த்துக்கொண்டால், இந்த நோயைத் தொடக்க நிலையிலேயே கண்டறிந்து, முற்றாமல் தடுக்கலாம்.

**கேள்வி : இந்த மடிநோய்க்கு நாட்டு மருந்து உண்டா?**

**பதில் :** இதற்கென அருமையான ஒரு மரபுவழி மருந்து உள்ளது. அதற்குக் கால் கிலோ சோற்றுக் கற்றாழையைத் தோலைச் சீவாமல் சிறிது சிறிதாக நறுக்கிவிட வேண்டும். அத்துடன் 150 கிராம் மஞ்சள், 50 கிராம் சுண்ணாம்பு இரண்டையும் சேர்த்து அரைத் தால் சிவப்பு நிறத்தில் ஒரு கூழ்ம மருந்து கிடைக் கும். பின்னர் மாட்டின் மடி முழுவதையும் நன்கு கழுவி, நான்கு காம்புகளிலும் இருக்கின்ற பால் முழுவதையும் கறந்து விட்டு, அந்த ஈரமான சூழ்நிலையிலேயே இம்மருந்தை ஒரு கையளவு எடுத்து 2 தம்ளர் தண்ணீரில் கரைத்து அதை மடியில் மேலிருந்து கீழாக நன்கு தேய்த்து விட வேண்டும்.

இப்படி ஒரு நாளைக்குக் குறைந்தது 5 முதல் 6 முறை தேய்த்துவிட வேண்டும். ஒவ்வொருமுறை மருந்தைத் தேய்க்கும்போதும் மடியை நன்கு கழுவி, பாலை முழுமையாகக் கறந்துவிட வேண் டும். கடைசி முறையில் தண்ணீருக்குப் பதில் 2 தம்ளர் நல்லெண்ணெயில் கரைத்துத் தேய்க்க வேண்டும்.

இப்படிச் செய்தால், மடிநோய் அதன் தீவிரத்



மாட்டுப் பண்ணையில் மடிநோய் ஆய்வு...

தைப் பொறுத்துக் குணமாகும். 5 நாள்களில் பெரும்பாலும் நோய் தீர்ந்துவிடும். இந்த மருத்துவ முறையைப் பல விவசாயிகளுக்குச் சொல்லிக் கொடுத்து, 2 நாள்களிலேயே கல் போன்றிருந்த காம்புகள் பஞ்சுபோல் ஆகி, நல்ல பால் கிடைத்த தைப் பார்த்திருக்கிறோம்.

**கேள்வி : மாடுகள் வளர்ப்போரிடம் மடிநோய் பற்றிய விழிப்புணர்வை எந்த அளவிற்கு ஏற்படுத் தியுள்ளீர்கள்?**

**பதில் :** மாடுகள் வளர்ப்போரைப் பொறுத்த அளவில், மடிநோய் வந்தபின் மருத்துவம் செய் வதைவிட, வருமுன் தடுப்பதுதான் மிகவும் முக் கியம். இதற்காகக் கோவை மாவட்டத்தின் ஒவ் வோர் ஒன்றியத்திலும் 20–க்கும் மேற்பட்ட மாடு கள் வைத்துள்ளவர்களை அழைத்து அவர் களுக்குச் செயல்விளக்கக் கூட்டங்கள் நடத்தி விழிப்புணர்வை ஏற்படுத்தி வருகிறோம். எங்கள் பயிற்சி மையத்தின் உதவிப் பேராசிரியர்கள் டாக்டர் அ. அருள்ஜோதி, டாக்டர் பெ. நித்யா ஆகியோர் இப்பணியைச் சிறப்பாகச் செய்து வரு கிறார்கள். இங்கு வரும் விவசாயிகளிடமும் இது பற்றி விளக்கி வருகிறோம்.

கோமாரி நோயைத் தடுக்க அரசின் சார்பில் ஆண்டிற்கு இருமுறை கால்நடைகளுக்குக் கோமாரி நோய்த் தடுப்பூசிகள் போடப்படுகின்றன. அதற்கு அடுத்ததாகப் பொருளாதார இழப்பை அதிகம் கொடுக்கக்கூடியதும், நாம் தடுக்க வேண்டியதுமான நோய் மடிநோய்தான். ஒவ் வொரு விவசாயியும் அதனைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். இது மாடுகளால் வருவதல்ல, நம்மால், மாடுகளின் மேலாண்மையில் நமது கவனக் குறைவினால், சரியான பராமரிப்பு, சுத்தம் இல்லாததால் ஏற்படுகிறது.

**கேள்வி : இந்த நோய் நம் நாட்டு மாடுகளுக்கு வருவதில்லையா?**

**பதில் :** நாட்டு மாடுகளுக்கும் வரும். ஆனால் கலப்பின மாடுகளை அதிகம் பாதிக்கிறது. கறவை மாடுகள் வைத்துள்ள விவசாயிகளின் பிரச்சனைகளை கடந்த நான்கைந்து ஆண்டு களாக ஆய்ந்து பார்க்கும்போது, 12 லிட்டருக்கு மேல் கறக்கும் கலப்பின மாடுகளுக்கு மடிநோய் வருவதற்கான வாய்ப்புகள் அதிகமாக இருப்பது தெரிய வந்துள்ளது.

**கேள்வி : இந்த நோயினால், மாட்டிற்கு, கன்றிற்கு, பால் அருந்தும் நமக்கு என்னென்ன பாதிப்புகள் ஏற்படும்?**

**பதில் :** இந்த நோயைப் பொறுத்தவரை, மாட் டிற்கு மடிநோய் வந்தால், மாட்டின் பால் உற்பத்தி குறையும், மடியின் திசுக்கள் பாதிக்கப்படும். நோய் மிகவும் தீவிரமானால், மாடுகள் உயிரிழக்கவும் நேரும். கன்றுகளுக்குப் பிரச்சனையில்லை. ஆனால், மடிநோய் தாக்கிய பாலைக் கன்றுகள் குடிக்காமலிருப்பது நல்லது. நாம் நன்கு காய்ச்சிக் குடிப்பதனால் நமக்குப் பாதிப்பு ஏற்படுவதில்லை. நோய் முற்றியபின் பால் நமக்கு ஏற்றதாக இருக் காது.

**கேள்வி: இந்நோயினால் பால் சுரப்பது குறையுமா?**

**பதில் :** உறுதியாகக் குறையும். முழுமையாகப் பால் வற்றிப்போகும் சூழ்நிலையும் ஏற்படும்.

**கேள்வி : இதற்கென்று முன்கூட்டியே போடப்படும் தடுப்பூசி உள்ளதா?**

**பதில் :** இது ஒரு நோய்க் கிருமியினால் வரும் நோய் அல்ல. பாக்டீரியா என்னும் நுண்ணுயிரியி னாலும், வைரஸ் எனப்படும் நச்சுயிரியினாலும், பூஞ்சைகளாலும் வருகிறது. எனவே, எந்தக் காரணியினால் இந்நோய் வருகிறது என்பது தெரியாத சூழ்நிலையில், மடிநோய்க்கான எல்லாக் காரணிகளுக்குமாகச் சேர்த்து ஒரு தடுப்பூசி இல்லை. எனவே, மடிநோய் வராமல் தடுத்துக் கொள்வது நல்லது. அல்லது வந்தபின் மருத்துவம் செய்யவேண்டும். எந்தப் பண்ணையில் மடிநோய் இருக்கிறதோ, அந்தப்பண்ணை லாபகரமாக நடக் காது என்பது உறுதி.

**கேள்வி : இந்நோய் மாடுகளுக்கு மட்டும் வருமா அல்லது எருமைகள், ஆடுகளுக்கும் வருமா?**

**பதில் :** இந்நோய் எருமைகளுக்கும், வெள் ளாடுகளுக்கும் வரும். அதிகப் பால் தரும் மாடு களுக்கே பெருமளவில் வருகிறது.

**கேள்வி : மாடுகளின் மடியில் கொப்புளங்களாக வரும் நோயும், மடிநோயும் ஒன்றா?**

**பதில் :** மடிநோய் வேறு, கொப்புளங்கள் வேறு. இரண்டுமே சுகாதாரமற்ற நிலையில் வரு பவைதான். கொப்புளங்களுக்கு எளிமையான மருத்துவ முறை உண்டு. அகத்தி இலைகளை நெய்யில் வேகவைத்து, அதை ஒரு தூய்மையான துணியிலிட்டுப் பிழிந்து அந்த நெய்க்கலவையைத் தனியே வைத்துக்கொண்டு, அதை மடியிலும், காம்பிலும் தடவினால் இந்தக் கொப்புளங்கள் வராது.

டாக்டர் க. சிவக்குமாரின் தொடர்பு எண் : 0422 2669965.

பேட்டி :
**இரா. வேணுகோபாலகிருஷ்ணன்**

ஆன்மிகம்

ஆலய நுழைவுவாயில்

# திருப்புட்குழி விஜயராகவப் பெருமாள் திருக்கோவில்

தமிழ்நாட்டிலுள்ள தொண்டை நாட்டுத் திருப்பதிகளில் காஞ்சிபுரத்தைச் சுற்றிப் பதினைந்து திவ்ய தேசங்கள் உள்ளன. அவற்றில் திருப்புட்குழி வைணவ ஆலயம் பல சிறப்புகளைப் பெற்றது. தொண்டைநாட்டுத் திருப்பதிகளில் ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்ட ஆலயங்கள் 22. அந்த ஆலயங்கள் அனைத்தையும் மங்களா சாசனம் செய்தவர் திருமங்கை ஆழ்வார்!

**ஆலய அமைவிடம்** : திருமங்கை ஆழ்வாரால் 'புலங்கெழு பொருநீர்ப் புட்குழி' என்று புகழப்பட்ட திருப்புட்குழி ஆலயம் சென்னை – பெங்களூரு தேசிய நெடுஞ்சாலையில் காஞ்சிபுரத்திற்கு மேற்கே பாலுசெட்டிச் சத்திரம் என்ற ஊருக்குத் தெற்கே அமைந்துள்ளது. "சித்தன மேலி திருப்புட்குழி நாயனார் கோயில் போறேற்றுப் பெருமாள் கோயில்" என்று புகழப்படும் அத்திருக்கோயிலின் மதில்சுவர், உட்பிரகாரம், கோபுரங்கள், திருக்குளம் ஆகியவை ஆலயத்திற்குப் பெருமை சேர்கின்றன.

**ஆலயம் அமைந்த வரலாறு** : மாரீசன் என்ற மாயமானை இராமரும் இலக்குவனும் தேடிச் சென்றபோது பர்ணசாலையில் இருந்த சீதையைக் கவர்ந்து செல்ல இராவணன் துறவி வேடத்தில் வந்தான். இருவருக்கும் இடையே சொற்போர் நிகழ்ந்தது. தன்

என்.ஆர். ஜெயசந்திரன்

வேடத்தைக் கலைத்துச் சுயரூபத் துடன் அவளை அணுகினான். சீதை அலறினாள். இராமனும் இலக்கு வனும் தன்னருகே இல்லாத நிலையில் மாயையால் வஞ்சமான் ஒன்றை அனுப்பி அவர்களை அப்பால் வெளியே அனுப்ப வைத்துவிட்டு, இழிவான செயல்களைச் செய்யத் துணிந்தாயே என்று கதறினாள். அவனோ சீதையோடு பர்ணசாலை யையும் பெயர்த்தெடுத்துத் தேர்த் தட்டில் வைத்துத் தேர்ப் பாகனுக்கு ஆணையிட, தேர் எழுந்து வானில் பறந்தது.




வானில் பறந்து செல்லும் தேரில் சீதையோடு இராவணன் செல்வதைக் கண்ட சடாயுவிற்கும் இராவணனுக் கும் போர் மூண்டது. இராவணன் சங்கரன் கொடுத்த" சந்திரஹாசம்" வாளால் சடாயுவின் இறக்கைகளை வெட்டிக் கீழே விழ வைத்தான்.

சீதையின் பிரார்த்தனை பலித்த துடன் கீழே விழுந்து உயிரைப் பிடித் துக் கொண்டிருந்த சடாயுவை இராம பிரான் கண்டார். "இராமா! நீ நீடூழி வாழ்வாய். இராவணனைக் கொன்று சீதையை மீட்பாய்" என்று ஆசீர் வதித்து நடந்தவற்றைக் கூறி, மர ணத்தை எதிர்நோக்கும் தனக்கு ஈமக் கிரியைகளைச் செய்ய வேண்டும், ஸ்ரீதேவி, பூதேவியுடன் காட்சி தந்து அருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டே உயிர்விட்டார்.

சடாயுவின் உயிர்த் தியாகம் இராமனை நெகிழ வைத்தது. தனக்கு உதவியவர்கள் எவரும் இறந்ததில்லை. ஆனால், சடாயு தனக்காக உயிர் விட் டிருக்கிறார். அதனால் தன் தந்தை யான தசரதனுக்குச் செய்ய முடியா மல் போன ஈமக் கிரியைகளைச் செய்ய வேண்டும் என்று எண்ணி னார். சடாயுவின் வேண்டுகோளுக் கிணங்க உயிர்விட்ட சடாயுவைத் தனது வலது தொடையில் வைத்துத் தீமூட்டி ஈமக்கிரியைகளைச் செய்தார்.

பின்னர் தன் கையில் இருந்த தனுஷ்கோடி அம்பினால் பூமியைக் கீறி, வருண ஜபத்தைச் சொல்லி கங்கையை வரவழைத்து, இளைய பெருமாளோடு அந்தத் தீர்த்தத்தில் நீராடி, பெரிய உடையார் என்று அழைக்கப்படும் சடாயுவிற்குத் தர்ப்பணம் செய்தார். பேரின்பம் தரு பவனும், பெருவீடு அளிப்பவனுமான ஸ்ரீராமபிரான் சடாயுவின் வேண்டு தலுக்கிணங்க, ஸ்ரீவிஜயராகவப் பெரு மாளாகக் காட்சித் தரும் ஆலயம்தான் திருப்புட்குழி!

**புள்ளம் பூதங்குடி வைணவ ஆலயம்** : 108 திருப்பதிகளில் சோழ நாட்டில் உள்ள புள்ளம் பூதங்குடி என்ற பெயருள்ள திவ்ய தேசத்திற்கும், திருப்புட்குழிக்கும் அமைந்த வரலாறு ஒரே மாதிரியாக உள்ளது. சடாயுக்கு மோட்சம் அளித்த வரலாறு இந்த இரண்டு ஆலயங்களிலும் ஒரே மாதிரி யாகத்தான் உள்ளது.

புள்ளம் பூதங்குடியில் உள்ள பெரு மாளுக்கு 'வல்வில் ராமன்' என்று பெயர். திருப்புட்குழியில் உள்ள பெரு மாளின் பெயரோ விஜயராகவப் பெருமாள். இராமனுக்கு விஜய

ராகவப் பெருமாள் என்ற பெயர் இராவண வதத்திற்குப் பிறகுதான் சூட்டப்பட்டது.

புள்ளம் பூதங்குடிப் பெருமாளை திருமங்கை ஆழ்வார் "வல்வில் ராமன்" என்றே குறிப்பிடுகிறார். புள்ளம் புதங்குடியில் சடாயுவிற்கு அந்திமக் கிரியைகள் செய்யும்போது தன் பக்கத்தில் துணைவியார் இல் லையே என்று ராமன் நினைக்கும் போது பூதேவியே பிராட்டியாக வந்தார். ஆனால், திருப்புட்குழியில் இராமர் சடாயுவிற்கு அந்திமக் கிரி யைகள் செய்யும்போது இராமாய ணத்தைக் கவனித்தால் சீதாப்பிராட் டியார் இலங்கையில் இருந்தார். அப் படிப்பட்ட சூழ்நிலையில் திருப்புட் குழியில் உள்ள விஜயராகவப் பெரு மாள் சன்னதியில் ஸ்ரீதேவியும், பூ தேவியும் உள்ளனர்.

மேலும் புள்ளம் பூதங் குடி அருகில் "வைத்தீஸ் வரன் கோயில்" என்ற சிவன் கோவில் உள்ளது. இக் கோவிலின் தலவரலாற்றுப் படி, அந்த ஊரின் தொன் மைப் பெயர் புள்ளிருக்கு வேளூர். 'புள்' என்பது பட்சி யான சடாயுவைக் குறிக்கும். இராவணனால் வெட்டப் பட்ட சடாயுவின் இறக்கை கள் அத்தலத்தில் விழுந்தன. எனவே இராமாயணத்தின் காட்சிகளின்படி புள்ளம் பூதங்குடியும் சடாயுவிற்கு இராமர் மோட்சம் அளித்தப் புண்ணியத் தலம்தான் என்பது விளங்கும்.

***ஆலய அமைப்பு :*** திருப் புட்குழி விஜயராகவப் பெரு மாள் ஆலயத்தின் இராஜ கோபுரம் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. மூன்று நிலைகளைக் கொண்ட அந்தக் கோபுர வாசலுக்கு எதிரே துவஜஸ்தம்பம் உள்ளது. அதற்குத் தெற்கே ஒட்டினாற் போல சடாயு புஷ்கரணி உள்ளது. புஷ்கரணிக்கு எதிரே கிழக்குத் திசை யில் சடாயு சன்னதி உள்ளது. சடாயு வின் திருவுருவச் சிலை நெடிதுயர்ந்து அழகாகச் சன்னதியை நோக்கிப் பார்த்தவாறு அமைந்துள்ளது.

கோபுரத்தைக் கடந்து உள்ளே நுழைந்ததும் மேற்குத் திசையில் கிழக்கு நோக்கியவாறு ஆண்டாள் சன்னதி அமைந்துள்ளது. ஒவ்வொரு மாதமும் பூர நட்சத்திரத்தில் சிறப்பு வழிபாடும், ஆடிப் பூரத்தன்று விழா வும் நடைபெறுகிறது. இச்சன்னதியின் தென்புறம் உள்ள மண்டபத்தின் மதில் சுவரில் ஸ்ரீராமானுஜர் தன்னுடைய குருவான யாதவப் பிரகாசரிடம் சீட னாகப் பணிந்து கிரந்தங்களைக் கேட் டறியும் கல்வெட்டு உள்ளது.




ஆண்டாள் சன்னதிக்கு வடக்கே உள்ள பிரகாரத்தில் தெற்கு நோக்கிப் பெருமாளை வணங்கும் ஸ்ரீதேசிகர் சன்னதி உள்ளது. ஒவ்வொரு மாதமும் திருவோணம் நட்சத்திரத்தில் சிறப்பு வழி பாடு நடைபெறுகிறது. ஸ்ரீ மணவாள முனிகள் சன்னதி அடுத்தபடியாக உள்ளது. ஒவ்வொரு மாதமும் திரு வாதிரை நட்சத்திரத்தில் சிறப்பு வழிபாடு நடை பெறுகிறது.

***மரகதலிங்கத் தாயார் :*** விஜயராகவப் பெருமாள் சன்னதிக்கு இடதுபுறம் மரக தலிங்கத் தாயார் சன்னதி உள்ளது. கிழக்கு நோக்கிப் பத்மாசனத்தில் அமர்ந் துள்ள தாயாரின் உருவம் நம்மைப் பரவசத்தில் ஆழ்த் துகிறது. மக்கட்பேறு வேண் டும் பெண்கள் அமாவாசை நாளன்று சடாயு புஷ்கரணி யில் நீராடிவிட்டு ஸ்ரீமரக தலிங்கத் தாயாரின் மடியில்

நிவேதனம் செய்யப்பட்டுள்ள வறுத்த பயறைத் தன் மடியில் கட்டிக் கொண்டு அன்று முழுவதும் உபவாச மிருந்தால், மறுநாள் விடிந்தவுடன் அந்த வறுத்தப் பயறு முளை விட் டிருக்குமாம். அவர்களுக்கு மக்கட் பேறு வாய்க்கும்.

மூலவரான விஜயராகவப் பெரு மாள் கிழக்கு நோக்கி அமர்ந்த கோலத்தில் சடாயுவை வலது தொடை மீது சம்ஸ்காரம் செய்ய வைத்துக் கொண்ட நிலையில் ஸ்ரீதேவி – பூதேவியுடன் நமக்கு அருளாட்சி வழங்குகிறார். கருவறையின் மேல் அமைந்துள்ள விமானம் விஜய வீர கோடி விமானம் என்று அழைக்கப் படுகிறது. அந்த ஆலயத்தின் தல விருட்சம் அரச மரம்.

**ஆலய விழாக்கள் :** ஆலயத்தில் ஒவ்வொரு அமாவாசையின் பொழுதும் சிறப்பு வழிபாடுகள் நடை பெறுகின்றன. சித்திரை மாதம் புனர்பூச நட்டத்திரத்தன்று திரு அவதார உற்சவம் நடைபெறுகிறது. புரட்டாசி மாதம் நவராத்திரியிலும் சிறப்பு வழிபாடுகள் உண்டு. ஐப்பசி மாதம் மூலம் நட்சத்திர நாளன்று மணவாள மாமுனிகள் வழிபாடு. திருக்கார்த்திகையில் உற்சவம். தை மாதம் தெப்ப உற்சவம். மாசி மாதம் பிரம்மோற்சவம் பத்து நாட்கள் நடைபெறும். சிம்ம வாகனம், கருட வாகனம், அனுமந்த வாகனம் எனப் பலவிதமான வாகனங்களில் எட்டாம் நாள் நடைபெறும் குதிரை வாகனம் தனிப்பட்ட பெருமை பெறுகிறது.


சடாயு புஷ்கரணி

**எட்டாம் நாள் குதிரை வாகனம் :** அந்தக் குதிரை வாகனத்தை மூன்று தனித்தனி பாகங்களாகச் செய்து அவற்றைப் பூட்டியவுடன் அது ஒரு முழுமையான – தாவி மேவி ஓடிவரும் பெண் குதிரையாகக் காட்சியளித்தது. அந்த வாகனத்தை உருவாக்கிய விஸ்வ கர்மா அதன் அழகையும், அமைப்பை யும் வியந்து அதுபோன்ற ஒரு வாக னத்தை வேறொரு கோயிலுக்குச் செய்யமாட்டேன் என்று சபதமேற்று அதன்படியே வாழ்ந்தான்.

“கீல் குதிரை” என்று அழைக்கப் படும் அந்தக் குதிரை வாகனத்தின் மீது எழுந்தருளும் எம்பெருமான் அந்த விஸ்வகர்மா வாழ்ந்த வீதிக்கு எட்டாம் நாள் திருவிழாவில் எழுந் தருளுகிறார். அவரது வாரிசுகளுக்கு மரியாதைகள் செய்யப்படுகின்றன. மேலும் அக்குதிரைக்குப் புல்லும் கொள்ளும் அளித்த குடும்பத்தினருக் கும் மரியாதைகள் செய்யப்படு கின்றன. இந்த இரண்டு மரியாதை களும் செய்த பிறகே திருவீதிப் புறப் பாடு நடைபெறும்.

**பட்டோலை வாசித்தல் :** அத்திரு நாளில் பட்டோலை வாசிக்கப்படு கிறது. “திருமங்கை ஆழ்வாரால் மங்களா சாசனம் செய்யப்பட்ட திவ்ய தேசமாகிய திருப்புட்குழியில் உள்ள திருக்கோயிலில் குடி கொண்டுள்ள ஸ்ரீவிஜயராகவப் பெரு மாள் எட்டாம் நாள் திருவிழாவில் கல் குதிரை வாகனத்தில் திருவீதி உலா வருகிறார். அவரது பேராற் றலைக் கூறுகிறோம்” என்ற வரி களுடன் அந்தப் பட்டோலை வாசகம் ஆரம்பிக்கிறது.

*ஆலயம் – காலையில் 7 மணி முதல் நண்பகல் 12 மணி வரை யிலும், மாலை 4 மணி முதல் 7 மணி வரையும் திறந்திருக்கும். விசேஷ நாட்களில் அந்த நேரங்கள் மாறுபடும்.* ●

கட்டுரை

பேரா. இரா. மதிவாணன்

# நெடிய தமிழர் வரலாற்றில் மன்னர் பெயர் வகைமைகள்

பொதுவாக அரசர்களுக்கு இயற்பெயர் இருந்தாலும், மணிமுடி சூடியபின் மன்னர் குடிக்குரிய பட்டப் பெயரை இணைத்துக் கொள்வர். பாண்டியன் நெடுஞ்செழியன், சேரன் செங்குட்டுவன், சோழன் நலங்கிள்ளி என்னும் பெயர்களைக் காணலாம்.

தமிழிலக்கியம், கல்வெட்டு, வரலாறு ஆகியவற்றில் காணப்படும் தமிழ் வேந்தர்களின் பெயர்கள் இருபது வகைகளாக வழங்கப்பட்டிருப்பதைக் காண முடிகிறது.

கலிங்க நாட்டு மன்னன் காரவேலன் (கி.மு. 185) காலத்திய அத்திகும்பா கல்வெட்டு தமிழ் மூவேந்தரும் கருதப்படுகிறது. அதன்பிறகு 160 ஆண்டுகள் பாண்டியனின் ஆட்சி குலைந்தது என்றும் அந்த இருண்ட காலத்தில் தமிழ்ச் சங்கம் நடைபெறவில்லை என்றும் 'நற்குடி வேளாளர் வரலாறு' என்னும் செய்யுள் நூல் (வெளியீடு கி.பி. 1920) கூறுகிறது.

பாண்டிய அரசை மீட்டெடுத்த தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலத்தில் மீண்டும் தமிழ்ச் சங்கம் உயிர்பெற்றது. மறைந்த செய்யுள்களைத் தொகுத்துப் பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு எனத் தொகுத்தது.

எனினும் முக்கழக வரலாற்றுக் தமக்குள் போரிட்டுக் கொள்ளாமல் வட நாட்டுப் படைகளை எதிர்த்துப் போரிடுவதற்கு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டிருந்தனர் என்று கூறுகிறது. அதனை திரமிள சங்காத்தம் என்றும் அது 1300 ஆண்டுகள் (தெரச சதகம்) நீடித்தது என்றும், இறுதியில் காரவேலன் காலத்தில் அந்த உடன்படிக்கை முறிந்தது என்றும் கூறுகிறது.

மூவேந்தரின் ஒற்றுமை குலைந்த காலம் சற்றொப்ப கி.மு. 212 எனக் காலத்திலும் அதற்கு நெடுங்காலத்துக்கு முன்னரும் பின்னரும் வாழ்ந்த தமிழ் மன்னர்களின் இருபது வகைப்பாடு கொண்ட பட்டியல் கீழே தரப்படுகிறது.

**தாயமுறைப் பெயர் :** குறிப்பாகச் சேர நாட்டிலும், தென்பாண்டி நாட்டிலும் மருமக்கள் தாயமுறை நிலவியது. ஒரு மன்னனின் மகளுக்குத் தாய்வழி வந்த உரிமை அப்பெண்ணை மணந்து கொள்ளும் மருமகனுக்குக் கிடைக்கும். அதனால் சேரலர் மருக எனப்



ஔவையார்

புலவர்கள் பாடினர்.

**இருவழிக் குடிப்பெயர்** : நன்குடி வேளாளர் என்போர் தமிழ்வேந்தர்க்குப் பெண்கொடுக்கும் மரபைப் பின் பற்றினர். அதன்வண்ணம் பாண்டியர் கள் தந்தைவழிக் குடிப்பெயரும் தாயின் வழிக் குடிப்பெயரும் தம் பெயருடன் சேர்த்துக் கொண்டனர். பாண்டியன் தென்னவன் நன்மாறன் என்னும் பெய ரில் பாண்டியன் என்பது தந்தையின் குடிவழிப் பெயர். தென்னவன் என்பது தாயின் குடிப்பெயராகிய தென்னவன் கிளையைக் குறித்தது. நன்மாறன் என்பது இயற்பெயர்.

**பாட்டன் பெயர் பேரனுக்கு இடுதல்** : பெருவழுதியின் மகன் இள வழுதி. இளவழுதியின் மகனுக்குப் பெரு வழுதி என்னும் பாட்டன் பெயரையே சூடுவர். இவ்வாறே இளஞ்சேரல், பெருஞ்சேரல், இளங்கிள்ளி, பெருங் கிள்ளி என்னும் பெயர்களும் அமைந் தன. ஆரியர் செல்வாக்கு மிகுந்த இடைக்காலத்தில் பாண்டியன் அரி சேகரி பரகேசரி என்னும் பெயர்களை மாறி மாறி வைத்துக் கொண்டதைக் காண முடிகிறது.

**தந்தையின் பெயரை மகனுக்கும் இடுதல்** : நன்னன் சேய் நன்னன், பெரு வழுதி பெருவழுதி என்னும் பெயர்கள் இத்தகையன. சிந்துவெளி முத்திரை யிலும் நன்னன் சேய் நன்னன் என்னும் பெயர் இடம் பெற்றிருப்பது வியக்கத் தக்கது.

**செயற்கரிய செய்த அருஞ்செயலால் பெற்ற பெயர்** : வடிம்பு அலம்ப நின்ற நெடியோன் – ஆழ்கடலில் துணிவுப் பயணம் மேற்கொண்டு கடல்கடந்த தீவு களையும் நாடுகளையும் கண்டுபிடித் ததன் அடையாளமாகத் தன் பாதச் சுவட்டைப் புதிய நிலத்தின் கடற்கரைக் கற்பாறையில் பதியச் செய்தவன். வடிம்பு – பாதம். தன் பாதச் சுவட்டை அயல்நாட்டுக் கடற்கரை அலம்ப நின்ற தால், வடிம்பலம்ப நின்ற நெடியோன் எனும் பெயர் ஏற்பட்டது. இலக்கிய ஆய்வாளரான ரா. ராகவ ஐயங்கார் இதனை அடி பொறித்து ஆண்டுமானம் தொடங்குதல் எனக் குறித்திருக்கிறார்.

இதிலிருந்து பண்டைத் தமிழர்கள் கடல்கடந்து புதிய நாடுகளைக் கண்டு பிடித்துக் குடியேறினால் புதிய ஆண்டு மானம் தொடங்குவார்கள் என்னும் குறிப்பு வெளிப்படுகிறது. கி.மு. 3101 கலியாண்டு தொடங்கியவர்களும் கி.மு. 3201 அளவில் மாயன் ஆண்டு தொடங் கியவர்களும் தமிழகத்திலிருந்து சென்ற வர்களாகலாம் என்று கருதப்படுகிறது.

இந்த வரிசையில் பாய்மரக் கப்பலை முதன் முதலில் வடிவமைத்துத் தந்த சோழன் வளிதொழிலாண்ட உர வோன். கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து கி.மு. 3000 அளவில் கரும்பைக் கொணர்ந்து தமிழகத்தில் பயிரிட்ட அதியன் சேரல் பிற நாட்டுக் கடற் பகுதியில் தனக்கு உடைமையாகப் பல துறைமுகங்களைக் கொண்டிருந்த பல்சாலை முதுகுடுமி பெருவழுதி (சாலை என்பது துறைமுகம் – காந் தளூர் சாலை என்னும் சொல்லாட்சி நோக்குக) ஆகியோர் குறிப்பிடத் தக்கவர். கரும்பு கொண்டுவந்த அதியன் சேரலை,

> “அரும்பெறல் மரபின் கரும்பிவண் தந்து
>
> நீரக இருக்கை ஆழி சூட்டிய
>
> தொன்னிலை மரபின் முன்னோன்”

என்று ஔவையாரும் பாடியிருக்கிறார். புதிய கண்டுபிடிப்புகளைச் செய்யும் போட்டி தமிழ் இளவரசர்களிடையே நிலவியது என ஈழத்து மூன்று சேர இளவரசர் கதை (Tale of Three Chera Princes) குறிப்பிடுகிறது.

பதினேழாம் நூற்றாண்டில் யாழ்ப் பாணத்தில் தங்கியிருந்த ஓராசு வால் போல் இதைக் குறிப்பிட்டிருக்கிறார். எதையோ காண்பதற்காக நெடுங் கடற்பயணம் மேற்கொண்டு எதிர் பாராத வகையில் வேறொரு புதியதைக் கண்டுபிடித்த செயலைக் குறிக்க Serandipity என்னும் புதிய சொல்லை ஓராசு வால்போல் ஆங்கில மொழிக்குப் படைத்தளித்தார். அச்சொல் சேம்பர்சு ஆங்கில அகர முதலியிலும் இடம் பெற்றுள்ளது. ஈழத்திற்கு அக்காலத்தில் சேரன் தீவு என்னும் பெயர் இருந்தது. சேரன் தீவு என்னும் சொல்லிலிருந்தே இச்சொல் படைக்கப்பட்டது.

**ஊரொடு சார்ந்த பெயர் :** கொற் கைக்கோமான், உறந்தையர் கோன், வஞ்சியான் என்னும் பெயர்கள் மன்னர் வாழ்ந்த ஊரால் பெற்ற பெயர்களாக விளங்கின.

**இறந்த இடத்தால் பெற்ற பெயர் :** பொன்மாளிகை துஞ்சிய தேவர் கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதி இல வந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறன் என்பவை எந்த இடத்தில் மன்னர் இறந்தாரோ அதனை நினைவுகூரும் பொருட்டு அவர் இறந்தபின் வழங் கிய பெயராகத் தெரிகிறது.

**புகழ்பெற்ற பழைய குடும்பப் பெயர் :** இருங்கோவேள் என்போர் பாண்டிய மன்னர் குடியின் தொல் பழங்குடி தமிழ் மரபினருள் ஒரு பிரிவினர். இவர்கள் 10 வகை உயர் பண்புகளைக் கட்டாயம் கடைப் பிடித்தாக வேண்டும். இத்தகையோர் அரசாளும் தகுதி பெற்றவராவர். இத் தகைய குடும்பங்களுக்கு நன்குடி என் னும் பெயர் வழங்கியது சிலப்பதிகாரத்தில்;

"மன்பதைக் காக்கும் நன்குடிப் பிறத்தல்

துன்பம் அல்லது தொழுதகவு இல்"

என இச்சொல் ஆளப்பட்டுள்ளது. நன்குடியில் பிறந்த பாண்டியன் நன் மாறன் என்னும் பெயர் பெற்றான். இதனைத் திருவள்ளுவர் பழங்குடி பண்பில் தலைப்பிரிதல் இன்று எனக் குறிப்பிடுகிறார். பழையனூர் நீலிக் கதை யில் வரும் 70 வேளாளர் நன்குடியைச் சார்ந்தவர்கள். நன்குடி நாற்பத் தெண்ணாயிரவர் என்பது இவர்களின் மக்கள் தொகையைக் குறிப்பிடுகிறது.

**வெற்றி குறித்த கொற்றப் பெயர் :** தூங்கெயில் எறிந்த தொடிதோட் செம்பியன் (தூங்குஎயில் – மிக உயர்ந்த கோட்டை மதில்) பன்னாடு தந்த மாறன் வழுதி, கங்கைகொண்ட சோழன், மும்முடிச்சோழன் என்பவை தமிழ் வேந்தர்களின் வெற்றி குறித்த கொற்றப் பெயர்களாக வழங்கின.

**கல்வி மேம்பாடு குறித்த பெயர் :** புலத்துறை முற்றிய கூடலூர் கிழார், ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி மாங் குடி மருதன் எனச் சிறந்த தமிழ்ப் புல வர்கள் புலமைத் திறனால் பெயர் பெற்றது போலப் பழங்காலத் தமிழ் மன்னருள் பலரும் கல்வி கேள்விகளில் சிறந்திருந்தனர். அவர்களைப் பாஅரங்கேறிய (கவியரங்கேறிய) மன்னர் எனக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.



***மன்னர் மன்னர், பேரரசன் எனப் பெயர் சூடுதல் :*** பல மன்னர்களை வென்று, பேரரசு நிறு விய மன்னரை, மன்னர்மன்னர் என்றும் கோவேந்தன் என்றும் அழைத்தனர். இவை சக்கரவர்த்தி என வடமொழியில் வழங்கியதோடு, அதே பொருளில் தாவேந்தன், மந்தாதன் (மந்து–அரசன், ஆதன்–தலைவன்) முதலிய சொற்கள் 5000 ஆண்டுகளுக்கும் முன்பே வழங்கி யுள்ளன. தாவேந்தன் என்ற சொல் சிந்துவெளி முத்திரையில் (2015) இடம் பெற்றுள்ளது.

வென்ற நாடாண்ட சிறப்புப் பெயர் : கடல்கடந்த நாடுகள் வென்றுதானே ஆட்சிபுரிந்த மன்னரும் வாழ்ந்திருந் தனர். வன்சொல் யவனர் வள நாடாண்டு பொன்படுமால்வரை புகுந் தோன் என்ற வரிகள் இக்கருத்தை வலுப்படுத்துகின்றன.

> "வடதிசை கங்கையும் இமயமும் கொண்டு
> தென்திசை யாண்ட தென்னவன்"

என்னும் வரிகள் இக்கருத்தைப் பெரிதும் வலுப்படுத்துகின்றன.

***உடல்ஊனம் தொடர்பாகப் பெற்ற பெயர் :*** பாண்டிய மன்னர்களில் கூன் பாண்டியன் முடத்திருமாறன் முதலி யோர் உடல் ஊனத்தால் பெயர் பெற் றுள்ளனர். சிந்துவெளியில் கிடைத்த செப்புப் பட்டயம் ஒன்றில் சாய்ந்தகண் அப்புந்தி தண்கவிகை பண்ணன் என் னும் மன்னன் பெயர் இடம்பெற்றிருப் பது குறிப்பிடத்தக்கது.

***விழா எடுத்தல் தென்புலத்தார் கடனிறுத்தல் ஆகியவற்றால் பெற்ற பெயர் :*** கடல் தெய்வத்திற்கு முந்நீர் விழாத் தொடங்கிய பாண்டியன் முந்நீர் விழாவின் நெடியோன் எனப் புற நானூற்றில் பாடப்பட்டிருக்கிறான். பாரதப் போரின் போது, திங்கள் மரபை (நிலா மரபை)ச் சார்ந்த இரு திறத்துப் பாண்டிய இனத்தாரும் இறந்ததன் நினைவேந்தலாகப் பெருஞ்சோறு வழங் கிய சேரலாதன் பெருஞ்சோற்று உதி யன் சேரலாதன் எனப் பாராட்டப் பட்டான்.

***பண்பினால் பெயர் பெற்றோர் :*** காய்சின வழுதி, கடுங்கோன், செங் கோன், செம்பியன், புறப்புண் நாணி வடக்கிருந்த சோழன், திருமாறன், கிள்ளிவளவன் (கிள்ளி – பேச்சுத் திறன், நாநலம் பெற்றோன்) ஆகியோர் பண் பினால் பெயர் பெற்றனர்.

***திறமையால் பெயர் பெற்றோர் :*** வெற்றிவேற் செழியன், வல்வில் ஓரி, ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், (ஆடு – வெற்றி), கரிகாலன் (களிறு எறிந்த காளை, கரிகாலன் கரிக்கு (யானைக்கு) எமன்.

***உடைமையாலும் ஊர்தியாலும் பெயர் பெற்றோர் :*** பல்யானை செல் கெழு குட்டுவன் (பல்யானை – பெரிய யானை) வெண்தேர்ச் செழியன், உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னி. (பல்தேர் – பெரிய தேர்).

***துறவுக் கோலத்தொடு நாடாண்ட பெயர் :*** களங்காய் கண்ணி நார்முடிச் சேரல், மலையாள மொழியில் நார் என் பது தலைமுடியைக் குறிக்கும். தலைநார் – தலைமுடி.

***இளவரசர்க்கான பெயர்கள் :*** இளங்கோ, அரசபுதல்வன் (இராச புத்திரன்), இளவரசு, இளஞ்சேரல், இளஞ்செழியன், இளஞ்சோழன், இளந் திரையன்.

***சிற்றரசர்களின் பெயர்கள் :*** நாடு வாழி, செல்வக் கடுங்கோ வாழியாதன், தண் கவிகை பண்ணன், குடக்கோ இளஞ்சேரலாதன், இளவெளிமான், பூரிக்கோ, தொண்டைமான், கொங்கர் கோமான்.

பழந்தமிழர்களின் நெடிய மரபில் ஒன்றேனும் பிறசொல் கலப்பின்றித் தூய தனித்தமிழ்ச் சொற்களையே தமிழ் மன்னர் சூடியிருந்தனர் என்பது தாய் மொழிப் பற்றையும் தமிழினப் பற்றை யும் வலியுறுத்திக் காட்டுகிறது. இக் காலத்துத் தமிழர் நெடிய தமிழினத்தின் வரலாற்றுப் பின்னணியை எண்ணிப் பார்க்க வேண்டும்.

"Ignorance of History will make the people slaves for ever" என்னும் ஆங்கிலப் பொன்மொழியும் கவனிக்கத் தக்கது. ●

கட்டுரை

# ‘இந்தியா’ பத்திரிகைக்கு இப்படி ஒரு செல்வாக்கா!

மகாகவி பாரதியார் நடத்திய பத்திரிகைகளில் ‘இந்தியா’ வார இதழே நீண்ட காலம் நடை பெற்றது. அந்தப் பத்திரிகையே பாரதியை இந்திய நாட்டிற்கு அடையாளமும் காட்டியது.

அதைத் தவிர இந்தியா வாரப் பத்திரிகையின் விற்பனை நாளுக்கு நாள் அதிகரித்ததால் அதனை வாரம் இருமுறை வெளியிடவும் பாரதி நினைத்தார்.











பாரதியார்

ஆனால், ‘எண்ணியது ஒன்று, நடந்தது ஒன்று’ என்னும் பழமொழிக்கு ஏற்ப பாரதியின் பத்திரிகை முயற்சிகள் அனைத்தும் ஆங்கில அரசின் பத்திரிகைத் தடைச் சட்டத்தால் முடங்கிப் போயின.

1908 அக்டோபர் மாதத்திலிருந்து மீண்டும் புதுவையிலிருந்து ‘இந்தியா’ பத்திரிகை வெளிவரத் தொடங்கியது. 30.4.1910 இல் மீண்டும் நின்று போனது. அதற்குப் பிறகு வெளிவரவில்லை.

ஆகவே, பாரதியின் ‘இந்தியா’ பத்திரிகை ஏறக்குறைய மூன்றரை வருடங்கள் நடைபெற்றுள்ளது எனக் கருதலாம்.

இந்தியா பத்திரிகை வெளிவந்த காலத்தில் பாரதியார் புதுவையில் மேலும் சில பத்திரிகைகள் நடத்தினார். அவை பாலபாரதா (ஆங்கிலம்) மாத இதழ், சூரியோதயம் என்ற வார இதழ் – விஜயா என்ற நாளேடு – கர்மயோகி என்ற மாத இதழ் ஆகியவை ஆகும். ஆங்கில அரசின் அடக்குமுறைச் சட்டத்தால் அவையும் நின்று போயின. அதனால் பாரதி தளர்ந்து போய் விடவில்லை.

சென்னையில் வசித்த காலத்தில் பாரதி 1906 செப்டம்பரில் ‘இந்தியா’ பத்திரிகைக்குப் பெயர் போடாத ஆசிரியராகப் பணியாற்ற முற்பட்டார்.

1908 செப்டம்பரில் தான் கைது செய்யப்படலாம் என்று கருதி பாரதியார் புதுவைக்கு ராஜதந்திர ரீதியில் சென்றதால், இந்தியா பத்திரிகை நின்று விட்டது.

இப்படிப் பத்திரிகை முயற்சிகள் முற்றிலும் தடைப்பட்டபோதும் பாரதி சும்மா இருக்கவில்லை. ஞானரதம் – கனவு – ஆறில் ஒரு பங்கு – பாஞ்சாலி சபதம் (முதல் பாகம்) முதலிய நூல்களை எழுத ஆரம்பித்து வெளியிட்டார். மீண்டும் ‘சுதேசமித்திரன்’ பத்திரிகையில் கதை, கட்டுரை, கவிதை எழுதத் தொடங்கினார்.

மேலும் தமது நண்பர் பரலி சு. நெல்லையப்பர் மூலமாகத் தமது படைப்புகளை லோகோபாரி – ஞானபானு – தமது பெயரிலே வெளி வந்த பாரதி – தேசபக்தன் முதலிய பத்திரிகைகளில் வெளிவரச் செய்தார். மெட்ராஸ் ஸ்டாண்டார்டு/ நியூ இந்தியா/ காமன்வீல்/ இந்து/ ஆங்கிலப் பத்திரி கைகளிலும் கவிதை, கட்டுரைகள் எழுதி னார்.

புதுவையிலிருந்து பாரதி சென்னை திரும்பிய பிறகு மீண்டும் சுதேசமித்திர னிலும் பணியாற்றினார். சித்திராவளி / அமிர்தம் முதலிய பத்திரிகைகளைத் தொடங்கி நடத்தத் திட்டமிட்டார். ஆனால், அதற்குள் அவர் அகால மரணம் அடைந்துவிட்டார். ஒரு பத்திரி கையாளர் என்ற பரிணாமத்தில் பாரதி ஆற்றிய சாதனை இதுவே.

பத்திரிகைத் துறையில் பாரதி கண்ட கனவுகள் முழுதும் நிறைவேற வில்லை. ஆயினும், தமது சுதேச மித்திரன் உட்பட, ஐந்து ஆண்டுக்காலப் பத்திரிகைப் பணியில் பாரதி சாதித்த புதுமைகள் ஏராளம், ஏராளம்!

கேலிச்சித்திரம் / நடைச்சித்திரம் / பரபரப்பூட்டும் தலைப்புத் தருதல் / உலக நடப்புச்செய்திகள் / அதற்குத் தீர்வு / தேசபக்தி / பெரியோர் வரலாறு / தமிழின் பெருமை / பெண் உரிமை / எழுத்தாளர் நிலைமை / ஒற்றுமை / பாரதக் கலாச்சாரம் இப்படி எத்தனையோ செய்திகளைப் பத்திரிகை மூலம் பாரதி பரப்பிப் புதுமை புரிந் துள்ளார்.

மேலும் ஒரு நம்ப முடியாத மிகவும் வியப்புத் தரும் செய்தி என்னவென் றால், 'இந்தியா' பத்திரிகை அலுவலகத் திற்கு எட்டுத் திசைகளிலிருந்தும் பல்வேறு மொழிகள் சார்ந்த 'பிரதி பத்திரிகை' ஏடுகள் நூற்றுக்கணக்கான எண்ணிக்கையில் மாதந்தோறும் வந்தன. ஆம்! அவற்றை எல்லாம் படித் துப் பாரதி உலகச் செய்திகளை ரஸ மாகத் தமது பத்திரிகையில் வெளி யிட்டார். இந்தியா பத்திரிகைக்கு இப்படி ஒரு செல்வாக்கா? என வியந்து போற்றுகிறேன்.

மகாகவி பாரதியார் அனுப்பி வைத்த 'இந்தியா' வாரப் பத்திரி கையைப் பெற்றுக் கொண்டு பிற பத்தி ரிகை ஆசிரியர்கள் தாங்கள் நடத்திய பத்திரிகைப் பிரதிகளைப் பாரதிக்குப் பதிலுக்கு அனுப்பி வைத்தார்கள். அப் படி அனுப்பப்பட்ட பத்திரிகைகளின் விவரம் பின்வருமாறு :

"**நமது விசேஷ வந்தனங்கள் :** இந்தி யாவில் மாத்திரமல்லாமல் பர்மா, ஸிலோன், பினாங்கு, ஸிங்கப்பூர், ஜப் பான், ஆஸ்திரேலியா, நெட்டால், டிரான்ஸ்வால், ஈஜிப்டு, இங்கிலாந்து, பாரிஸ், அமெரிக்கா, ஜெர்மனி முத லான வெளிநாடுகளில் இருந்தும்கூட நமது 'இந்தியா' பத்திரிகையை ஆதரித்து வரும் சந்தாதாரர்களுக்கும், நிருப நேயர் களுக்கும் நாம் மெத்த வணக்கமாய் வந்தனம் செய்கிறோம். முக்கியமாய் நாம் நமது லண்டன் நகர நிருப நேய ருக்கு (புரட்சி வீரர் வ.வே.சு ஐயர்) விசேஷ வந்தனம் செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம்.

இந்த ஒரு வருஷ காலமாக அன்பு கூர்ந்து நமது 'இந்தியா'வுக்குப் பிரதிப் பத்திரிகைகளாக நமக்குத் தமது பத் திரிகைகளனுப்பி வந்த பத்திராதிபர்கள் எல்லோருக்கும் மிகவும் வணக்கமாய் வந்தனம் செய்கிறோம். அப்பிரதிப் பத்திரிகைகள் பாஷா ரீதியாய் வகுத்து அடியில் கண்ட விவரப்படி பிரசுரித் திருக்கிறோம்.

**தமிழ்** : செந்தமிழ் (மதுரை), தமிழகம் (தஞ்சாவூர்), இந்து நேசன் (சென்னை), லோகோபகாரி (சென்னை), ஹிதகாரிணி (சென்னை), நீலலோசனி (நாகப்பட்டணம்), தேசா பிமானி (திருப்பாப்புலியூர்), கோனு கூலன் (கும்பகோணம்), பிரஜானுகூலன் (திருச்சினாப்பள்ளி), ஜனானுகூலன் (தஞ்சாவூர்), விவேக போதினி (மைலாப் பூர்) விவேக சிந்தாமணி (மைலாப்பூர்), விவசாய தீபிகை (சைதாப்பேட்டை), விஜய விகடன் (சென்னை), கமலாலினீ

(திருவாரூர்), ரஞ்சிதபோதினி (ரங்கூன்), ஸ்வதேச பரிபாலினி (தினசரி பத்திரிகை, ரங்கூன்) ஜனானா மாகனஸன் (சென்னை), சக்கரவர்த்தினி (திருவல்லிக்கேணி), சூரியோதயம் (புதுவை), ஸ்வதேச வர்த்தமானி (புதுவை), விஜயா (தினசரி பத்திரிகை – புதுவை), பினாங் கலாநிதி (பினாங்கு), திலாங்கூர் வித்தியா பாஸ்கரன் (திலாங்கூர்) பாண்டியன் (ரங்கூன்), தென்னிந்தியா விவசாயம் (மைலாப்பூர்), பிழைக்கும் வழி (சென்னை), வாணி விலாஸினி (ஶ்ரீரங்கம்), தக்ஷிணதீபம் (சேலம்), விவேகபானு, வித்யாபாநு (மதுரை), ஆயுர்வேத பாஸ்கரன் (காஞ்சிபுரம்), விவாவுல் இஸ்லாம் (சென்னை), அல்யதாமா (வாணியம் பாடி), முஸ்லிம் நேசன் (கொழும்பு), குருசந்திரோதயம் (யாழ்ப்பாணம்), ஞானஸித்தி (யாழ்ப்பாணம்), திராவிட தீபம், வித்யா விஹாரிணீ (சென்னை), செந்தமிழ்ச் செல்வி (நாகப்பட்டணம்), தென்னிந்தியா மித்திரன் (கும்ப கோணம்).

**தெலுங்கு** : கிருஷ்ணா பத்திரிகா (மசூலிப்பட்டணம்).

**ஸம்ஸ்கிருதம்** : ஸூநருதகாதினி (பம்பாய்), மஞ்சுபாஷிணீ (காஞ்சிபுரம்).

**கன்னடம்** : விகடப் பிரதாப.

**ஹிந்தி** : பங்கபாஸி (கல்கத்தா), கர்மயோகி (அலகாபாத்), அப்பியுதயா (அலஹாபாத்), ஹிந்து பஞ்ச் (தானா), தேவநாகரீ (கல்கத்தா), ஹிந்து பஞ்ச் (பம்பாய்).

**பெங்காலி** : பங்கபாஸி (கல்கத்தா), ஹிதவாதி (கல்கத்தா), ஸஞ்சீவினி (கல்கத்தா), மாத்ருபூமி (சந்திரநாகூர்).

**உர்து** : பைசா ஆக்பர் (லாகூர்), உர்து உமஸா (அலிகார்).

**பிரஞ்சு** : பிரஸ்காலோனியில் (பாரிஸ்), டெபெஷஷ கலோனியில் (பாரிஸ்), க்ரேடிட் கலோனியில் (பாரிஸ்), எக்லேர் (பாரிஸ்), லெபெதி பாரி ஸூடன் (பாரிஸ்), லெகூரியஸெய் கோன்னே (ஸைகோன்).

**இங்கிலீஷ்** : மராட்டா (பூனா), ஹிந்து (சென்னை), அமிர்த பஸார் பத்திரிகா (கல்கத்தா), கர்மயோகின் (கல்கத்தா), டான்மாகசைன் (கல்கத்தா), பிரஹ்மவாதின் (சென்னை), முஸ்லிம் ஹோல்ட் (கல்கத்தா), இந்தியன் ஸ்டூடெண்ட் (கல்கத்தா), கல்பகா (திருநெல்வேலி), உலக விளம்பரன் (சென்னை), சித்தாந்த தீபிகா (சென்னை), தென்னிந்தியா மெயில் (மதுரை), ஞானோதயம் (பெங்களூர்), பால பாரதா (புதுவை), மைசூர் ரிவியூ (மைசூர்), யுனைடெட் பர்மா (ரங்கூன்), ஹிந்து ஆர்கன் (யாழ்ப்பாணம்), இந்தியன் ஆஸ்திரலாஜிகல் மாகஸைன் (சென்னை), கோயமுத்தூர் கிரிசெண்ட் (கோயமுத்தூர்), பிரபுத்த பாரதா (ஆல் மோரா – ஹிமாலயம்), திருவாங்கூர் டைம்ஸ் (திருவாங்கூர்), பேஸின் நியூஸ் (பர்மா), தயானந்த யூனியன் மாகஸைன் (லாகூர்), பஞ்சாபி (லாகூர்), ஆபிரிகன் கிரானிகல் (நெட்டால்), இந்தியன் ஒபினியன் (ஜோஹானஸ்பர்க்), திரான்ஸ்வால் பிரீ ஹிந்துஸ்தான் (நியூயார்க் நகரம்), நியூயார்க் ஹெரால்ட் (நியூயார்க்), ஈவினிங் போஸ்ட் (நியூயார்க்), ஹார்ப் (நியூயார்க்), ஸன் (நியூயார்க்), கால் (நியூயார்க்), நியூயார்க் அமெரிகன் (நியூயார்க்).” ஆதாரம் : இந்தியா – 23.10.1909,

**– எதிரொலி**

*‘பாரதமணி’ – பிப்ரவரி, 2018.*



**நேர்கொண்ட பேச்சாளர்!**

**கி.**வா.ஜ. விடியற்காலை ஐந்து மணிக்கே எழுந்துவிடுவார். காபி அருந்தமாட்டார். இரவில் வேர்க் கடலையும் வெல்லமும் சாப்பிடுவார். நிமிர்ந்த நிலையில் நின்று பேசுவார். கூனல் முதுகு இவருக்குப் பிடிக்காது. இவர் வீட்டில் ஈசிசேர்கூட இல்லை.

– பழனிச்சாமி தங்கவேல்

சிறுகதை

# நன்கொடை

ஆட்டோவை விட்டு இறங்கிய இருவரில் ஒருவர் இளம் மஞ்சள் பூ வேலைப்பாடுகளுடன் கூடிய வெள்ளைத் தொப்பி அணிந்திருந்தார். பிறிதொருவர் நேரு குல்லாய் போல் கறுப்பு.

இருவரின் பார்வையும் பங்களா போன்ற அப்பெரிய வீட்டைச் சுற்று முற்றும் துழாவிப் பார்த்தது.

"பாய் வீடு ரொம்பப் பெரிசாத்தான் இருக்கு."

"வீடு பெரிசா இருந்து என்ன பிரயோசனம். மனசும் பெரிசா இருக்கணுமே. அதுதானே நமக்கு முக்கியம்."

பேசிக் கொண்டே அழைப்பு மணியை அழுத்த கதவு திறந்தது.

இழுத்துப் போர்த்திய உடம்பும், தலையில் முக்காடுமாக – பாவம் – சோர்ந்த முகத்துடன் கதவு திறந்த அப் பெண்மணிக்கு அறுபது வயதிருக்க லாம்.

வெளியில் வராமல் கதவுக்குப் பின்னாலேயே நின்று "சலாம்" சொன் னாள்.

சிட் அவுட்டில் கிடந்த சோபாவைக் காட்டி, "உட்காருங்கள். இப்ப வந்துடுவாங்க" என்று சின்ன தாய்ப் புன்னகைத்து, கதவை மெள்ள ஒருக்களித்தாள்.

அதே சமயம் அவ்வீட்டு உரிமையாளர் அகமதுஷா, வாசலில்.

"அஸ்ஸலாமுன் அலைக்கும்"

"அலைக்கும் அஸ்ஸலாம்..." என்று எழுந்த விருந்தினர்களை "உட் காருங்கள்... உட்காருங்கள்..." என்று அமரப் பணித்தார், அகமதுஷா.

கையிலிருந்த பார்சலை கதவுக்குப் பின்னால் நின்ற மனைவியிடம் கொடுத்துவிட்டு எதிர்வரிசை சோபாவில் வந்து அமர்ந்தார்.

கதவுக்குப் பின்னால் நின்ற அவரது மனைவியிடமிருந்து ஏதோ ஒரு சமிக்ஞை : "ஏதேனும் அருந்தத் தரட்டுமா" என்று.

"வேண்டாம். அவங்க இப்பத்தான் ஓட்டலிலே நாஸ்தா பண்ணிட்டுக் காப்பி எல்லாம் குடிச்சுட்டு வந்தாங்க. கொஞ்சம் சுணங்கட்டும்."

வந்தவர்கள் முகத்தில் சின்னதாய் ஒரு பதற்றம். "ஓட்டலிலே எங்களைப் பார்த்தீங்களா பாய்."

"நல்லா பார்த்தேன். நீங்கள் சாப்பிடறப்ப நான் பார்சல் பிரிவிலே நின்னுட்டிருந்தேன். வாங்கிட்டு வெளியே வந்தேன். அப்போது நீங்க ஆட்டோகாரன்கிட்டே பேரம் பேசிட் டிருந்தீங்க. எவ்வளவு கொடுத்தீங்க."

"அறுபது ரூபாய்."

"அர்த்தமற்ற செலவு. அந்த ஓட்டல் ஐந்தாவது கிராஸ். நம்ம வீடு ஆறாவது கிராஸ். கூப்பிடு தொலைவு தான். நடந்தே வந்திருக்கலாம். அனா வசியமாய் அறுபது ரூபாய் கொடுத் திட்டீங்க."

வந்தவர்கள் பதில் பேச முடியா மல், ஆனால் சற்றுக் கண்டனத்

# த மி ழி னி ய ன்



தோரணையுடன் அகமதுஷாவை ஏறிட்டார்கள்.

“சரி... எந்த ஊரு... என்ன விஷயம்... எதுக்காக என்னைப் பார்க்க வந்தீங்க. அதைக் கேட்காமல் நான் எதை எதையோ பேசிட்டிருக்கேன்.”

வந்தவர்களுக்கு ஆதரவாகத் தன்னைத்தானே நொந்து கொண்டார், அகமதுஷா.

விருந்தினரில் ஒருவர் மெள்ள வாய் திறந்தார்.

“இன்ஷா அல்லாஹ், ஊரில் ஒரு புதுப் பள்ளி வாசல் கட்டுகிறோம். பத்து லட்ச எஸ்டிமேட். உள்ளூரிலும் வெளிநாட்டிலும் ஹதியா வசூல் நடக்கிறது. தாங்களும்...”

எவ்வித உணர்ச்சியும் காட்டாமல் “தற்சமயம் எங்கே தொழுகை நடத்துகிறீர்கள்” என்றார் அகமதுஷா.

“குட்டைச் சுவர் எழுப்பி கீற்றுக் கொட்டகை போட்டிருக்கிறோம்.”

“நம்மவர்கள் எத்தனை குடும்பம்.”

“அறுபதிலே இருந்து எழுவதுக்குள்ளே இருப்பாங்க.”

“சின்ன ஜமாத்தாத் தானே தெரிகிறது. அதிலேயே தொடர்ந்து தொழ முடியாதா.”

“கூரை ஒழுகுகிறது பாய், சுவர் ஏறிக் குதித்து கடிகாரம், பல்பு, முஸல்லா பாயைத் திருடிப் போகிறார்கள்.”

“மோதினார் இல்லையா.”

“இருக்கிறார். இஷா முடிந்ததும் வீட்டுக்குப் போய் விடுவார். அவர் இல்லாத நேரத்தில் தான் இப்படி.”



"வாசலுக்கும் அறைக்குமாக நிலை கொள்ளாமல் தவித்தார், அகமதுஷா. ‘இங்கிருக்கும் வீட்டிலே வசூலுக்குப் போனவர்கள் இன்னும் காணோமே. ஆட்டோவில் போய் வர அரைமணி நேரம்கூட ஆகாது. மூணு மணி நேரமாய் அங்கு என்ன பண்ணுகிறார்கள்...’ முணுமுணுத்தார். செய்வதறியாமல் கைகளைப் பிசைந்தார்."

பேசிக் கொண்டிருந்த போது மின்தடை. சுழன்று கொண்டிருந்த காற்றாடி நின்று விளக்கு மட்டும் ஒளிர்ந்தது.

“இன்வெர்ட்டர் இல்லையா... பாய்.”

“லைட்டுக்குத்தான் இன்வெர்ட்டர். ஃபேனுக்குக் கனெக்ஷன் கொடுக்கல்லை.”

“எங்கள் பள்ளியிலே லைட்... ஃபேன் எல்லாவற்றுக்கும் இன்வெர்ட்டர் கனெக்ஷன் கொடுத்திருக்கிறோம்.”

“பொதுப் பணம்... பொது இடம்... கொடுக்கலாம்” என்று சிரித்தார், அகமதுஷா.

“அல்ஹம்துலில்லாஹ்... நீங்களும் நல்ல வசதி தானே பாய்.”

“வசதிதான்... ஆனால், தேவையின் அடிப்படையிலே செலவு செய்யறது தான் நல்லது. அல்லாவும் குர்ஆனிலே அதைத்தான் அடிக்கடி சொல்றார்.”

அப்போது அறைக் கதவு மெள்ளத் திறந்து "என்னங்க..." என்று சாப்பிட அழைத்து சமிக்ஞை செய்தாள் அவரது மனைவி.

"நீ முதலிலே சாப்பிடும்மா... நான் அப்புறமா வர்றேன்" என்று மனைவிக்குப் பதில் அளித்தவர், வந்தவர்களிடம் திரும்பி "சரி... இப்ப நீங்க ஒண்ணு பண்ணுங்க" என்றார்.

"சொல்லுங்க ஜி..."

"இதே தெருவிலே இதே வரிசையிலே கடைசி மூணு வீடும் முஸல்மான்தான். அவங்களைப் போய் கண்டிட்டு வந்திடுங்க. அதுக்குள்ளாற நான் குளிச்சு ரெடியாயிடறேன். குளிக்காமல் ஒரு நல்ல காரியத்துக்குக் கை நீட்டக் கூடாது..." தலையசைத்துச் சிரித்தார் அகமதுஷா.

வந்தவர்கள் "சரி..." என்று வெளியேறினார்கள்.

தெருக்கோடி என்பது கண்ணுக் கெட்டாமல் வெகு தொலைவில் இருந்தது. அதைப் பார்த்து அவர்கள் மலைத்து நின்றபோது ஆட்டோ ஒன்று பிரேக் அடித்து நின்றது.

"வா... ஆட்டோவிலேயே போய் விடலாம்..." என்று ஏறி உட்கார்ந்து நிமிர்ந்து பார்த்தார்கள்.

வீட்டு வாசலில் அகமதுஷா. வியப்பும், சிரிப்புமாக நின்று கொண்டிருந்தார்.

"மனுஷன் பார்த்துட்டாரே."

"இனி அவ்வளவுதான். திரும்பி வர்றப்ப அதுக்கு ஒரு லெக்சர் அடிப்பாரு."

"தெரியாத்தனமா இவருகிட்டே வந்து மாட்டிக் கொண்டோம்."

"இவரைப் போய் பெரிய மனுஷன்... அள்ளித் தருவார்னு சொன்னாங்க பார் ஊரிலே... அவங்களைச் சொல்லணும்..."

"என்ன பண்ணலாம்...?"

"திரும்ப வந்து இவருகிட்டே மூக்கறுபடறதுக்குப் பேசாமல் அப்படியே ஊருக்குப் போயிடலாம்னு நினைக்கிறேன்..."

"எனக்கும் அதுதான் சரியாய்த் தோணுது."

**ம**தியம் மணி பன்னிரண்டாயிற்று.

வாசலுக்கும் அறைக்குமாக நிலை கொள்ளாமல் தவித்தார், அகமதுஷா. 'இங்கிருக்கும் வீட்டிலே வசூலுக்குப் போனவர்கள் இன்னும் காணோமே. ஆட்டோவில் போய் வர அரைமணி நேரம்கூட ஆகாது. மூணு மணி நேரமாய் அங்கு என்ன பண்ணுகிறார்கள்...' முணுமுணுத்தார். செய்வதறியாமல் கைகளைப் பிசைந்தார்.

"எதற்கும் ஓர் எட்டு அங்குபோய்ப் பார்த்துட்டு வர்றீங்களா..." அவரது தவிப்புக்கு ஆதரவாக அவரது மனைவி.

"ஆமாம். அதுதான் சரி..."

வெயில்.

குடைபிடித்துக் கொண்டு வேகமாய் நடந்தார்.

"வாங்க பாய்... எங்கே இந்த நேரத்திலே இவ்வளவு தூரம்" புன்னகைத்துக் கொண்டே சலாம் சொன்னார் அந்த வீட்டுக்காரர்.

"பள்ளிவாசல் நன்கொடைக்காக இரண்டு பேர் காலையிலே நம்ம வீட்டுக்கு வந்தாங்க. நான் குளிக்க வேண்டி இருந்தது. அதுக்குள்ளாற உங்களைப் பார்த்துட்டு வரட்டும்னு அவர்களை இங்கே அனுப்பி வச்சேன். வந்தாங்களா."

"ஓ... வந்தாங்க. ஆனால் அவங்க யாரும் உங்களைத் தண்டிட்டு வந்ததாகச் சொல்லல்லை. பணம் கொடுத்ததும் ரசீது போட்டுக் கொண்டு ரயிலைப் பிடிக்கணும்னு கிளம்பிட்டாங்க."

“அப்...படியா... எந்த ரயில்னு சொன்னாங்களா?”

“குருவாயூர்னு சொன்னாங்க.”

“குருவாயூர் எக்ஸ்பிரஸ் இரண்டு மணிக்குத்தான்” என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டே அகமதுஷா, “நான் உடனே அவர்களைப் போய்ப் பார்க்கணும். வர்றேன் பாய்...” என்று அந்த நண்பரிடம் விடைபெற்றுக் கொண்டார்.

ரயில் நிலையத்தின் வாயிலிலேயே அவர்களைப் பார்க்க முடிந்தது.

ஆனால் அவர்கள் முகத்தில் இனம்தெரியாப் பதற்றம்.

இரு சக்கர வாகனத்தை நிறுத்தி விட்டு, சிரித்த கண்களுடன் அவர்களுக்குச் சலாம் சொன்னார், அகமதுஷா.

பதில் மரியாதை செய்த இருவரும் “உங்களைப் பார்க்காமல் வந்து விட்டோம். எங்களை மன்னிச்சுடுங்க ஜீ....” என்று ஒருசேர கிறங்கிப் போனார்கள்.

அகமதுஷா “இதில் மன்னிக்க ஒன்றுமே இல்லை. ஏதோ உங்களுக்கு அவசரம். வந்துட்டீங்க” என்று புன்னகைத்தார்.

“இல்லை பாய், நடந்தது என்னவென்று உங்களுக்குத் தெரியாது” நொந்த குரலில் தலைகுனிந்தார் கறுப்புத் தொப்பி.

“எனக்கு நன்றாகத் தெரியும். நீங்கள் கடைசி வீட்டுப் பாயைப் பார்த்துட்டு டாக்சி பிடித்து ஜங்ஷனுக்கு வந்தீங்க. வழியிலே சாப்பிடணும்னு ஹோட்டலிலே இறங்கிட்டு டாக்சியை அனுப்பிச்சுட்டீங்க... தில்லை நகரிலே இருந்து ஜங்ஷனுக்கு ஐந்து நிமிஷத்துக்கொரு பஸ் இருக்கு. இருந்தும்... அவசரப்பட்டு டாக்சி பிடிச்சிருக்கிறீங்க...

“அந்த டாக்சியிலே உங்க ஹேண்ட் பேக் தவறிடுச்சு. எடுக்க மறந்துட்டீங்க. அந்த பேக்கிலே கொஞ்சப் பணம்... நீங்கள் வசூலுக்குப் போக வேண்டிய உங்க பேரு... ஊரு... முகவரி எல்லாம் இருந்திருக்கு. டாக்சி டிரைவர் அதை உங்களிடம் ஒப்படைக்க அந்த ஹோட்டலுக்கு வந்திருக்கிறார். ஆனால், உங்களைப் பார்க்க முடியல்லை. உங்களிடம் எப்படியும் அந்தப் பேக்கை கொடுத்திடணும்னு அவருக்குத் தேட்டம். பையைத் திறந்து பார்த்திருக்கிறார். அதிலே என் பேரும் முகவரியும் இருந்திருக்கு. நான் அந்தக் கடைசி வீட்டுப் பாயிடம் உங்களைப் பற்றி விசாரிச்சுட்டு வீட்டுக்கு வர்றப்ப டாக்சி டிரைவர் வீட்டு வாசலிலே நின்னுட்டிருந்தார். என்ன என்று விசாரித்தேன். விவரத்தைச் சொல்லி ஹேண்ட் பேக்கை என்னிடம் கொடுத்துட்டுப் போனார். இந்தாங்க அந்த ஹேண்ட் பேக்...”

வாகனத்தின் ஸீட்டைத் தூக்கி அப்பையை எடுத்துக் கொடுத்தார், அகமதுஷா.

அதைப் பெற்றுக் கொண்ட வெள்ளைத் தொப்பிக்காரர், “அல்லா உங்கள் மூலமா எங்களை ரொம்ப தண்டிச்சுட்டார், பாய்” என்று கண் கலங்கினார்.

“இல்லே. அல்லா அகாரணமாய் யாரையும் தண்டிக்கமாட்டார். பொதுநலனுக்குன்னு கிளம்பிட்டா சிக்கனமா தேவையறிஞ்சு நடந்துக்கணும் என்று அறிவிச்சுருக்கார். அவ்வளவுதான்...” என்று சிரித்துக் கொண்டே “இந்தாருங்கள்... உங்கள் புதிய பள்ளிவாசலுக்கு எனது சிறிய அன்பளிப்பு” என்று எழுதிக் கொண்டு வந்த வரைவோலையைக் கொடுத்தார், அகமதுஷா.

அதில் ‘புதுப்பள்ளி ஜமாத்’ பெயரில் ரூபாய் பத்தாயிரம் வரையப் பெற்றிருந்தது.

●

கட்டுரை

# மாநில சுயாட்சி ஒரே தீர்வு

கவிஞர் புவியரசு



**சி**லம்புச்செல்வர் ம.பொ.சி. அவர்கள் காங்கிரஸ் தலைவர்களில் ஒருவர். அவர் ராஜாஜி அணியில் இருந்ததால், தீரர் சத்தியமூர்த்தி அணியினர் அவரைச் சற்றுத் தள்ளியே வைத்தனர். எப்போதும் சுயமாகச் சிந்திக்கக்கூடியவர் ம.பொ.சி. அவர்கள்.

அறிஞர் அண்ணா தி.மு.க.வை உருவாக்கியதுபோல, ம.பொ.சி. தமிழரசுக் கழகத்தை உருவாக்கினார். தி.மு.க.வுக்கு அது சவால் விடுகிற அமைப்பாக இருந்தது. தமிழரசுக் கழகம் தொடங்கிய காலத்தில் அதனைக் காங்கிரஸ் கட்சியின் கலாச்சார மையம் என்று விளக்கம் அளித்தார் ம.பொ.சி.

ஆனால், காங்கிரஸ் தலைவர்கள் அதை ஒத்துக்கொள்ளவில்லை. அதைத் தனிக்கட்சியாகவே கருதி ம.பொ.சி.யைக் காங்கிரஸ் கட்சியை விட்டு நீக்குவதற்கு அதைக் காரணமாக்கிக் கொண்டார்கள்.

ம.பொ.சி. அவர்களோ அதற்காக வருத்தப்படாமல், துணிச்சலாகத் தன் கருத்துக்களை மக்கள் மத்தியில் பரப்பினார். தமிழரசுக் கழகம் என்பது இந்தியக் கூட்டமைப்புக்கு எதிரானது அல்ல என்றார். அக்கூட்டமைப்பில் தமிழகம் சுயநிர்ணய உரிமை கொண்ட சுயாட்சி மாநிலம் என்று அழுத்தமாகச் சொன்னார்.

சுய நிர்ணயம் என்பது ஓர் உரிமை. இந்தியக் கூட்டமைப்பில் தொடர்வதா, துண்டித்துக் கொள்வதா என்று தீர்மானிக்கிற உரிமை அது. இந்தச் சிந்தனையோட்டத்தில்தான் சுயாட்சி என்ற வார்த்தையை உபயோகித்தார்.

சுயாட்சி என்ற இச்சொல்லாக்கப்படி எல்லாவற்றிலும் சுயமாக முடிவெடுக்கக்கூடிய ஒரு மாநில அரசாகத் தமிழக அரசு இருக்க வேண்டும் என்பதுதான் அவர் ஆசை. மத்திய அரசுக்கு மாநில அரசு ஊழியனாக இல்லாமல் உற்ற நண்பனாக இருப்பதுதான் சுயாட்சி.

நாட்டின் சுதந்திரத்திற்கு முன்பே, ம.பொ.சி. இதைச் சிந்தித்துள்ளார். அதுதான் இதனுடைய சிறப்பு.

தி.மு.க. சார்பில் முரசொலி மாறன் எழுதிய 'ஏன் வேண்டும் திராவிட நாடு?' என்ற நூல்கூட, ம.பொ.சி.யின் சுயாட்சியைக் கவனத்தில் வைத்து உருவாக்கப்பட்ட நூல்தான்.

இன்றைக்கும் சுயாட்சி சிறப்பானதுதான் என்பதைக் காணவேண்டுமானால், ஒரே ஓர் அண்மைக்கால உதாரணம் போதும். பக்கத்திலிருக்கிற கர்நாடக மாநிலம் தன் மாநிலத்திற்கென்று மாநிலப் பாடலையும், மாநிலக் கொடியையும் உருவாக்கியுள்ளது. எவ்வகையிலும் தேசியக் கொடிக்கும், தேசிய கீதத்திற்கும் இவை எதிரானவை என்றும் விளக்கப்பட்டுள்ளது.

கொடி, பாடல், கலாச்சாரம், கல்வி, மொழி ஆகிய அனைத்திலும் முடிவெடுக்கக்கூடிய உரிமை மாநில அரசுக்கே முழுமையாக உண்டு என்பதுதான் சுயாட்சி. இதையெல்லாம் விளக்கித்தான் 'இளந்தமிழன்' இதழில் வெளியான அறிஞர் ம.பொ.சி.யின் கட்டுரை, இந்த இதழில் இடம்பெற்றுள்ளது. இது அரியதொரு மூல ஏடு. இதற்கு உரை கண்டிருப்பவர் கவிஞர் புவியரசு.

– இ.ஆர்.

**'ச**கல உரிமைக்களும் மக்களுக்கே' என்னும் அடிப்படையில், உருவான சுயாட்சித் தத்துவம் முதன் முதலாகத் தமிழகத்தில் அறிமுகப்படுத்திய தீர்க்க தரிசியான, சிந்தனையாளர் சிலம்புச் செல்வர் ம.பொ. சிவஞானம் என்ற மாமனிதர்.

இது காந்தியடிகளின் கிராம சுயாட்சியையும், லெனினின் சோசலிசக் கூட்டமைப்பையும் ஆதாரமாகக் கொண்டது.

காந்தியடிகள் இதைச் செயல் முறைப்படுத்தும் திட்டத்தின் முதற்படியாகத்தான் காங்கிரஸ் கட்சியை (தேசத்தை அல்ல) மொழிவாரி மாகாண அமைப்பாகப் பிரித்தார். மொழியின் உயிராற்றலை உணர்ந்த மகான் அவர்.

ஒரு கிராமம் தனக்கென 'எடுத்துக்

கொண்ட' உரிமைகள் போக, மிச்சத்தையே நகருக்குக் கொடுக்கும்; நகரம் தனக்கான உரிமைகளையும் கடமைகளையும், எடுத்துக் கொண்டுதான் மிச்சத்தைத் தலைநகருக்குக் கொடுக்கும். ஒரு மாநிலம் தனக்கான சகல உரிமைகளையும் எடுத்துக் கொண்டு மிச்ச சொச்சத்தையே மத்திய அரசுக்கு 'விட்டுக் கொடுக்கும்!'

மாநிலங்களின் சொற்படியே மத்திய அரசு நடக்கும்! அது அதிகார மையம் அன்று. ஒரு மத்திய அலுவலகம் மட்டுமே! அது மாநிலங்களைக் கண் காணிக்க கவர்னர்களை அனுப்ப முடியாது! அந்த உரிமை அதற்கில்லை! மாநில அரசுகளே மத்திய அலுவலகத்தைக் கண்காணிக்கும்!

எல்லா மாநிலப் பிரச்சினைகளையும், மற்ற மாநிலங்களோடு பேசித் தீர்த்துக் கொள்ளும். 'நீ தண்ணீர் கொடுத்தால் மட்டுமே நான் மின்சாரம் கொடுப்பேன்' என்பது போல!

ராணுவம், அயல்நாட்டு உறவு, தகவல் தொடர்புகள், நாணயம் ஆகிய நான்கு மட்டுமே மத்திய அரசின்வசம் இருக்கும்.

மாநில இயற்கை வளங்கள், அந்த மாநிலத்திற்கே உரியவை. "இது ஓர் ஆலயத்தின் அமைப்பு. அடி பருத்து, நுனி சிறுத்து! ஆனால், கோபுரக் கலசம் போல, அலங்காரமாக, வணக்கத்திற்குரியதாக இருக்கும்! என்று தெளிவுபடுத்தியவர் ம.பொ.சி.

நாடு விடுதலை அடைவதற்கு முன்பே விடுதலை பெறப் போகும் நாடு எப்படி எந்த அடிப்படையில் இருக்க வேண்டும் என்று வகுத்துச் சொன்ன தீர்க்கதரிசி அவர்.

நாட்டு விடுதலைக்கான போரில் வடஇந்திய அமராவதிச் சிறையில் இந்த ஞானக் கருத்து அவருக்கு உதித்தது.

தீவிரக் காந்தியவாதியான அவர், 'சுயநிர்ணய உரிமை பெற்ற சுதந்திர சோசலிசத் தமிழ்க் குடியரசு' என்று பிரகடனப்படுத்தி, அதன் உள் அம்சங்களைத் தெளிவாக வகுத்துச் சொன்னவர்.


காந்திஜி


திரு.வி.க.

'தலைகொடுத்தேனும் தலைநகரைக் காப்போம்' என்று நாடெல்லாம் முழங்கி சென்னையை மீட்டவர். 'தன்னாட்சி என்பது தனியாட்சியன்று' என்று தெளிவுபடுத்தியவர். தமிழ் காக்கத் தெருவில் இறங்கிப் போராட இயக்கம் கண்டவர். அதற்காக எட்டு முறை சிறை சென்றவர்.

'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்' என்ற இலக்கியத்தை ஓர் இயக்கம் ஆக்கியவர். தமிழருக்கு வீர பாண்டியக் கட்டபொம்மனையும், கப்பலோட்டிய தமிழன் வ.உ.சி.–யையும் அறிமுகப்படுத்தியவர். தமிழர் தெய்வம் கண்ணகி எனச் சமயப் போராட்டங்களுக்கிடையில் ஒற்றுமை காண முயன்றவர்.

மூன்றாம் வகுப்புக்கூடப் படிக்க முடியாத வறுமைக் குடியில் பிறந்து சுயமாகக் கற்ற, அறிஞர்களும் போற்றும் வண் ணம் *150* ஆய்வு நூல்களை எழுதியவர்.

உலக நாடுகளின் நடைமுறை போல, எங்கும் தாய் மொழி, எதிலும் தாய்மொழி எனத் திட்டம் வகுத்தவர் அவர்.

இந்திய யூனியன் தொடர்புக்கு இந்தியும், உலகத் தொடர்புக்கு ஆங்கிலமும் – தொடர்பு மொழிகளாக மட்டும் இருக்கும். ஆட்சி மொழிகளாக அல்ல. தாய்மொழியே பயிற்று மொழி. உலகில் எங்கும் அப்படித்தான்.

தன்மானம் உள்ளவன் தனது தாய் மொழியைப் புறக்கணித்து, வேறு எந்த மொழிக்கும் முதன்மை கொடுக்க மாட்டான் தமிழனைத் தவிர. 'தமிழனைப் போல் தாய்க் கொலையில் தலைசிறந்தார் எவருளரே?" என்று நொந்து போய்ப் பாடினார் 'தமிழ்த் தென்றல்' திரு.வி.க.

ஓர் இனம் தனது சுயஉரிமையை நிலை நாட்டுவது வேறு எந்த இனத்திற்கும் எதிரான தன்று. தாய்மொழி, தாய்மண் சம்பந்தப்பட்டது. அது அவன் பிறந்து, விழுந்து, தவழ்ந்து, விளையாடி, நடந்த காலடியில் அவனைத் தாங்கி நின்று, தாய்மடியாய் வளர்த்தது.

அந்த மண் அவனுக்கு மட்டுமே சொந்தம். அதைக் காக்க அவன் எந்த எல்லைக்கும் போவான்; போகலாம், போக வேண்டும்.

ஒரு சான்று சொல்ல வேண்டும். அது புறச்சான்று. கேரளச் சான்று.

கேரளீயர்கள் உணர்ச்சிமிக்கவர்கள் என்று சொல்வதை விட, சொரனை யுள்ளவர்கள் என்பதே சரியான கணிப்பு.

எந்தச் சமுதாயச் சிக்கலுக்கும் தெருவில் இறங்கிப் போராடும் இனம் அது. சாதாரண அடித்தட்டு மக்களிலிருந்து, நாட்டின் புகழ்மிக்க கவிஞர்கள், எழுத்தாளர்கள், ஓவியர்கள், கலைஞர்கள் என அனைவரும் தெரு வில் இறங்கக் கூடியவர்கள்.

சான்று – தாய்மண்ணில் குழாய் பதித்து நீரை உறிஞ்சி எடுத்து, சிசாவில் அடைத்து அவர்களிடமே விற்பவர்கள் உயர்விலை வணிகர்கள்.

அவர்கள் செயலால் சுற்றுப்புறம் மாசுபட்டதோடு சுற்றுப்புறச் சிற்றூர்களின் கிணறு, குளம் முதலிய நீர் நிலைகள் வற்றின. மக்கள் வெள்ளம் திரண்டெழுந்தது. போராடியது. கேரள வழக்குமன்றம் மக்களுக்கு எதிரான தீர்ப்பு வழங்கியது!

மக்கள் உச்சநீதி மன்றம் சென்றார்கள். அரசின் சுயநலச் சார்பையும், வழக்குமன்ற அநீதியையும் உச்சநீதி மன்றம் தவிடு பொடியாக்கியது.

"கிராமப் பஞ்சாயத்தின் தீர்ப்புக்கு மேல் எந்தத் தீர்ப்பும் செல்லாது. அதுவே உச்சநிலைத் தீர்ப்பாகும்" என்று தீர்ப்பளித்தது. அது காந்திநெறித் தீர்ப்பு!

கள்ளம்கபடமறியாத கிராமத்து மக்கள் விருப்பமே வென்றது. அந்தத் தண்ணீர் சுரண்டும் ஆலை அங்கிருந்து அகற்றப்பட்டது – இது சுயநிர்ணயக் கோட்பாட்டிற்குக் கிடைத்த வெற்றி. சுயாட்சியின் ஒரு வெற்றிப் படி அது. லெனின், காந்தி, பெரியார் முதலிய பெருமக்கள் பெற்ற வெற்றி அது.

ஒரு மொழி பேசும் அமெரிக்காவில் (யு.எஸ்) ஒவ்வொரு மாநிலமும் தனிக் கல்விக் கொள்கை வகுத்துக் கொள் கிறது. 'கவுண்ட்டி' என்று குறிப்பிடப்படும் சிறு வட்டாரத்துக்கும் கூட இந்த உரிமை உண்டு.

இங்கே 'நீட்' தேர்வு அனைவர் மீதும் திணிக்க எந்த மத்திய அரசுக்கும் உரிமை இல்லை. வெவ்வேறுபட்ட வளர்ச்சி நிலைகளில் உள்ள அனைத்து மாநிலங்களையும், ஒரு கோல் கொண்டு அளப்பது தவறு.

'இந்தியா' ஒரு நாடு அல்ல. ஒரு துணைக்கண்டம். பல மொழி, இன வேறுபாடு கொண்ட நாடுகளின் கூட்ட மைப்பு. இதை வைத்து ஒரு பஞ்சாமிர்தம் செய்ய முயல்கிறது மத்திய அரசு. அது கசக்கும்.

இதைத் தெளிவாகச் சிந்தித்து சுயமரியாதை காக்கப் போராடும் காலம் வந்துவிட்டது.

## மாநில சுயாட்சிக் கிளர்ச்சி வரலாறு

**– 'சிலம்புச் செல்வர்' ம.பொ. சிவஞானம்**

"எனது கற்பனையிலிருந்த 'புதிய தமிழகத்'திற்கான பிரச்சாரத்தை முதன் முதலில் நான் தொடங்கியது திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டையில் ஆகும். 1945 ஜூன் 26–ஆம் நாளிலே, திருச்சி மலைக்கோட்டை யிலே, அப்போது இந்து அறநிலையத் துணை ஆணையராக இருந்த திரு. சண்முகசுந்தரம் (போராசிரியர் ம.ரா.போ. குருசாமி அவர்கள் தமையனார்) அவர்கள் கூட்டிய இலக்கியக் கூட்டத்தில், 'புதிய தமிழகம்' என்னும் தலைப்பிலே பேசினேன். அந்தக் கூட்டத்திற்கு நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம்பிள்ளை அவர்கள் தலைமை வகித்தார்.


ம.பொ.சி.

எனது பேச்சிலே தமிழக சுயாட்சிப் பற்றி வற்புறுத்தினேன். சுயாட்சி பெற்ற தமிழகம் இந்திய சமஷ்டியில்


காமராஜர்


ராஜாஜி

நிலைத்திருக்கும் என்றும் உறுதி கூறினேன். தென்னிந்திய மாநிலங்கள் ஒரு துணைச் சமஷ்டியாக இருக்க உரிமை வழங்கப்பட வேண்டுமென்றும் கூறினேன்.

மலைக்கோட்டைக் கூட்டத்திலே சுமார் ஒன்றரை மணி நேரம் நான் காண விரும்பும் புதிய தமிழகம் பற்றி விரிவுரையாற்றினேன். அந்தப் பேச்சு சுருக்கமாக 'சுதேச மித்திரன்' நாளிதழில் வெளியானது.

எனது பேச்சு காங்கிரஸ் வட்டாரத்திலே பெரிய பரபரப்பை ஏற்படுத்தியது. அந்நாளில் திராவிடர் கழகம் (அப்போது தி.மு.க. தோன்றவில்லை) திராவிடத் தனி நாடு கோரி வந்ததால், எனது மலைக்கோட்டைப் பேச்சைச் 'சுதேசமித்திரனில்' படித்த காங்கிரஸ்காரர்கள், 'கிராமணியார் கருப்புச் சட்டைக்காரர்களோடு கலந்துவிட்டார்' என்று பிரச்சாரம் செய்தார்கள்.

அவர்கள், எனது தேச பக்தியையே ஐயுற்றனர். ஆகஸ்டுக் கிளர்ச்சியில் ஈடுபட்டு நான் அடைந்த இன்னல்களையெல்லாம் மறந்தனர்.

அதேநேரத்தில், ஜஸ்டிஸ் கட்சிக்காரரான திரு. பி. பாலசுப்பிரமணியம் அவர்கள், தம்மால் நடத்தப்பட்டு வந்த 'சண்டே அப்சர்வர்' (Sunday Observer) என்ற ஆங்கில வார இதழிலோ, எனது மலைக்கோட்டைப் பேச்சையொட்டி விரிவான விமர்சனம் எழுதியிருந்தார். அதிலே, நான் திராவிட நாட்டுப் பிரிவினைக்கு ஆதரவு காட்டுவதாக அவர் வலிந்து பொருள் கூறியிருந்தார். எனது பேச்சு திராவிடர் கழகத்தின் வெற்றி என்று வருணித்தார்.

நான் மலைக்கோட்டையிலே 'புதிய தமிழகம்' பற்றிப் பேசியபோது, இந்திய விடுதலைப் போர் முடியவில்லை. தேசப் பெருந்தலைவர்களிலே பலர் சிறையில் இருந்தனர். ஏகாதிபத்தியம் விரைவில் வெளியேறுமோ, நிலைத்து விடுமோ என்றெல்லாம் அரசியல் வட்டாரத்திலே ஐயம் நிலவிய காலம் அது.

அந்நாளில், காங்கிரஸ்காரர்கள் அரசியலில் 'வைதிகர்'களாக இருந்தனர். திராவிடர் கழகம் பற்றி நெஞ்சால் நினைப்பதைக்கூட தேசத் துரோகமாகக் கருதினர். ஆம், அவ்வளவு வைதிகம்! அந்த நிலையிலே, நான், தமிழகத்திற்குச் சுயாட்சி கோரியதன்றி, திராவிடர் கழகம் கோரும் நான்கு மொழிப் பிரதேசத்தை இந்திய சமஷ்டிக்குட்பட்ட துணைச் சமஷ்டியாகவும் ஏற்க முன்வந்தேனென்றால், காங்கிரஸ்காரர்கள் பொறுப்பார்களா?

அப்போது நான் ராஜாஜி கோஷ்டியில் இருந்தேன். அதனாலும், காமராஜ் கோஷ்டிக் காங்கிரஸ்காரர்கள் எனது சுயாட்சிப் பிரச்சாரத்தைக் காரணம் காட்டி, காங்கிரசிலிருந்தே என்னை விரட்டிவிடவும் முயன்றனர்.

காங்கிரஸ்காரர்களின் எதிர்ப்பு கண்டு நான் கலங்கிவிடவில்லை. மாறாக, எனது கொள்கையில் உறுதி கொண்டு, அத்துறையில் தீவிரமாகப் பிரச்சார முரசு கொட்ட விரும்பி, 'தமிழ் முரசு' என்ற மாதப் புத்தகம் வெளியிடத் திட்டமிட்டேன். அப்போது புதிதாகப் பத்திரிகை வெளியிட அனுமதி கிடைக்காத



நிலை இருந்ததால், 'புத்தகம்' என்ற பெயரில் மாத வெளியீடு நடத்தத் திட்டமிட்டேன்.

'தமிழ் முரசு' முதல் புத்தகம் 1946 மே மாதம் வெளியானது. அதில் 'தமிழகத்தில் தமிழரசு' என்ற தலைப்பிட்டு நான் எழுதிய சிறப்புக் கட்டுரையிலே, நான் காண விரும்பும் 'புதிய தமிழகம்' பற்றி விரிவாக விளக்கியிருக்கிறேன். அதன் இறுதிப் பகுதி வருமாறு :

"... தமிழர் இன்றைய சீர்கெட்ட நிலையிலிருந்து மாறிச் சிறப்படைய வேண்டுமானால், வருங்காலச் சுதந்திர இந்தியாவில் சுதந்திரத் தமிழரசு அமைத்தே தீர வேண்டும்.

"தமிழ் வளர, தமிழர் வாழ, தமிழ் நாடு செழிக்கத் 'தமிழரசு' வேண்டும். அத்தகைய சுதந்திர அரசியலை நிர்ணயிக்கும் சுயநிர்ணய உரிமை தமிழருக்கு உண்டு.

"இந்தக் கொள்கை சமரச முறையில் ஒப்புக்கொள்ளப்பட்டு அமலுக்கு வருமானால், தமிழன் புதிய தமிழகத்தைக் காண்பான். பழைய தமிழரின் பண்பாடும், இன்றைய புதிய உலகத்தின் புத்துணர்ச்சியும் கொண்ட புதிய தமிழினத்தைப் படைப்பான். அந்தப் புதிய தமிழகத்தின் அமைப்பும், தமிழினத்தின் வாழ்வும் பின்வருமாறு இருக்குமென்று நான் கனவு காண்கிறேன்.

"தமிழ்நாட்டைத் தாய்நாடாகவும், தமிழ்மொழியைத் தாய்மொழியாகவும் கொண்டு வாழும் தமிழ்நாட்டின் நிரந்தரக் குடிமக்கள் அனைவரும் தமிழராகக் கொள்ளப்படுவர்.

"தமிழர் எங்கெல்லாம் பெருவாரியாக வாழ்கிறார்களோ அந்தத் தொடர்ச்சியான பிரதேசங்கள் தமிழ்நாடாகக் கொள்ளப்படும்.

"வயது வந்த வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் கூடித் தமிழகத்தில் சுதந்திரத் தமிழரசை அமைப்பர்.

"அந்தப் புதிய தமிழரசு தனியரசுத் தத்துவத்தையே அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்படும் என்றாலும், கடந்த கால சுதந்திரப் போராட்டத்தில் இந்திய தேசிய இனங்கள் அடைந்துள்ள ஒற்றுமையுணர்ச்சி, விஞ்ஞான வளர்ச்சி, சர்வதேச நிலை ஆகியவை காரணமாக, தமிழரசு, தானே தனதிஷ்டத்தின் மீது ஏனைய இன அரசுகளடங்கிய இந்திய சமஷ்டியில் இணைய வேண்டும்.


லெனின்

"புதிய தமிழகத்தின் பொருளாதாரக் கொள்கை பொதுவுடைமையே யன்றித் தனிவுடைமை அல்ல. இந்தப் பொதுவுடைமை இலட்சியமானது தமிழர் பண்பாட்டின்படியும், தற்கால விஞ்ஞான ரீதியாக வகுக்கப்பட்ட முறைகளின்படியும் நிறைவேற்றப்படும்.

"மத விஷயங்களில் அரசாங்கம் பூரண நடுநிலைமை வகிக்கும்.

"ஒடுக்கப்பட்ட மக்களை உயர்த்துவதிலேயே அரசாங்கம் தனது சக்தியை முதன்மையாகச் செலவழிக்கும்.

"மனிதனுக்கு மனிதன் உயர்வு தாழ்வு கற்பிக்கும் பழக்கவழக்கங்கள் சட்டப்படி தடுக்கப்படும்.

"ஏற்றமும் இழிவும் இல்லாத சமத்துவ குணத்தை ஊட்டும் கல்வி முறையையே சர்க்கார் பின்பற்றும்.

"சமயச் சார்பற்ற கலைகளை வளர்க்கும் பொறுப்பை அரசாங்கம் தானே மேற்கொள்ளும்.

"மேற்சொன்ன வகையில் ஒரு புதிய தமிழகத்தைச் சிருஷ்டிக்கத் தமிழரசு ஒன்றினால்தான் முடியும். அத்தகைய அரசு வேண்டுமென்று முரசு கொட்டுவோம்."

– பேரா. தி.வ. மெய்கண்டார்
('இளந்தமிழன்' – ஜனவரி, 2018)

# இரண்டு பாடல்கள்

## போர்வை எதற்கு?



குளிரில் நடுங்கும்
குடுகுடு கிழவருக்குப்
போர்த்திக் கொள்ளப்
போர்வை ஒன்றளித்தார்
அன்பர் ஒருவர்.
"நன்றாக உள்ளதே,
நாளை நீ இறுதிப் பயணம்
போகையில் போர்த்தப்
பொருத்தமாயிருக்கும்" என்று
வாங்கி உள்ளே
வைத்துக் கொண்டார் பாட்டி!

### தங்கப்பா



## விதைநெல் தேவை!



அன்றாடச் சோற்றுக்கு
அரிசி இல்லை.
அறுவடைக் களத்தில் தாத்தா
பிச்சை எடுத்துப் படிநெல் கொணர்ந்தார்.
"குத்திச் சோறு பொங்கு" எனக் கூறினார்.
"சோறா பெரிது? நாளை நாம்
வாங்கப் போகும் வயலில் விதைக்க
விதைநெல் தேவை" என்று
வாங்கி உள்ளே
வைத்துக் கொண்டார் பாட்டி!

# விவாதம்

# காவிரி மேலாண்மை வாரியம்

**கா**விரி பற்றி நினைத்தாலே காவிரியில் ஓடும் வெள்ளத்தையும்விட, கண்ணீர்தான் அதிகமாக வருகிறது. இந்தக் கண்ணீர் முப்போகத் துயரம் விளைவிக்கிற கண்ணீர். தஞ்சைத் தரணியை தார்ப் பாலைவனமாக்குகிற கண்ணீர்.

ஒருமுறை தஞ்சை மாவட்டத்திற்குள் பேருந்தில் சென்று பாருங்கள்; அந்த பூமி பாளம் பாளமாக வெடித்துக் கிடப்பதை. அந்தப் பூமிக்காரர்களோ, காலம் காலமாக நெல்லை மட்டுமல்ல கலை, இலக்கியம், இசையையும் வளர்த்தவர்கள். காரணம், தஞ்சையில்தான் தியாகையர் பிறந்த திருவையாறு உள்ளது. தஞ்சைதான் சங்கீத மேதைகள் மூவர் உருவான இடம்.

நவீனத் திரைப்படத்தில் தியாகராஜ பாகவதர், பி.யு. சின்னப்பா, சிவாஜி கணேசன், கலைஞர், ஜனாதிபதி வெங்கட்ராமன் எனப் பலர் உற்பத்தியான கேந்திரம் தஞ்சையும், திருச்சிராப்பள்ளியும்.

ஏறக்குறைய 14 லட்சம் ஏக்கர் பரப்பளவிற்கு நெல் வயல். கல் என்பது கண்ணுக்குத் தெரியாது. ஆனால் அங்குதான் கல்லணை, தஞ்சைப் பெருவுடையார் கோயில், கங்கைகொண்ட சோழபுரம் எல்லாம் கல்லினால் உருவானவை.

இத்தகைய சிறப்பு வாய்ந்த காவிரிப் படுகையைத் தமிழகம் இழக்க முடியுமா? சிலப்பதிகாரத்தை உருவாக்கிய இளங்கோவடிகள் இந்தக் காவிரியைத் தன் மகளாகவே பாவித்து “நடந்தாய் வாழி காவேரி” என்று பாடுவார். இத்தகைய காவிரியை நாம் இழப்பது என்றால், இந்தியாவிற்குள் நாம் இருப்பதே மெத்தச் சிரமமாகி விடும். இப்படித்தான் வட வேங்கடமாகிய திருப்பதியை இழந்தோம். இழக்கத்தக்க சொத்தா அது? அதுபோல, இந்தக் காவிரியும் நம் கையைவிட்டுப் போய்விடுமோ என்ற கவலையும், கண்ணீரும் நம்மை அரிக்கிறது.

மைசூர் மன்னருக்கும், சென்னை ராஜதானி பிரிட்டிஷ் அரசுக்கும் 1924–இல் காவிரியை ஓர் ஒப்பந்தம் போட்டுச் சம்பந்தப்படுத்தினார்கள். அப்போது மைசூர் பிராந்தியத்தில் கிருஷ்ணராஜ சாகர் அணையைக் கர்நாடகா கட்டிக் கொள்வதென்றும், அதற்கு இணையாக மேட்டூர் அணையைத் தமிழகம் கட்டிக் கொள்வதென்றும் உருவாகியிருந்த ஒப்பந்தம் அது. 1924 ஒப்பந்தம் 50 ஆண்டுகளுக்குத்தான்.



1974–இல் அந்த ஒப்பந்தம் தன் ஆயுளை இழக்க இருந்தது. அதனால், அதை மறு உயிர்ப்புச் செய்வதற்காக 1972 முதலே முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட போது, முந்தியிருந்த காங்கிரஸ் ஆட்சியின் முதலமைச்சர் பக்தவத்சலம் 405 டி.எம்.சி. நமக்குத் தரப்பட்டால்தான்

அந்த ஒப்பந்தத்தைப் புதுப்பிக்க வேண்டும் என்றார்.

அவருடைய ஆட்சி முடிந்துவிட்டது. பிறகு அமைந்த கலைஞர் ஆட்சியில் அந்த ஒப்பந்தத்தைப் புதுப்பிக்கக் கேட்டபோது, "பக்தவத்சலமே அத்தனை பெரிய அளவு கேட்டிருக்கிற போது, நான் அதிகமாகத்தான் கேட்பேனே தவிர, குறைக்க மாட்டேன்" என்றார். அப்போதைய தகவல் உண்மையாக இருக்குமானால், கலைஞரிடம் 380 டி.எம்.சி. தருவதற்குக் கர்நாடக அரசு தூது வந்தது. தூரத்தில் நின்று அடக்க ஒடுக்கமாகவும் அதைச் சொல்லியது.

இப்படிப்பட்ட இழுபறி நிலையில்தான், ஒப்பந்தம் இல்லாமலேயே 1974 முதல் இன்றைக்கு 2018 வரை – ஏறக்குறைய முன்பிருந்த 50 ஆண்டுக்கால ஒப்பந்தத்திற்குச் சமமான காலத்தை – கடத்தி விட்டோம். இன்னும் முடிவுக்கு வர முடியவில்லை.

தமிழ்நாட்டிற்கும் கர்நாடகத்திற்கும் இருந்த அண்டை வீட்டு உறவு இதனால் கெட்டது. கர்நாடகத்தில் ஆட்சியைத் தக்க வைக்க வேண்டுமானாலும் எதிர்க்கட்சியைச் சிக்கவைக்க வேண்டுமானாலும், கர்நாடகத்தின் பிரகடனம் ஒன்றே ஒன்றுதான். "தமிழகத்திற்குத் தண்ணீர் தரமாட்டோம்" என்பதுதான். எதிர்க்கட்சியோ, தரமாட்டோம் என்று சொல்லாது, தரவே மாட்டோம் என்றுதான் சொல்லும்.

இப்படிப்பட்ட சித்து விளையாட்டுத்தான் கர்நாடகத்தின் அரசியலாகப் பலருக்குப் பிழைப்பைத் தந்து கொண்டிருக்கிறது. உண்மையில் கர்நாடகத்திற்குள் சென்று பார்த்தீர்களானால், துங்கா ஆறு, பத்ரா ஆறு, நேத்ராவதி ஆறு இவற்றிலெல்லாம் வற்றாமல் ஓடிக்கொண்டிருக்கிற தண்ணீர் எங்கே போகிறது தெரியுமா? அரபிக்கடலில்தான் சங்கமிக்கிறது.

இந்தப் பின்னணியில் காவிரிப் பிரச்சனை சம்பந்தமாக இரு மாநில அரசுகளும் மாறி, மாறி நீதிமன்றங்களில் வழக்குகளைத் தாக்கல் செய்தபிறகு, இந்த உபத்திரவத்தைத் தவிர்ப்பதற்காக உச்சநீதிமன்றம் காவிரி டிரிப்யூனல் என்ற நடுவர் மன்றத்தை அமைத்துப் பல ஆண்டுகளாகச் சிறப்பு நீதி மன்றத்தில் ஊழல் வழக்குகளை விசாரிக்கப்படுவது போல விசாரித்தது.

உச்சநீதி மன்றத்தின் அதிகாரத் தரத்தில் செயல்பட்ட நடுவர் மன்றம் (Tribunal) 2007–ஆம் ஆண்டு தமிழகத்திற்கு 192 டி.எம்.சி. தண்ணீரை வழங்கத் தீர்ப்பளித்தது. கர்நாடகத்திற்கு 270 டி.எம்.சி. எனத் தீர்ப்பு வழங்கியது. அது மட்டுமல்லாமல், விடுவிக்கப்படும் இந்தத் தண்ணீரைப் பிலிகுண்டுலு அணையிலிருந்து தமிழகத்திற்கு விட வேண்டும் என்றும், இதனைக் கண்காணிப்பதற்காகக் 'காவிரி மேலாண்மைக் குழு' ஒன்றை அமைக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டிருந்தது.

அதன்பிறகு, நடுவர் மன்றத்தின் தீர்ப்பை எதிர்த்து, உச்சநீதிமன்றத்தில் இந்த வழக்குத் தாக்கல் செய்யப்பட்டது. உச்சநீதிமன்றத்தின் தீர்ப்பு 2018 பிப்ரவரி 16–ஆம் தேதி வழங்கப்பட்டது. இந்தத் தீர்ப்பின் முக்கிய அம்சமே இரண்டுதான். ஒன்று, தமிழகத்திற்கு நடுவர் மன்றம் வழங்கிய தீர்ப்பின்படி தரப்பட வேண்டிய 192 டி.எம்.சி. தண்ணீர், 177.25 எனக் குறைக்கப்பட்டது. கண்காணிப்புக்குழு அமைப்பது.

இரண்டு, கர்நாடகத்திற்கு நடுவர் மன்றம் தந்த 270 டி.எம்.சி. தண்ணீரை 284.75 டி.எம்.சி. தண்ணீராக அதிகரித்து உச்சநீதிமன்றம் உத்தரவிட்டது. இவ்வாறு தமிழகத்துக்குக் குறைத்தும், கர்நாடகத்திற்கு அதிகரித்தும் உச்சநீதிமன்றம் வழங்கிய தீர்ப்பை நியாயப்படுத்துவதற்குத் தமிழ்நாட்டில் நிலத்தடி நீர் 20 டி.எம்.சி. அளவுக்கு உள்ளது என்று தமிழக அரசே ஒப்புக் கொண்டுள்ள தகவலை நீதிமன்றம் சுட்டிக்காட்டியது. அந்தத் தண்ணீரில் 10 டி.எம்.சி. தண்ணீரைத் தமிழக அரசு காவிரியில் எடுத்துக் கொள்ளலாம். அப்படிச் செய்தால், வித்தியாசமாக உள்ள 14.75 டி.எம்.சி. தண்ணீர், 4.75 டி.எம்.சி. அளவாகவே இருக்கும்.

கடந்த 50 ஆண்டுக்காலத்தில் பெங்களூரு மாநகரம் பல மடங்கு விரி

வடைந்து விட்டது. ஐ.டி. தொழில் நிறு வனங்களின் தலைநகரமாக விளங்கு கிறது. அதுமட்டுமல்ல, பெங்களூரு மாநகரத்தில் இந்தியாவிலுள்ள அனைத்து மாநிலங்களையும் சேர்ந்தவர் கள் கணிசமாக வசித்து வருகிறார்கள். அதனால், அது எல்லா மாநில மக்களும் வாழ்ந்து கொண்டிருக்கிற ஒரு பொது நகரம் ஆகும்.

அந்த நகரத்தின் குடிநீர்த்தேவை பல மடங்கு அதிகரித்துவிட்ட நிலை யில், அதன் தாகத்தைத் தீர்ப்பதற்காக இந்த 4.75 டி.எம்.சி. தண்ணீர் தரப்பட் டுள்ளதாகத் தீர்ப்புக் கூறியது.

உச்சநீதிமன்றத்தின் இந்தத் தீர்ப்பை எதிர்த்து மேல்முறையீடு 15 ஆண்டு களுக்குச் செய்ய முடியாது என்றும் தீர்ப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவற்றையெல்லாம்விட, அந்தத் தீர்ப்பில் உள்ள சிறப்பு, இந்தியாவி லுள்ள எந்த நதியையும் எந்த ஒரு மாநிலமும் உரிமை கொண்டாடக் கூடாது. அது தேசத்தின் பொதுச் சொத்து என்று குறிப்பிட்டுள்ளது.

இந்தத் தீர்ப்பில், நடுவர் மன்றம் அறிவித்த காவிரி நதிநீர் மேலாண்மை வாரியம் (Cauvery River Water Management Board) என்பது, காவிரித் திட்டம் (Cauvery Scheme) என்று மட்டுமே குறிப் பிட்டுள்ளதால், இது காவிரி மேலாண்மை வாரியம் அல்ல எனக் கர்நாடக அரசு வாதாடியுள்ளது.

தண்ணீரும் நமக்குக் குறைவாகத் தரப்பட்டுள்ளது. அந்தத் தண்ணீரும் மேலாண்மை வாரியத்தின்மூலம் முறை யாகவும், கட்டாயமாகவும் கிடைக்குமா என்றால், அப்படியும் இல்லை என்பது போல ஆகியிருக்கிறது. இதன்மூலம் கர்நாடக மாநிலம் ஒன்றை மறைமுக மாகத் தமிழகத்திற்கு அறிவுறுத்துகிறது. அது என்ன?

காவிரி நதியில் தண்ணீர் வெள்ளப் பெருக்கு ஏற்படும் காலத்தில் தமிழகத் திற்குத் தருவதில் ஆட்சேபமில்லை. ஆனால், தண்ணீர்ப் பற்றாக்குறையுள்ள வறட்சிக் காலத்தில் கர்நாடக விவசாயத் திற்குத்தான் அதைப் பயன்படுத்து வோமே தவிர, மிச்சமிருந்தால்தான் தமிழகத்திற்கு என்பதாகும்.

காவிரியில் உள்ள மொத்தத் தண் ணீர் 720 டி.எம்.சி. எனக் கணக்கிட்டு, அதன் அடிப்படையில்தான் உச்சநீதி மன்றமே இந்த நான்கு மாநிலங் களுக்கும் பாரபட்சமில்லாமல் பகிர்ந் தளித்துள்ளது.

உண்மையில் குடகில் உற்பத்தி யாகும் காவிரி, கர்நாடகத்திற்குள் 381 கி.மீ.தான் ஓடி வருகிறது. ஒகேனக்கலில் தமிழகத்திற்குள் நுழைந்து, வங்கக் கடலில் சங்கமிக்கிற தூரம் 421 கி.மீ. ஆகும். காவிரியின் மொத்த ஓட்ட தூரம் 802 கி.மீ.இல், தமிழகத்தில் ஓடும் தூரம்தான் அதிகம். குறைந்த தூரம் ஓடும் கர்நாடகத்திற்கு 283.75 டி.எம்.சி. தண்ணீரும், அதிக தூரம் ஓடும் தமிழகத் திற்கு 177.25 டி.எம்.சி. தண்ணீர் என் பது பாரபட்சமல்லவா?

நதிப்படுகையின் பாசன உரிமை (Riparian Rights) என்பது உலகம் முழு வதும் நிறுவப்பட்டுள்ளது. ஆற்றினு டைய பாத்தியதை அந்த ஆறு உற்பத்தி யான இடத்திற்கு மட்டுமல்ல, அது கடலில் கலக்கும் தூரம் வரை உள்ள அனைத்துப் பகுதிகளுக்கும் சமமாகப் பங்கிடப்பட வேண்டும் என்பதுதான்.

ஆனால் கர்நாடக அரசு, காவிரி யின் பிறப்பிடம் குடகாகி விட்ட இயற் கையின் அனுகூலத்தால், அதிக உரிமை

**காவிரி நடுவர் மன்றத் தீர்ப்பின்படி வழங்கப்பட வேண்டிய நீரின் அளவு**

“5.2.2007-இல் காவிரி நடுவர் மன்றத்தின் இறுதித் தீர்ப்புப்படி மாதக் கணக்கீட்டில் கர்நாடகம் அளிக்க வேண்டிய நீரின் அளவு ஜூன் – 10 டி.எம்.சி., ஜூலை – 34, ஆகஸ்ட் – 50, செப்டம்பர் – 40, அக் டோபர் – 22, நவம்பர் – 15, டிசம்பர் – 8, ஜனவரி – 3, பிப்ரவரி – 2.5, மார்ச் 2.5, ஏப்ரல் – 2.5, மே – 2.5 என மொத்தம் 192 டி.எம்.சி நீரை, மாதம் 10 நாள்கள் இடைவெளியில் வழங்க வேண்டும்.”

2018 பிப்ரவரி 16–இல் வெளியான உச்சநீதி மன்றத் தீர்ப்பில் இந்த அளவுகோல்கள் காவிரி மேலாண்மை வாரியத்திடம் ஒப்படைக்கப்பட்டிருக்க லாம். எப்படியானாலும் பாசனநீர் தமிழகத்திற்கு இந்த அளவுகளில் தொடர்ந்து கிடைத்தால்தான் தஞ்சைத் தரணியைக் காப்பாற்ற முடியும்.

கொண்டாடுகிறது. உலகச் சட்ட விதிகளையும் உச்சநீதிமன்ற வழிகாட்டுதல்களையும் மறுதலிக்கும் வகையில், காவிரி மேலாண்மை வாரியத்தை அமைப்பதற்குக்கூடத் தயங்குகிறது, தடுக்கிறது. இது அநியாயம், அக்கிரமம், அவமானம். என்ன செய்வது?

அனைத்து எம்.பி.க்களும் பதவி விலகிவிட்டால், இப்பிரச்சனையின்மீது அதிக ஊடக வெளிச்சம்தான் விழும். தமிழகத்தைச் சேர்ந்த மக்களவை, மாநிலங்களவையைச் சேர்ந்த 54 எம்.பி.–க்களும் பதவி விலகலாம். இதற்குப் பதிலடி கொடுக்கும் வகையில் கர்நாடக எம்.பி.க்களும் பதவி விலகத்தான் செய்வார்கள். தமிழகத்திற்குத் தண்ணீர் தரக்கூடாது என்பதில் கட்சி பேதமில்லாமல் கர்நாடகாவில் எப்போதுமே கட்டித்தழுவிக் கொள்கிறார்கள்.

ஆனால் நாமோ, ஒருமுறைகூட நமது ஒற்றுமையைக் காட்டவில்லை. முதலமைச்சர் எடப்பாடி கே. பழனிச்சாமி, எதிர்க்கட்சித்தலைவர் ஸ்டாலினோடு ஒத்துழைத்து அனைத்துக் கட்சிக் கூட்டத்தைத் தலைமைச் செயலகத்தில் நடத்தியது, காவிரிப் பிரச்சனையில் நாம் வெற்றியே பெற்றது போலத் தோன்றியது. இது தொடர வேண்டாமா?

காவிரிப் பிரச்சனையில் தமிழக அரசின் இப்போதைய கோரிக்கை, 177.25 டி.எம்.சி. அல்ல, காவிரி மேலாண்மை வாரியம் அமைப்பது மட்டுமே என்றாகி விட்டது.

கர்நாடகாவில் சட்டப்பேரவைத் தேர்தல் அண்மையில் நடக்க உள்ளது. அதில் வெற்றிபெற வேண்டும் என்பதற்காக ஒருவேளை பி.ஜே.பி. உச்சநீதிமன்றத் தீர்ப்பை நிறைவேற்றுவதற்குத் தயங்குகிறதோ என்றும் எண்ண வேண்டியுள்ளது.

மத்திய பாசன நீர்வளத்துறைச் செயலாளர் யு.பி. சிங் அவர்களிடம் காவிரி மேலாண்மை வாரியத்தின் அதிகாரம் பற்றிக் கேட்டபோது, அவர் தந்த விளக்கம் 'தி ஹிண்டு' பத்திரிகையில் வெளியாகியுள்ளது.

இதுபோன்ற மேலாண்மை வாரியத்திற்கு உதாரணமாக இரண்டு முன் மாதிரிகள் இருப்பதாக யு.பி. சிங் குறிப்பிட்டுள்ளார். ஒன்று, பக்ரா – பியாஸ் நதிகள் கட்டுப்பாட்டுக்குழு. இன்னொன்று நர்மதா கட்டுப்பாட்டு ஆணையம்.

பக்ரா – பியாஸ் கட்டுப்பாட்டுக் குழுவின்படி, அந்தக் குழுவுக்குத்தான் அந்த அணைக்கட்டுகளை இயக்குவதற்கான அதிகாரம் உள்ளது. அதாவது, மதகுகளைத் திறப்பதற்கோ, மூடுவதற்கோ உரிய சாவி அந்தக் குழுவிடம்தான் இருக்கிறது.

நர்மதா கட்டுப்பாட்டு ஆணையத்தில் அந்த அதிகாரம் அரசுகளிடம் உள்ளது. அதாவது, மத்தியப் பிரதேசம் மற்றும் குஜராத் அரசுகள். இதனால், மேலாண்மைக் குழுவின் அதிகாரம் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. அப்படி இருந்தாலும், இரண்டு மாநிலங்களுக்கும் உரிய பங்கு கிடைப்பதாக சிங் குறிப்பிட்டுள்ளார்.

இந்த இரண்டு முன்மாதிரிகளிலிருந்து சற்று மாற்றிக் காவிரி மேலாண்மை வாரியத்தையே அமைப்பது பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடந்து வருவதாக உறுதி கூறினார்.

மேலாண்மை வாரியத்தைப் பக்ரா – பியாஸ் நதிகளுக்கிடையில் உருவாக்கப்பட்டுள்ளதைப்போல, சகல அதிகாரங்களும் காவிரி மேலாண்மை வாரியத்திடம் இருக்குமாறு அமைக்கப்பட்டு விடுமானால், அந்த வாரியம் தண்ணீரை உரிய காலங்களில் திறந்து விடுவதற்கு கர்நாடக மாநில அரசைக் கேட்டு விடுவிக்க வேண்டிய அவசியமில்லை. தமிழகத்திற்கு உரிய தண்ணீர் உரிய பருவத்தில் கிடைக்கும். அதற்காக நாம் கர்நாடக அரசிடம் கெஞ்ச வேண்டியதில்லை.

இதன் அடிப்படையில், காவிரி நீரைக் கபினி, ஹேமாவதி, சாரங்கி என்று சிறைப்பிடித்துள்ள நீர்ப் பதுக்கல்காரர்களிடமிருந்து விடுவித்து, அதனுடைய பங்காளிகளுக்குச் சமமாகத் தருவதற்கு உத்தரவிடக்கூடிய குழுவாக அது உருவாக வேண்டும். இதன் கையில்தான் அணைகளின் மதகுச் சாவிகள் இருக்க வேண்டும். இதற்குப் பயந்துதான் கர்நாடகம் இதை எதிர்க்கிறது.

வாசகர்களாகிய நீங்கள் இதைப் பற்றி என்ன எண்ணுகிறீர்களோ, அதை எழுதுங்கள் ஏப்ரல் 12–க்குள்.

**– பி.சி.**

# இம்மாத ராசி பலன்

**"என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்
என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!"**

'ஜோதிடத் திலகம்'
**க. தில்லையம்பலம்**

**1.4.2018 அன்று கோள்கள் நிலை**

| | | | |
|---|---|---|---|
| புதன் சூரியன் | சுக்கிரன் | | |
| | 14.4.2018 – சூரியன்–மேஷம்<br>19.4.2018 – சனி – வக்ர ஆரம்பம்<br>20.4.2018 – சுக்கிரன்–ரிஷபம் | | ராகு |
| கேது | | | |
| சனி செவ்வாய் | | குரு (வ) | சந்திரன் |

## மேஷம்



**மே**ஷ ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதி அலைச்சலும், சுப விரயமும், அமைதிக் குறைவும் ஏற்படுத்தும் விதமாக அமைந்துள்ளது. உறவினர்கள் வழியில் அதிருப்திகள் ஏற்படும் வாய்ப்புண்டு. புத்திர வர்க்கத்தாரால் செலவும் ஏற்படக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் சிந்தனைகள் பலவாறாக இருப்பினும் தெளிவு பிறக்கும். செவ்வாய் – சனி சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால் அதர்மமான காரியங்களில் இறங்க வேண்டாம். ஆனால், குரு 7–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் சில சுப காரியங்களில் தேக்க நிலை ஏற்படும். சிலர் இல்வாழ்வில் அதிருப்தி அடையவும் வாய்ப்புண்டு.

சூழ்நிலை காரணமாக அடுத்த 4 மாதங்களில் இட மாற்றங்கள் செய்ய வேண்டிய நிர்ப்பந்தங்கள் ஏற்படலாம். 20–ஆம் தேதி வரை சுக்கிரன் ராசி மீது சஞ்சரிப்பதால் நல்ல தோற்றத்தை வெளிப்படுத்துவீர்கள். இளமையுணர்வு அதிகப்படும். பகட்டான தோற்றத்தால் பிறரை உங்கள் வசப்படுத்தக்கூடும். ராகு 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பயணங்களில் சற்றுக் கவனம் வேண்டும். 10–இல் கேது சஞ்சரிப்பதால் செய்தொழிலில் பிரகாசம் ஏற்படச் சிறிது காலமாகும். புதிய முயற்சிகளில் இம்மாதம் இறங்க வேண்டாம்.

## ரிஷபம்



**ரி**ஷப ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் உத்தியோகம், தொழில் துறைகளில் திருப்திகரமான பலன்களே ஏற்படும். பொருள் வரவும் ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் வீண் செலவு, அலைச்சல் ஏற்படும். சனி, செவ்வாய் இணைவு பெற்று 8–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பிறரது செயல்கள் உங்களை ஆத்திரப்படச் செய்யும். சண்டை சச்சரவில் இறங்க முற்படுவீர்கள். கிரக சஞ்சாரங்கள் அனுகூலம் இல்லையென்பதால், உங்களை நீங்களே கட்டுப்படுத்திக் கொள்வது நல்லது.

குரு 6–ஆம் வீட்டில் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பது நல்லதே. சில எதிர்பாராத நன்மைகள் ஏற்பட வாய்ப்புண்டு. சுப காரியங்களும் ஈடேற திடீர் வாய்ப்புகள் வரலாம். நோய், நொடிகள் அகன்று சுகப்படுவீர்கள். கடன் தொந்தரவுகள் சிலருக்குத் தற்காலிகமாக இருக்காது. 3–இல் இராகு சஞ்சரிப்பதால் ஆஸ்தி, அந்தஸ்து சுபகிரக திசாபுத்தி நடைபெறுபவர்களுக்கு ஏற்படும். 9–இல் கேது சஞ்சரிப்பதால் ஆன்மீகப் பயணங்

களுக்கு ஏற்றது. சந்தர்ப்பம் உள்ளவர்கள் சென்று வரலாம். சுக்கிரன் 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் 20–ஆம் தேதி வரை உங்களது ஆடம்பரப் பொருள் களைப் பத்திரமாக வைத்துக் கொள்ளவும்.




**மி**துன ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் சூரியன் 10, 11–ஆம் இடங்களில் சஞ்சரிப்பதால் அனுகூலம் ஏற்படும். தொழில் உத்தியோகத் துறைகளில் மாற்றங்களும் ஏற்றங்களும் ஏற்படும் வாய்ப்புண்டு. பொருளாதார நன்மைகளும் ஏற்படும். பற்பல பொருள்கள் வாங்கும் யோகமுண்டு. பெரிய மனிதர்கள் நட்பும் நன்மையளிக்கும். சனி – செவ்வாய் 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் இல்லற வாழ்வில் சர்ச்சைகள் ஏற்படும். மிகவும் பொறுமையாக இருக்க வேண்டிய மாதம். தேவையற்ற சர்ச்சைகளால் சிலர் வாழ்க்கைத் துணைவருடன் கைகலப்பில் ஈடுபடுவர். கவனம் வேண்டும்.

இராகு 2–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் தேவையான காலகட்டங்களில் திறமையாகப் பொய்பேசிப் பிரச்சனைகளைச் சமாளித்து விடுவர். ஒரு சிலர் தேவையற்ற விஷயங்களில் பண முதலீடுகளைச் செய்து ஏன் இம்மாதிரியான காரியங்களில் இறங்கினோம் என வருத்தப்படுவர். கேது 8–இல் சஞ்சரிப்பதால் அவ்வப்போது சிற்சில உடல் உபத்திரவங்களும் ஏற்படும். குரு 5–ஆம் வீட்டில் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் அடுத்த 4 மாதங்களில் சிலர் இடம் பெயர்ந்து சென்று வாழக்கூடும். புதிய காரியங்கள் தொடங்க ஏற்ற மாதம். நன்மை உண்டு.




**க**டக ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் சூரியன் 9, 10–ஆம் இடங்களில் சஞ்சரிப்பதால் மாதத்தின் முற்பாதியில் காரியத் தடைகளும், மாதத்தின் பிற்பாதியில் தொழில், உத்தியோக வழியில் நன்மையும் ஏற்படும். புதிய முயற்சிகளில் இறங்கலாம். செவ்வாய் – சனி 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதாலும் ராசி மீது இராகு சஞ்சரிப் பதாலும் தற்காலம் கடக ராசி அன்பர்களுக்கு நற்பலன்கள் நடைபெறும் வாய்ப்புக் குறைவு. குறிப்பாக ஆயில்ய நட்சத்திரக் காரர்கள் துன்பம் அதிகம் அடைவர். எதிலும் கவனம் வேண்டும். உடல் நலத்தில் போதிய கவனம் வேண்டும். ஒரு சிலர் தங்கள் குழந்தைகள் மூலம் துன்பம் அடைவர்.

7–ஆம் வீட்டில் கேது சஞ்சரிப்பதால் இல்லற வாழ்விலும் திருப்திகரமான சூழ்நிலை நிலவாது. சுக்கிரன் 20–ஆம் தேதி வரை தொழில் ஸ்தலத்தில் பெண்களால் எதிர்ப்பை ஏற்படுத்தக்கூடும். 21–ஆம் தேதி முதல் சுக்கிரன் சிற்சில நன்மைகளையும் பெண்களால் உதவிகளையும் ஏற்படுத்தும் வாய்ப்புண்டு. குரு வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் வரும் 4 மாதங்கள் சோதனையானவை. சிலர் அவப்பெயரைச் சந்திக்க நேரிடும். திருமணம் முதலிய சுபகாரியங்கள் நடைபெறக் காலதாமதம் ஆகும். பொதுவில் நன்மைகள் குறைவு.




**சி**ம்ம ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் செலவினம் உண்டு. மாதத்தின் பிற்பாதியில் காரியத் தடைகள் ஏற்படும். எவ்விஷயத்திலும் திரும்பத் திரும்ப முயற்சி செய்தாலே காரிய சித்தி ஏற்படும். சுக்கிரன் 20–ஆம் தேதி வரை 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஒரு சிலர் தொலை தூரங்களுக்குப் பயணம் மேற்கொள்வர். 21–ஆம் தேதி முதல் சுக்கிரன் 10–ஆம் வீட்டில் சஞ்சரிக்க இருப்பதால், நிதி சம்பந்தப்பட்ட, விவசாயம் சம்பந்தப்பட்ட துறைகளில் இருப்பவர்கள் நன்மை அடைவர்.

இராகு 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் வயது முதிர்ந்தவர்கள் கண்களில் கோளாறுகள் ஏற்பட்டால் உடன் சிகிச்சை செய்து கொள்வது நல்லது. சுய தொழில் செய்வோர் போட்டியாளர்கள், ரகசிய எதிரிகளால் தொல்லைகள் அடையக்கூடும். கேது 6–இல் சஞ்சரிப்பதால் வயிற்றில் வலி ஏற்பட்டால் அலட்சியம் செய்யாமல் உடனே மருத்துவரை அணுக வேண்டும். குறிப்பாகப் பெண்கள் கவனமுடன் இருக்க வேண்டும். குரு வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், நிலுவைத் தொகைகள், நீண்ட நாள் பாக்கித் தொகைகள் கைக்கு வந்து சேரும். சனி – செவ்வாய் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், கைகளில் ஒரு சிலருக்கு உபத்திரவம் ஏற்படும். ஒரு சிலர் அரசாங்க உபத்திரவம், துணைவரால் உபத்திரவம் முதலியவற்றை அடையக்கூடும்.

## கன்னி



**க**ன்னி ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் 7–இல் சூரியன் சஞ்சரிப்பதால், வாழ்க்கைத் துணைவரால் செலவுண்டு. மாதத்தின் பிற்பாதியில் 8–இல் சூரியன் சஞ்சரிப்பதால் எதிர்பாராத சம்பவங்கள், செலவினங்கள் மூலம் கவலை ஏற்படும். சுக்கிரன் 20–ஆம் தேதி வரை 8–இல் சஞ்சரிப்பதாலும், 4–ஆம் வீட்டில் சனி – செவ்வாய் இணைவு பெற்றுச் சஞ்சரிப்பதாலும் பெற்றோருக்கு நல்லதல்ல. இராகு 11–இல் சஞ்சரிப்பதால் அவ்வப்போது ஏற்படும் பிரச்சனைகளை நண்பர் மூலம் நிவர்த்தி செய்து கொள்வீர்கள். அவ்வப்போது உதவிகளும் எதிர்பார்ப்பது போல் கிட்டும்.

2–இல் குரு வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், சுப காரியங்களில் அல்லது வேறு பல முயற்சிகளில் தடைகள் ஏற்பட வாய்ப்புண்டு. கேது 5–இல் சஞ்சரிப்பதால், எதையும் சுயமாக, சுதந்திரமாகச் சிந்தித்துச் செயல்படுவது நல்லது. திருமணம் முதலிய சுப காரியங்களை நிறைவேற்ற 4 மாதங்கள் ஆகலாம். புதிய முயற்சிகளை வரும் ஆனி மாதம் வரை ஒத்திப்போட வேண்டியது. ஆனி முதல் நன்மை ஏற்படும் வாய்ப்புண்டு. 4–இல் செவ்வாய் – சனி சஞ்சரிப்பதால், போக்குவரத்துக்களில் போதிய கவனம் வேண்டும்.

## துலாம்



**து**லாம் ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் சூரியன் 6, 7–ஆம் இடங்களில் சஞ்சரிப்பதால், மாதத்தின் முற்பாதியில் தொழில்வழி நன்மையும், புது முயற்சிகளில் அனுகூலங்களும், தன லாபமும், சத்ரு ஜெயமும் ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் நண்பர்கள், தொழில்வழிப் பிரமுகர்கள் சந்திப்பால் நன்மை ஏற்படும். சுக்கிரன் 20–ஆம் தேதி வரை 7–இல் சஞ்சரிப்பதால் எதிர்ப்பாலினத்தவர்களால் எதிர்ப்புகள் ஏற்படும். சிலர் மந்தையிலிருந்து ஆடு வழிதவறிச் செல்வதுபோல் செல்லவும் வாய்ப்புண்டு, கட்டுப்பாடு அவசியம்.

குரு வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், சுப விரயம், செலவு முதலியவை தவிர்க்க இயலாது. சனி வக்கிரம் பெற்று மீண்டும் 4 மாதங்கள் ஏழரைச்சனி நடைபெறுவதால், சற்றுத் தடுமாற்றமான சூழ்நிலைகள் காணப்படும். செவ்வாய் 3–இல் சஞ்சரிப்பதால், சகோதரவழி உறவுகள் மேம்பட வாய்ப்புண்டு. வழக்கு வியாஜ்ஜியங்கள் தொடங்க ஆர்வம் உள்ளவர்கள் தாராளமாக இறங்கலாம். காலப்போக்கில் வெற்றி கிட்டும். இராகு 10–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் தொழில் துறையில் மாற்றங்கள் செய்ய விரும்பினாலும் ஈடேறுவது கஷ்டம். 4–ஆம் வீட்டில் கேது சஞ்சரிப்பதால் இன்னும் 1 ஆண்டுக்காலம் குடும்பத்தில் அமைதி அவ்வப்போது சோதனைக்கு உள்ளாகும்.

## விருச்சிகம்



**வி**ருச்சிக ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் குழப்பம் ஏற்படும். முடிவெடுக்க இயலாது. புத்திர வழிச் சிந்தனைகள், புதிய தொழில் சிந்தனைகள் மனதில் தோன்றி மறையும். மாதத்தின் பிற்பாதியில் தொழில்வழி ஆதாயமும், பண வரவும், சகல காரிய அனுகூலமும், உடல் ஆரோக்கியம் கூடுவதும் உண்டாகக்கூடிய பலன்களாகும். சுக்கிரன் 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் சர்க்கரை நோய் உள்ளவர்கள் சற்றுப் பாதிப்படைவர். இளைஞர்கள் ஸ்பரிச உணர்வுகளுக்கு ஆட்பட்டுத் தவறுகளைச் செய்வர்.

சனி 2–இல் வக்கிரம் பெற்றுள்ளதால், பழைய பாக்கிகள் சிலருக்கு வசூலாகும். செவ்வாய் 2–இல் சஞ்சரிப்பதால் யதார்த்தமாக நீங்கள் நடந்து கொண்டாலும், தண்டச் செலவுகளைத் தவிர்க்க இயலாது. சிலருக்கு மது போதை மயக்கத்தால் மானக்கேடு ஏற்படும். குரு வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் நண்பர்கள் உறுதுணையாய் இருப்பர். சிற்சில நன்மைகளும், லாபங்களும் எதிர்பாராமல் கிடைக்கலாம். கேது 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், முயற்சிகள் பலிதமாகும். 9–இல் இராகு சஞ்சரிப்பதால் பயணங்கள் மேற்கொள்ளலாம்.

## தனுசு



**த**னுசு ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் சூரியன் 4, 5–ஆம் இடங்களில் சஞ்சரிப்பதால் பெரிதாக யோகப் பலன்களைச் சொல்வதற்கில்லை. மாதத்தின் முற்பாதியில் தேவையற்ற அலைச்சல், நடைப்பயணம், தேக ஆரோக்கியம் பாதிக்கப்படுதல், பெற்றோர்க்கு நலிவு முதலிய பலன்களையே ஏற்படுத்தக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் தடுமாற்றமான சிந்தனைகள் அதிகமாகலாம். அரசாங்கக் காரியங்களில் தடை ஏற்படும். செவ்வாய் இம்மாதம் முழுவதும் வக்கிரம் பெற்ற சனியுடன் சஞ்சரிப்பதால், அவ்வப்போது கலக்கம், கோபம், சிறு சிறு காயங்கள் அல்லது விபத்துக்களைச் சந்திக்க நேரலாம், கவனமாகத் தவிர்த்துக்கொள்ள வேண்டும்.

இராகு 8–இல் சஞ்சரிப்பதால், வெளியூர்ப் பயணங்களில் கவனம் வேண்டும். தற்சமயம் செய்யும் பணியில் அதிருப்திகள், ஆபத்துகள் இருப்பது போன்ற உணர்வுகள் ஏற்படும் வாய்ப் புண்டு. இருப்பினும், பொறுமையுடன் இருப்பது நல்லது. இரண்டில் கேது சஞ்சரிப்பதால் செல வினங்கள், முதலீடுகளில் போதிய கவனம் வேண் டும். குரு வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பது சிலருக் குக் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாத சூழ்நிலை கள் ஏற்படலாம். நண்பர்கள் வழியில் அதிருப்தி கள் ஏற்படலாம். சுப காரியங்களில் தற்சமயம் குறிப்பாக, வரும் 4 மாதங்களுக்கு இறங்க வேண் டாம்.

## மகரம்



**ம**கர ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதி அனுகூலமாகவே காணப்படுகிறது. தொழில், உத்தியோகத் துறைகளில் ஆத்ம திருப்தி ஏற்படும். பொருளாதார விஷயங்களிலும் திருப்தி நிலவும். மாதத்தின் பிற்பாதியில் உடல் நலிவுகள், அலைச்சல் முதலியவை ஏற்படும். சுக்கிரன் 20–ஆம் தேதி வரை வாகன சுகத்தையும், பின்னர் சில அதிர்ஷ்ட நிகழ்வுகளையும் ஏற்படுத்தக்கூடும். செவ்வாய் 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதாலும், வக்கிரம் பெற்ற சனியின் சேர்க்கை ஏற்படுவதாலும் தீயவர்களால் பொருள் இழப்பு ஏற்பட வாய்ப்புண்டு. சிலரது வீட் டில் திருட்டு முதலியவையும் ஏற்பட வாய்ப்புண்டு. ஞாபக மறதியாலும், பிரச்சனைகள் ஏற்படலாம்.

ராசி மீது கேது சஞ்சரிப்பதால், உங்களின் உள்ளுணர்வு அதீதமாகச் செயல்படும். கூடவே குழப்பமும் அதிகரிக்கும். 7–இல் இராகு சஞ்சரிப்ப தால், விதவைப் பெண்களால் அபவாதத்தைக் குறிப்பிட்ட ஒரு சிலர் அடைவர். 10–இல் குரு வக் கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், சுப காரியங்களில் தீவிரம் காட்டலாம். வரும் 3, 4 மாதங்களுக்குள் நிறைவேற வாய்ப்புண்டு. ஒரு சிலருக்குத் தூர தேசங்களிலிருந்து நல்ல செய்திகள் வந்தடையும். தொழில் துறையில் தற்காலிகமாக நம்பிக்கை அதிகரிக்கலாம். மாதத்தின் முற்பாதியில் புதிய முயற்சிகளில் இறங்கலாம்.

## கும்பம்



**கு**ம்ப ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் வாழ்க்கைத் துணைவரால் நன்மை ஏற்பட வாய்ப்புண்டு. பணத் தேவை கூடினாலும் சமாளித்து விடலாம். மாதத்தின் பிற்பாதியில் சூரியன் 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், காரிய ஜெயமும், தொழில் உத்தியோக நன்மையும், சுப காரிய ஈடுபாடுகளும் முயற்சி பலிதமும் ஏற்படும். உங்கள் ராசிக்குச் சித்திரை, மார்கழி, ஆடி, தை ஆகிய நான்கு மாதங்கள் எப்பொழுதும் நன்மை பயக்கும். மற்றவர்களுக்கு ஆகாது என்று கூறுவர். ஆனால், உங்களுக்கு மேற்கூறிய 4 மாதங்களே நல்லவை. சுக்கிரன் 20–ஆம் தேதி வரை சுக போகங்களை ஏற்படுத்தக்கூடும்.

சனி வக்கிரம் பெற்று 11–இல் சஞ்சரிப்பதால், பழைய பாக்கிகள் சிலருக்கு வசூலாகும். நண்பர் கள் மூலம் ஆதாயம் ஏற்படும். செவ்வாய் லாபஸ் தானத்தில் சஞ்சரிப்பதால், உத்தியோக லாபம், உயர்வு, விரும்பிய இடமாற்றங்கள் ஏற்படக்கூடும். 9–இல் குரு வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், சுப காரியங்கள் சிலவற்றில் தடை ஏற்படக்கூடும். 3, 4 மாதங்கள் அவ்வாறான நிகழ்ச்சிகளை ஒத்தி வைப்பது நல்லது. திருமண வாய்ப்பும் அவ்வாறே தடையாகலாம். புதியதாக ஏதேனும் தொடங்க விருப்பம் இருந்தால், சித்திரை மாதம் தொடங்க, தப்பாது வெற்றி ஏற்படும்.

## மீனம்



**மீ**ன ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் விவகாரங்கள், சுகவீனங்கள் ஏற்படக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் பண வரவு ஏற்படும். ஒரு சிலர் நிதி நிறுவனங்கள், வங்கிகள், காப்பீட்டுக் கழகங்கள் மூலம் கடன் பெறவும் வாய்ப்புண்டு. சிலருக்குக் கண்களில் கோளாறு ஏற்படலாம். உஷ்ண ரோகம் ஏற்படக்கூடும். சுக்கிரன் 2–இல் சஞ்சரிப்பதால், லஞ்சம் கொடுப்பது அல்லது வாங்குவது பாதிப் பை ஏற்படுத்தக்கூடும். தனிப்பட்ட பாதிப்புகளை உங்களுக்கு ஏற்படுத்தக்கூடும்.

சனி வக்கிரம் பெற்று 10–இல் சஞ்சரிப்பதால், தொழில் துறையில் சிக்கல்கள் ஏற்படலாம். மேலும், செவ்வாயும் 10–இல் சஞ்சரிப்பதால் உங் கள் அதிகார வரம்பை மீறி பலப்பிரயோகம் செய்ய வேண்டாம். 5–இல் சஞ்சரிக்கும் ராகு, போட்டித் தேர்வு எழுதும் மாணவர்களுக்கும் கணிப்பொறி, உயிரியல் சம்பந்தப்பட்ட கல்வி கற்பவர்களுக்கும் நன்மையை ஏற்படுத்தும். 11–இல் கேது சஞ்சரிப்ப தால், பெரியோர் மூலமான ஆதரவும், ஆசியும், குலதெய்வ அருட்கடாட்சமும் உங்களைத் துன்பங் களிலிருந்து காக்கும். எதிர்பாராமல் சிலருக்குக் கல்யாணம் முதலிய சுப காரியங்கள் கைகூடும்.



# சைவத்திரு சொர்ணா சோமசுந்தரம் இறைவனடி சேர்ந்தார்

திருமதி சொர்ணா சோமசுந்தரம், கோவை மாநகரத்தின் இரத்தினசபாபதிபுரம் எனும் பண்பாட்டுப் பகுதியில் கோவையின் அடையாளங்களில் ஒருவராகத் திகழ்ந்தவர். மாணிக்கவாசகரின் அவதார நாளை விழாவாகக் கொண் டாடுவதை விரதமாகக் கொண்டவர். திருவாசகத்தை முற்றோதல் செய்து பக்திப் பயிரை நீரூற்றி அல்ல, பாலூற்றி வளர்த்தவர். தேவார இசை யில் தேர்ச்சி பெற்றவர்.

ஆர்.எஸ். புரத்திலுள்ள தனது இல்லத்தின் வரவேற்புக் கூடத்தில் நடராஜப் பெருமானின் விக் கிரகத்தை வைத்துக் கோயில் போல உருவாக்கி, அந்தக் கூடத்தில்தான் தாம் நிறுவிய 'திருநெறிய தமிழ் மன்றம் சார்பில் 'சைவநெறி பரப்பிய தனது உரைகளை பக்தை களுக்கும் பக்தர்களுக்கும் வழங்கி வந்தார்.

கோவையில் அருட்செல்வர் நடத்திய சன் மார்க்க நிகழ்ச்சிகளிலும், தமிழிசைக் கலை விழாவிலும் திருமதி சொர்ணா சோமசுந்தரம் கலந்து கொண்டு சிறப்புச் சேர்த்தவர். கோவை தமிழிசை விழாவில் 'இசைக்கலைச் செல்வர்' விருது வழங்கி அருட்செல்வர் இவரைச் சிறப் பித்தார்.

அவர் இல்லத்தின் ஒரு பகுதியில் உள்ள புகழ்பெற்ற இரத்தினவிநாயகர் கோவில் பொலிவு பெறத் தனிக் கவனம் எடுத்துக் கொண்டவர்.

புரந்தரதாசர் கலையரங்கத்தில் நிகழ்ந்து வரும் இசை, நாட்டியப் பயிற்சிகளுக்கு திருமதி சொர்ணா சோமசுந்தரம் அவர்களை முதல்வ ராகவே அருட்செல்வர் நியமித்தார். இப்போதும் அப்பயிற்சிகள் நடைபெற்று வருகின்றன. நாட்டியப் பகுதி திருமதி சொர்ணா சோமசுந்தரம் அவர் களின் பேத்தி திருமதி கருணா சாகரியின் வழி காட்டுதலில் மிகச்சிறப்பாக நடந்து வருகிறது.

திருமதி சொர்ணா சோமசுந்தரம் அவர்களின் மகன் திரு. அரவிந்த் அவர்கள் மங்கையர்க் கரசியார் அறநெறி அறக்கட்டளையின் சார்பில் மகாலிங்கம் மாரியம்மாள் மன்றத்தில் சைவ சித்தாந்த வகுப்புகளை நடத்தி வருகிறார். மருமகள் டாக்டர் நீலா அரவிந்தன் சைவ சித்தாந்தத்தைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதிய சிறந்த நூல், தமிழ் தெரியாதவர்கள் சித்தாந் தத்தை அறியப் பயன்படும் சிறந்த நூலாகும்.

மங்கையர் திலகம் திருமதி சொர்ணா சோமசுந்தரம் அவர்களின் திருமேனி பேரூர் தமிழ்க் கல்லூரி வளாகத்தில் சமாதி செய்யப் பட்டது, அவருடைய சைவநெறித் தொண்டுக்கான அங்கீகாரமாகும்.

18.3.2018 அன்று திருமதி சொர்ணா சோமசுந்தரம் அவர்களின் மறைவு, சைவ நெறிக்கு ஈடுசெய்ய முடியாத இழப்பாகும். அவருடைய ஆன்மா முருகன் திருவடி நீழலில் சாந்தி பெறப் பிரார்த்திக்கின்றோம்.

– ந.நி.

# புத்தக மதிப்பீடு




### சென்னிமலை தண்டபாணியின் வாழ்வும் வரலாறும்

ஆசிரியர் : முனைவர் வெ.அ. நாகரத்தினம், வெளியீடு : கலைஞன் பதிப்பகம், 19, கண்ண தாசன் சாலை, தி.நகர், சென்னை – 17, பக். 148, விலை ரூ. 143/–.

**ம**ரபுக் கவிதையிலிருந்து தொடங்கி புதுக் கவிதை, ஹைக்கூ, சென்ரியு, கஜல்கள், கவிதை நாடகங்கள், உரைநடை இலக்கியங்கள் எனச் சமுதாயக் கண்ணோட்டத்தில் தன் படைப்புகளை இலக்கியத் தரத்தில் அளித்து வருபவர் கவிஞர் சென்னிமலை தண்டபாணி. வசந்தம் எனது வாசலில், ஊமைக் கொலுசு, சருகுத் தோட்டம், என் வீட்டுத் திண்ணை, கொஞ்சம் ஹைக்கூ கொஞ்சும் சென்ரியு, பேசும் மௌனம், நட்சத்திர வெளி, யாத்திரை, மகிழ்ச்சியான வாழ்க்கை – இப்படி இன்னும் பல நூல்களைப் படைத் தளித்துள்ள இக்கவிஞரின் வாழ்வும் வரலாறும் எனும் இந்நூல் அறிவார்ந்த இலக்கியப் படைப் பாளியின் அனுபவப் பிழிவு என்றே கூறலாம். கவிஞரின் ஒவ்வொரு படைப்புகளிலுமுள்ள கருத்துக் கூறுகளை நுட்பமாகப் படித்து, புரிந்து அறிவுத் தளத்தில் நின்று இந்நூலில் ஆய்ந்துள் ளார் நூலாசிரியர் முனைவர் வெ. அ. நாகரத் தினம். கவிஞருடனான நேர்காணல் பரந்த சிந் தனையின் வெளிப்பாடு.

### படகு நிறையப் பூக்கள்

ஆசிரியர் : சென்னிமலை தண்டபாணி, வெளியீடு : விஜயா பதிப்பகம், 20, ராஜவீதி, கோவை – 1, பக். 120, விலை ரூ. 100/–.

**க**விஞர் சென்னிமலை தண்டபாணியின் மனவெளித் தோட்டத்தில் பூத்திருக்கும் அன் பெனும் பூக்களே கவிதைகளாக 'படகு நிறையப் பூக்கள்' எனும் இந்நூலின் ஒவ்வொரு பக்கத் திலும் மலர்ந்து மணம் பரப்புகின்றன. வானம், நிலா, விண்மீன், வானவில், ஆறு, கடல், காற்று, பகல், இரவு, பனி, மலை, மழை, பாடும் பறவைகள் என அனைத்தும் கவிஞரின் அன்புமொழிக் கவிதைகளுக்கு இன்பம் சேர்ப்பனவாக உள்ளன. "ஆயிரம் சிறகுகள் எனக்கிருந்தும் / உன் விழிகளை விட்டு / வெளியே பறக்க முடிய வில்லை" என்றும், "என் நந்தவனமாய் இருக்கும் / உன் வீட்டில் / எனக்கான மலர்களை / எங்கே வைத்திருக்கிறாய்?" என்றும் கவிஞரின் மனம் கனிவானவளிடம் பேசுகின்றது. இப்படிப் பல கவிதைகள். இவை நம் மனத்தை இளமையாக்கு கின்றன. மொத்தத்தில் இளமைத் துள்ளல் நிறைந்த நூல்.

### நாராய்... நாராய்...

ஆசிரியர் : ஆட்டனத்தி, வெளியீடு : நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41–பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 98. பக். 124, விலை ரூ. 115/–.

**க**ற்பனைகளே கருக்கொண்டு கதைகளாக உருவெடுப்பதற்குப் பதிலாக, உண்மைச் சம்பவங் களே உருக்கொண்டு கதைகளாக இந்நூலில் உருவெடுத்திருக்கின்றன. பதின்மூன்று சிறுகதை கள். முத்தாய்ப்பான கதையே நூலின் முகப்பு அட்டையின் பெயராய்ப் பதிந்திருக்கிறது – 'நாராய்... நாராய்...' இது பறவைகளின் மீது பாசம் பொழிந்தவர்களின் நேசம் பற்றிக் கூறுவது. சிறைப்பட்டிருக்கும் சிறுத்தை மூலமாக ஒரு மகளின் வாழ்க்கைப் போராட்டத்தை மையப் படுத்தும் மகத்தான கதை 'மனுஷி'. மானையும் மனித இனத்தின் மனத்தையும் உரசிப் பார்க்க வைப்பது 'உப்புக் கட்டிகள்'. கைவிடப்பட்ட முதி யோருக்குக் கைகொடுக்கும் இளைஞனின் இசைவுகள் 'எந்தையும் தாயும்'. யானையின் தன் நிலை விளக்கமாய் உள்ள கதை சற்று உருக்க மானது. இப்படிப் பல. ஆக, வனத்தின் மீது

மனத்தை வைத்துக் கதைகளை அழகாக வார்த்தெடுத்திருக்கிறார் கதாசிரியர் ஆட்டனத்தி.

### 1. கவிதைச் சிறகுகள்

பக். 258, விலை ரூ. 160/–.

### 2. அயலகக் கவிதைக் குயில்கள்

பக். 260, விலை ரூ. 150/–.

மேற்கண்ட இரு நூல்களின் ஆசிரியர் : பேரா. இரா. மோகன், வெளியீடு : வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை – 17,

**கவிதைச் சிறகுகள் :** இத்தொகுப்பில் கவிதை நாற்றுகள், கவிதைச் சிந்தனைகள், கவிதைச் சிறகுகள், இலக்கிய ஆளுமைகள் என நான்கு பிரிவுகளில் தமிழிலக்கியப் படைப்பாளி களின் சிந்தனையோட்டங்கள் முப்பது கட்டுரை களில் வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. 'குழந்தைக் கவிஞர்' செல்லகணபதி, ரெ. முத்துகணேசன், பாரதிவசந்தன், இளசை சுந்தரம், பெ. சிதம்பரநாதன், கம்பதாசன், பே. இராஜேந் திரன், மாதங்கி, எஸ்.கே. குமார், பூர்ணா இப்படித் தமிழ்க் கவிகளின் படைப்புகளில் உள்ள இலக்கிய வளத்தையும் சொல்வளத்தையும் உள்வாங்கி, அவர்களின் கவிதைச் சான்றுகளுடன் தனது இயல்பான மொழிநடையில் இலக்கியத் திறனாய் வைச் செய்துள்ளார் நூலாசிரியர் இரா. மோகன். ஒவ்வொரு கட்டுரையின் தொடக்கத்திலும் அப்படைப்பாளிகளைப் பற்றிய இலக்கிய ஆளு மைகளின் சிலவரிச் சிந்தனைகள் முத்தாய்ப் பானவை. புலம்பெயர் படைப்பாளிகள் பற்றியும் பதிப்புத்துறை பற்றியுமான செய்திகள் பயன்மிக்கவை.

**அயலகக் கவிதைக் குயில்கள் :** சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, கனடா, ஆஸ்திரேலியா, சவூதி அரேபியா, இங்கிலாந்து ஆகிய நாடுகளில் வாழும் புலம்பெயர்ந்த தமிழ்க் கவிஞர்களின் படைப்புகளையும், ஆளுமைப் பண்புகளையும் அறிமுகப்படுத்தும் வகையில் அமைந்துள்ள பதினான்கு கட்டுரைகளின் தொகுப்பு. கவிஞரேறு அமலநாதன், நெப்போலியன், செ. சீனி நைனா முகம்மது, கவிஞர் காசிஆனந்தன், எம். ஜெயராம சர்மா, விஜயலட்சுமி மாசிலாமணி, புதுயுகன் என பதினான்கு கவிஞர்களின் படைப்புகளையும் அவர்களின் சிந்தனை மரபுகளையும் இலக்கியச் செழுமையோடு விமர்சனப்படுத்தியிருக்கிறார் நூலாசிரியர் இரா. மோகன். நூலில் ஆங்காங்கே பேராசிரியர்கள், தமிழறிஞர்களின் பொன்னான வாக்கியங்களும், மேற்கோள்களும் பளிச்சிடு கின்றன. கவிதைகள் பற்றிய திறனாய்வுக்கு ஒரு புதிய பரிமாணம் கொடுக்கும் நூல் இது.










### புன்னகை மத்தாப்புகள் (குழந்தைப் பாடல்கள்)

ஆசிரியர் : ஜெய்சக்தி, வெளியீடு : தமிழ்த் தேன் பதிப்பகம், 137–ஆ, முதல்தளம், சுண்டக்கா முத்தூர் பைபாஸ் ரோடு, 2–வது தெரு, திருநகர், கோவை – 26, பக். 160, விலை ரூ. 70/–.

குடும்பத்தின் குதூகலமே குழந்தைகள்தான். குழந்தைச் செல்வங்களைக் கொண்டாடும் குடும்பம் கோயிலாகவே விளங்கும். கனிவான, இனிமையான, இன்பமான குழந்தைப் பாடல்களில் குழந்தைகள் சொக்கிப் போகும். இப்படியான மனம் கவரும் குழந்தைப் பாடல்களால் குழந்தை களை மட்டுமல்ல, நம்மையும் கட்டிப்போட்டு விடு கிறார் நூலாசிரியர் ஜெய்சக்தி. நாவலாசிரியராக வெற்றி கண்ட இவர், குழந்தை இலக்கியப் படைப் பாளராகவும் பரிமளித்துள்ளதை இந்நூலிலுள்ள குழந்தைப் பாடல்களால் அறிந்துகொள்ள முடி கிறது. குழந்தைகள் பற்றிப் பெரியவர்களுக்காகப் பதினைந்து பாடல்களும், குழந்தைகளுக்கென்று முப்பத்தைந்து பாடல்களும் இன்புறுமாறு உள்ளன. பாடு பொருள்களும் குழந்தைகளுக்கு அறிமுக மானவையாகவே உள்ளன. இப்பாடல்கள் அனைத் தும் அறிவைப் பெருக்கி அன்பை வளர்க்கும் பாடல்கள். படைப்புலகில் குழந்தை இலக்கியக் கவிஞர்கள் குறைவு என்ற குறையைப் போக்கி யுள்ள கவிஞர் ஜெய்சக்தியைப் படைப்புலகம் பாராட்டத்தான் வேண்டும்.

**– எம்.எஸ்.**



# நம்பிக்கைதான் ஊன்றுகோல்!



முடியா தென்பது
மூடத் தனமே – நம்மால்
முடியும் என்பது
மூல தனமே!

இளமை என்பது
வலிமையின் வீச்சு – உடல்
வளமை என்பது
வாழ்வின் மூச்சு!

புதரெனும் குறைகளால்
புதைந்து விடாதே – நீ
எதிலும் குனிந்து
சிதைந்து விடாதே!

இளமை என்பது
வலிமையின் ரகசியம் – அது
முயற்சிப் பூக்கள்
பூத்திடும் அதிசயம்!

சோம்பல் கொண்டு
தூங்கி விடாதே – நம்பிக்கை
ஊன்றுகோல் என்பதை
மறந்து விடாதே!

கடின உழைப்பே
உன்னை உயர்த்தும் – அது
முடிவிலா வெற்றியை
உன்முன் நிறுத்தும்!

இன்றைய இளைஞன்
நாளைய தலைவன் – தம்பி
சீக்கிரம் புறப்படு
சிகரத்தை நோக்கி!

– 'கவிக்கடர்' அழகுதாசன்







# சித்திரைப் பெண்ணே வருக!

சித்திரைப் பெண்ணே வருக...
வளைக்கரம் கூப்பி நின்னை வந்தனம் செய்து,
பட்டுப்பாய் விரித்துப் பாங்குடன் அழைத்து,
பரிவுடன் இருத்தி, பாட்டுக்கள் பாடி,
மங்கள நீராட்டி, மகிழ்ச்சியில் திளைத்து,
மங்கை உன்னை வாழ்த்தி வரவேற்கின்றோம்,
சித்திரைப் பெண்ணே வருக, வருக!

இளைய தலைமுறை உண்மையுடன் செயலாற்ற,
கல்வியும் காவியங்களும் என்றும் மணக்க,
பண்பும் பழமையும் எம்மைவிட்டு நீங்காதிருக்க,
நல்புத்தியும் நற்தொண்டும் சிந்தையில் இருக்க,
நாட்டிற்கு நற்பெருமை சேர்த்திட வழிகாணும் எமக்கு,
உற்சாகமும் ஊக்கமும் தர வேண்டுகின்றோம்,
சித்திரைப் பெண்ணே வருக, வருக!

பகை பாராது பாசத்துடன் கைகோர்த்து,
அச்சம் தவிர்த்து அஞ்சாமை கைக்கொண்டு,
வேற்றுமை விடுத்து ஒற்றுமையில் உயர்ந்து,
செய்திடுவோம் அரிய பல நற்செயல்கள்,
நல்வழியில் எம்மைக் கொண்டுசெல்ல,
நின் துணை நாடுகின்றோம்,
சித்திரைப் பெண்ணே வருக, வருக!



– மாலதி சுந்தரராஜன்

# பலகீனங்களை வெல்லுவதற்கான பரீட்சை!

## விவாதக் கடிதங்களில் சில... சில... சில...

**ந**மது பாரத நாட்டில் உள்ள பிரபலமான சில கட்சிகளில் மட்டும் பலகீனங்களை வெல்லுவதற்கான திறமை உண்டு. முதலில் அன்னை இந்திராகாந்தியின் காலத்தில் ஒரு வழக்கில் அவருடைய கடவுச்சீட்டை அலகாபாத் நீதிமன்றம் முடக்கியது.

இரண்டாவதாக, இராணுவத்தில் கணிசமான எண்ணிக்கையிலும், தமது கட்சியிலும் சீக்கியர்கள் இருந்தாலும், அமிர்தசரஸ் பொற்கோயிலில் அதிரடியாக நுழைந்து ராணுவ நடவடிக்கை எடுத்தார். 'மிசா' என்ற தேசப் பாதுகாப்புச் சட்டம் போட்டுத் தமது முழுத் திறமையை வெளியுலகத்திற்குக் காட்டினார். இதன் விளைவாகத் தமிழ்நாட்டில் தி.மு.க.–வைப் பாதிப்படையச் செய்தார். அன்னை இந்திராவும், கலைஞரும் பலவீனத்தைச் சேர்த்துப் பலமாக்கியவர்கள்.

– வே. முத்துக்கிருஷ்ணன்,
தாராபுரம்.

**ப**லகீனம் என்பது சந்தர்ப்பவாதம் உண்டாக்குவது. அதை வெல்வது என்பது சாதாரண மனிதனுக்குச் சாத்தியம் இல்லாதது. மாநிலத் தேர்தலில் மறுபிறவி இல்லை என்று 'ந.மோ.'–வுக்குத் தெரிந்தும், 'ஈகோ'வால் சலனப்படவில்லை என்பதே உண்மை. கொள்கை அடிப்படையில் தான் பிரதமர் என்று நின்ற சுர்ஜித்து தான், வர இருந்த செல்வாக்கைத் துச்சமாக உதறியவர். பலகீனத்தை வென்றவர்.

– சீத்தலைச்சாத்தன்,
திருப்புத்தூர்.

**நா**டு விடுதலை பெற்றபோது சென்னை மாகாண முதலமைச்சராக இருந்தவர் திரு. ஓமந்தூரார் அவர்கள். முதலமைச்சரானவுடன், தான் அனைவருக்கும் பொதுவானவன் என்பதைச் செயலாக்கிய பெருந்தகை. கட்சி சார்பான கோரிக்கைகளை மறுத்தார். மிகக் குறைந்த காலமே பொறுப்பில் இருந்தபோதும் ஆட்சிப்பணி அதிகாரிகளைத் தன் கட்டுக்குள் கொண்டு வந்தவர். தான் மறையும் வரை பொதுவாகிப் போனவர். ஆமாம்... பலவீனங்களை வென்றவர்.

– வ. நவநீதகிருஷ்ணன்,
நெ. மேட்டுப்பட்டி.

**ஒ**ருவரது ஆதரவு நிபந்தனையின் பேரிலோ, ஒருவரது திணிப்பு அதிகாரத்தின் பேரிலோ அமைவது எந்த வகையிலும் உகந்ததல்ல. ஜனநாயகம் என்ற வகையில் போட்டி என்றிருந்தாலும், காமராஜருக்கு எதிராக ஒரு மாணவரை அண்ணா நிறுத்தியது காமராஜர் வெல்ல வேண்டும் என்பதாலேயே என்பதை மறத்தலாகாது.

திரிபுரா மாணிக் சர்க்கார் (முதல்வர்) சொத்துக் குவிக்காத முதல்வராக, தூய்மையாளராக இருந்தும் அவருக்கு உரிய கௌரவம் மைய அரசு தராதது

முறையல்ல. அணு உலை ஒப்பந்த வேளை, தங்களது ஆதரவு ஐ.மு.கூ. அரசுக்கு இல்லை என்று வெளிப் படையாகத் தெரிவித்து வெளியேறிய பிரகாஷ் காரத் கூடப் பாராட்டுக் குரியவர் ஆவார்.

– எஸ். ஜி. இசட்கான், திருப்பூர்.

**ந**மது தாய்த்திரு நாட்டின் மிகப் பெரிய பலகீனமே, பலகீனத்தை ஜெயித்த காந்தியடிகள் போன்ற தலைவர்கள் இன்று நம் மத்தி யிலில்லை என்பதுதான். குஜராத் தேர்தலில் மோடியின் வைராக்கியம் பாராட்டத்தக்கது என்றாலும், அது நிரந்தரமா, சரிப்பட்டு வருமா என்ப தற்குக் காலம்தான் பதில் சொல்ல வேண்டும்.

– இரா. வளையாபதி,
தோட்டக்குறிச்சி

**ப**லம், பலவீனங்கள் இரண் டையும் சரியாக எடைபோட்டு உணர்ந்து கொள்ள வேண்டும். அதிலும் குறிப்பாகப் பலவீனங்களை அறிந்து கொள்வதே மிக அவசிய மாகும். அத்தகைய தலைவர்களைத் தேடினால் வரலாற்றுப் பக்கங்களில் ஒரு சிலரே தட்டுப்படுவர். அவர் களில் முக்கியமானவர்கள் தமிழகத் தைச் சேர்ந்த கர்மவீரர் காமராசர், ஓமந் தூரார், அமைச்சராயிருந்த கக்கன் முதலியோர் குறிப்பிடத்தக்க வர்களாய் விளங்கினர்.

இன்று அத்தகையோரைத் தேடிப் பார்க்க முயன்றால், ஏமாற்றமே மிஞ்சும். தம்முடைய பலவீனங்களை எல்லாம் முழுமையாக மறந்து விட்டோ, அவற்றையெல்லாம் பலங் களாகக் கருதிக் கொண்டோதான் இன்று பலரும் அரசியல் களத்திற்கே வருகிறார்கள்.

– வெ. பாண்டுரங்கன்,
திருநின்றவூர்.

**ப**லகீனத்தை வென்று காட்டிய தலைவர்கள் இருந்தார்கள் – இருக் கிறார்கள் – இருப்பார்கள், சந்தேகமே இல்லை. நிகழ்காலத்தில் ஹர்கிஷண் சிங் சுர்ஜித் – நரேந்திரமோடிகள் ஜெயித்திருக்கிறார்களென்றால், அடுத்து வரும் நடைமுறைக் காலத் தில் சந்தர்ப்பமும், சூழ்நிலையும் அமையும்போது அப்படிப்பட்ட தலைவர்கள் வெளிப்படுவார்கள் என்பதை நிச்சயமாக நம்பலாம்.

– இரா. கல்யாணசுந்தரம், மதுரை.

**தே**ர்தல் அரசியலில் சுயநலம் என்ற பலவீனம் இன்றிப் போட்டி யிட்டு வெற்றி பெறுவது சாத்தியம் தானா என்று சந்தேகிக்கும் நிலை நிலவுவதைக் காணமுடிகிறது. இந்தியாவின் தற்போதைய ஏழை முதல்வராகத் திகழ்ந்த மாணிக் சர்க் காரின் தோல்விக்குக் கௌரவமான காரணம் உள்ளது என ஒதுக்கி விட லாமா? பெருந்தலைவர் காமராசர் கல்லூரி மாணவரிடம் தோற்றதைப் பெருமை எனக் கருதிவிட முடியுமா? தேர்தலில் வெற்றியோ, தோல்வியோ, சுய பலவீனங்களை வெல்லும் தலை வர்களை எதிர்பார்க்கிறோம்.

– ரவிச்சந்திரன், ஆவுடையாள்புரம்.

**உ**டலுக்கு வயதுண்டு, உள்ளத் திற்கு வயதில்லை. உள்ளத்திற்கு எப் பொழுதும் தெம்பும், திடனும் பிரச் சனைகளை எதிர்கொள்ளும் வல்லமையுண்டு. வள்ளலார், விவே கானந்தர், மகாபாரதத்தில் தருமன் இப்படி எத்தனையோ மகான்கள் தங்கள் பலகீனங்களை எல்லாம் எதிர்த்து வென்ற காட்சிகள் உண்டு. அமைதி, அன்பு, சாந்தம், மனஉறுதி, உள்ளத்தில் தெளிவான சிந்தனை யுடன் இருந்தால் பலகீனங்களை வென்று சாதனை செய்ய முடியும்.

– முசிபுசி. முத்துக்குமார்,
ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**க**ட்சிக்குப் பலவீனம் ஏற்படுத்தி குடும்பத்தில் குழப்பம் விளைவித்து வந்த தன் மகனைக் குடும்பத்தைவிடக் கட்சியே மேல் எனக் கட்சியிலிருந்து அவரை ஏறத்தாழ மூன்று ஆண்டு களுக்கு முன் தூக்கி எறிந்த கலைஞர் கருணாநிதி கட்சியையும் குடும்பத் தையும் பலவீனப்படுவதிலிருந்து காப்பாற்றினார்.

– அ. சம்பத், திருவரங்கம்.

**உ**ருவு கண்டு எள்ள முடியாத மனப்பலம் கொண்டவர்களே ஆன்ம பலம் உடையவர்கள். உண்மையான பலவான்கள். ஆன்மபலம் கொண்ட எளிய தோற்றமுடையவர்களைப் பல வீனர்களாகக் கருதுபவர்களே உண் மையில் பலவீனர்கள். அத்தகை யவர்களே இன்று எங்கும் காணப்படு கின்றனர். அவர்கள் நாளும் சுயநலத் துடன் தங்களைப் பற்றியே சிந்தித்து அச்சத்துடன் வாழும் பலவீனர்களாக உள்ளனர். மனவலிமை கொண்டு வாழ்வோரே துணிச்சலும், வைராக் கியமும் கொண்டு உழைப்பர். செயற் கரிய செய்து சாதனை புரிவர்.

பெருந்தலைவர் காமராசரும், பேரறிஞர் அண்ணாவும், பொன்மனச் செம்மல் எம்.ஜி.ஆரும் அரசியலில் ஈடுபட்டுத் துணிகரமான மனோபல முடையவர்களாய் மக்கள் நலன் கருதிய சாதனைகளை விளைச்ச லாக்கி, மக்களை வியப்புறச் செய்த தாலேயே, அவர்கள் இன்றும் மக்கள் நினைவுகளில் வாழ்ந்து கொண்டு போற்றப்படுபவர்களாய் உள்ளனர்.

– வி.எஸ். கிருஷ்ணமூர்த்தி,
வரட்டணப்பள்ளி.

**ப**லகீனமே ஒவ்வொரு மனிதனுக் கும் எதிரி ஆகும். பலகீனமான மனதை வைத்துக்கொண்டு வெற்றி பெற இயலாது. காந்திஜி, காமராஜ், நேதாஜி, படேல், டாக்டர் லோகியா முதலிய தலைவர்கள் பலகீனம் ஏற்றுக் கொண்டிருப்பின், பொது வாழ்க் கையில் வெற்றி பெற்றிருக்க முடியவே முடியாது.

பலசாலியாக இருந்தால் மட்டும் போதாது, கடுமையான ஒழுங்கீனங் களை எதிர்த்துப் போராடும் வல்லமை கொண்டவர்களாக இருக்க வேண்டும். இந்திரா காந்தி, மம்தாஜி, சுதேச கிருபளானி முதலிய பெண் மணிகளைப் பலகீனத்தை வேருடன் ஒழித்து நிலைநாட்டிய பெண்மணிகள் எனக் கூறலாம். சமீபத்தில் மோடி அவர்கள் குஜராத்தில் வெற்றி பெற்ற தற்குப் பலகீனத்திற்கு எதிராகக் குரல் கொடுத்ததே காரணம் எனலாம்.

– லிங்கம் சின்னசாமி,
தாராபுரம்.

**ம**னிதனுக்கு நாணயம் போல இரு பக்கங்கள் உண்டு. அதில் பலம் ஒரு பக்கம் என்றால், அந்த மனிதன் பலகீனத்தை வெளிக்காட்டாமல் தன் பலத்தை மட்டும் காட்டினால் நிச் சயம் வெற்றி கிடைக்கும். அப்படி வெற்றி கண்டவர்கள்தான் மகாத்மா காந்தி, மகாகவி பாரதியார், சுவாமி விவேகானந்தர், வ.உ.சி., முதலிய பெரிய மகான்கள்.

இவர்கள் தங்கள் பலவீனங்களை அதிகம் வெளியில் காட்டிக் கொள்ளாமல் தங்கள் குறிக்கோள் களை மட்டுமே கருத்தில் கொண்டு இருந்ததால், அவர்களின் பலம் மேலோங்கி வெற்றிபெற உதவியது. பலவீனம் இல்லாத மனிதனே இல்லை. எனவே, பலவீனத்தை ஒதுக்கி பலம் நமக்கு வளம் மட்டுமே தரும் என்று செயல்பட்டால் வெற்றி நிச்சயம்.

– உஷா முத்துராமன், திருநகர்.

**தே**ர்தலில் போட்டியிடுபவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர் களாகவும் இருக்கலாம். அவர்கள்

தன்னலம் கருதாமல் மக்கள் நலத்தில் அக்கறையுடன் செயல்பட்டால்தான் தேர்வு செய்வார்கள். இல்லையெனில் அவர்கள் பலகீனர்கள் என மக்கள் சிந்திப்பார்கள். தன்னுடைய சொந்த வாழ்க்கையில் எப்படியிருந்தாலும் பொதுவாழ்வில் மக்கள் நலம் குறித்துச் செயல்படுவதே பலகீனத்தை வெல்லும் சக்தியாக உருவாகும்.

– இரா. தியாகராசன், இலால்குடி.

**ம**காத்மா காந்திக்கு இருந்த ஆயுதம் அகிம்சை, உண்ணா நோன்பு. அவை பலகீனம் அல்ல. அதேபோல் குஜராத் தேர்தலின்போது காட்டிய உறுதியைக் கர்நாடகாவில் காவிரி மேலாண்மை வாரியம் அமைக்கத் தயங்குவது வாக்கு வங்கியைக்குறித்த பலகீனமான செயல் என்று சிந்திக்க வேண்டியதில்லை.

குஜராத் தேர்தலின்போது சில கட்சிகள் வாக்கு வங்கி பற்றிக் கவலைப்பட்டதை ஒரு பலகீனமான செயல் என்று கருத முடியாது. தேர்தலின்போது சில கட்சிகள் வாக்குறுதி கொடுப்பது வழக்கமான செயல்தான். தேர்தல் வாக்குறுதி பலகீனமானது அல்ல. அது அரசின் கடமை. அதை யாரும் குறை சொல்ல முடியாது. மகாத்மா காந்தி இந்து, முஸ்லீம் ஒற்றுமைக்காகத் தன் உயிரையே கொடுக்கத் துணிந்ததுதான் உண்மையான பலமாகும்

– கே.என். பிச்சைமணி,
பொள்ளாச்சி.

**ஆ**ன்மா என்பதைக் கடவுள் எனக் கொள்ளும்போது ஆன்ம பலத்தைக் கடவுளின் பலம் என்பதைச் சொல்லத் தேவையில்லை. சுவாமி விவேகானந்தரிடம் இருந்த அதே ஆன்ம பலம் இப்போது பிரதமர் மோடியிடம் உள்ளதென்றுதான் எண்ணத் தோன்றுகிறது. ஏனென்றால் வெற்றி, தோல்வி பார்க்கும் பலகீனராக அவர் இருந்திருந்தால், கரன்சி நடவடிக்கையில் இறங்கி இருக்கமாட்டார். அதனால் அவர் அடைந்த எதிர்ப்புகள் அதிகம்.

நாட்டுக்கு நல்லதென்றபோது எது வந்தாலும் அதனை ஈடேற்றும் துணிச்சல்தான் ஆன்மபலம். தனக்கு முன்னால் பா.ஜ.க.வில் மிகப்பெரிய தலைவர்கள் இருந்தபோதும், அவரது ஆன்ம பலமே இப்போது அவரைத் தலைமை நடத்த வைக்கிறது.

– முத்தமிழருவி மாரிமுத்து,
அ. வாடிப்பட்டி.

**மே**ற்கு வங்க முதல்வர் மம்தா பானர்ஜி கம்யூனிஸ்ட் கட்சியின் பலகீனத்தைப் பயன்படுத்தி ஆட்சியில் அமர்ந்துள்ளார். காங்கிரஸ் மற்றும் அதன் கூட்டணிக் கட்சிகளின் பலகீனத்தைத் தனக்குச் சாதகமாக எடுத்துக்கொண்டு மோடி நம் நாட்டுப் பிரதமரானார்.

திரிபுராவில் மாணிக் சர்க்கார் நேர்மையானவராக இருந்தும் அவர் தன் கட்சிக்காரர்களின் செயல்பாடுகளால் பலகீனமடைந்தார். அந்தப் பலகீனத்தைப் பயன்படுத்தி பா.ஜ.க. அங்கு ஆட்சியைப் பிடித்துள்ளது. நம் நாட்டில் கொள்கை அடிப்படையில் ஆட்சியைப் பிடிப்பது எளிதானதல்ல. பலகீனங்களைச் சாதகமாகப் பயன்படுத்தித்தான் ஆட்சியைப் பிடிக்க முடியும்.

– என்.ஆர். ஜெயசந்திரன்,
காவேரிப்பட்டணம்.

## ஸ்ரீ சக்கரம்

**கா**ஞ்சிபுரத்தில் ஸ்ரீ காமாட்சி அம்மன் ஆலயம், சென்னையில் உள்ள காளிகாம்பாள் திருக்கோயில், திருவொற்றியூர் ஸ்ரீ வடிவுடையம்மன் ஆலயம், மாங்காடு காமாட்சியம்மன் ஆலயங்களில் 'ஸ்ரீ சக்கரம்' பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

– கே. பிரபாவதி

கட்டுரை

'ஹிந்து மித்திரன்' பத்திரிகை சென்ற டிசம்பர் 1, 2017 தேதியிட்ட இதழில் 'சிவஞான போதம்' மூல முதல் நூல் அல்ல. அது சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு என்று உபயவேதாந்தி சிவஸ்ரீ தில்லை கார்த்திகேயசிவம் எழுதிய கட்டுரை, ஆதாரத் தரவுகளுடன் வெளியாகி உள்ளது. அதேசமயம் பெரியபுராணத்தை மொழிபெயர்ப்பு நூல் எனச் சொல்ல விரும்பாமல் அதனை மட்டும், மூல நூல் என அவரே ஒப்புக் கொண்டுள்ளதைப் பெருமையாகப் பேசுகிறார்.

சைவர்களுக்கு மத்தியில் சர்ச்சையை ஏற்படுத்திய இதுபோன்ற கருத்தை 1950–களிலேயே 'சித்தாந்தம்' இதழில் ம. பாலசுப்பிரமணிய முதலியார், 120 காரணங்களைக் கூறி இதனை மறுத்து எழுதியுள்ளார்.

வாசகர்கள் இரண்டையும் படித்துச் சீர்தூக்கிப் பார்த்து எடுக்கும் முடிவை 'ஓம் சக்தி'க்குத் தரலாம். அம்முடிவுகள் அறிவு சுடரும் விதமாக அமைய வேண்டுமே தவிர, ஒருவர் மீது ஒருவர் சாடுவதாக இருக்கக் கூடாது. மல்யுத்தம் போலச் சொல் யுத்தம் அமைந்தால் அந்த வாதமுறை வளர்ச்சி தமிழுக்கும் தத்துவத்துக்கும் அழகு சேர்க்கும்.

– இணையாசிரியர்

# மெய்கண்டாரின் 'சிவஞானபோதம்'

# சம்ஸ்கிருதமா? தமிழா?

***சம்ஸ்கிருதம் என்று கூறும் – தில்லை கார்த்திகேய சிவம் :***

*"திருநெல்வேலி அருகே உள்ள திருவாலீஸ்வரம் ஆகம மடத்தில் தோன்றிய 'ஞானாமிர்தம்' என்ற நூலே முதலில் முழுமையான தமிழில் தோன்றிய சைவ சித்தாந்த நூல். இதன் ஆசிரியர் **ஸ்ரீ வாகிச முனிவர்**. இந்நூலின் ஆசிரியர் பாயிரத்தில் ஆகமத்தின் வழியாக இந்நூலை ஆக்கியதாக எடுத்து இயம்புகின்றார்.*

*ஆக, ஸ்ரீ மெய்கண்டார் காலத்திற்கு முன்பே இங்கு ஆகம வழி சைவசித்தாந்தத் தத்துவம் பரவலாக இருந்துள்ளது.*


மெய்கண்டார்

*எனவே, மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் மூலம் சைவ சித்தாந்தம் என்பது ஆகமத்தின் வழி நெறியாகும் என்பது தெளிவாகத் தெரியும் உண்மை. அதாவது வேதத்தின் அந்தம் வேதாந்தம் என்பது போல், ஆகமத்தின் அந்தம் ஆகமாந்தம். அந்த ஆகமாந்தமே சைவ சித்தாந்தம் என்று உரைக்கப்படுகின்றது. ஆகமத்தின் ஞான பாதம் சைவ சித்தாந்தம். சிவாகமங்களே சித்தாந்தமாகும் என்பது ஸ்ரீ அருணந்தி சிவாச்சாரியார் வாக்கு.*

*சைவசித்தாந்தத்திற்கு அடிப்படை ஆகமமே அன்றி மொழியோ, மாநிலமோ, பிரதேசமோ அல்ல. அவ்வகையில் சைவசித்தாந்தம் தமிழர்*

நெறி என்பதும், தமிழ்ச் சைவர், சித் தாந்தத் தமிழர் என்ற வார்த்தை ஜாலங் களும் கடந்த நூறாண்டுகளில் எழுந்த உணர்ச்சியூட்டும் போலி உரைகள்.

ஆக, ஸ்ரீ மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம், 28 ஆகமங்களில் ஒன்றான **ரௌரவ** ஆகமத்தின் பாச விமோசனப் படலத்தில் உள்ள சூத்திரங்களின் மொழிபெயர்ப்பே என்பது சைவசமய அருளாளர்களின் வாக்காகும். அதுவே உண்மையான சைவர்களின் கொள்கையும் ஆகும்.

சிவஞானபோதத்திற்குத் தமிழில் அழகிய மாபாடியம் – பாஷ்யம் செய் தருளிய ஸ்ரீ மாதவ சிவஞான சுவாமி களும், ஆகமத்தின் வழியே மெய் கண்டாரின் சிவஞானபோதம் என்று தமது பாஷ்யத்தில் தெளிவாக எடுத் துரைக்கின்றார்.

இவ்வாறு சிவஞானபோதம் மொழிபெயர்ப்பே – ஆகம வழிநூலே, என்கிற உண்மை 1905 வரை நிலை பெற்று இருந்துள்ளது.

திருவாவடுதுறை ஆதீனத்தின் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் செய்த 'தச காரியம்' நூலில்,

"முன்னவன் வடநூல் நோக்கி மொழிந்தனன்
போதம் மற்றோன்,
பின்னவன் அந்நூல் நோக்கிப் பெயர்த்தனன்
சித்தியாக,
அன்னவை இரண்டும் நோக்கி அறைந்தனன்
புடைநூல் மற்றோன்,
**சொன்னவை மூன்றும் நோக்கித் தொகுத்தனன்**
**அவத்தை பத்தாய்"**

என்ற பாடலில், வடமொழி ஆகம சிவஞானபோதத்தைக் குருவருளால், எம் குருநாதன் மெய்கண்டதேசிகன் செந்தமிழில் பாடினார் என்று கூறு கின்றார்.

ஸ்ரீ மாதவ சிவஞான சுவாமிகள் தமிழில் மாபாடியும் செய்ய வேண்டும் என்பதற்கு உந்துதலாக இருந்தது சம்ஸ்கிருத சிவஞானபோத பாஷ்யமே.

ஆகமத்தின் சாரமே தமிழ் சிவ ஞானபோதம் என்பதில் மாறுபட வில்லை. குழப்பமும் இல்லை. காரணம், **அதுவரை சம்ஸ்கிருதமும் சைவர்களின் மொழியாகவே இருந்தது.**

சிறந்த சைவசித்தாந்தியாக விளங்கி யவர் ஜெ.எம். நல்லுசாமிப் பிள்ளை. 'சித்தாந்த தீபிகை' என்ற இதழ் மூலம் சைவசித்தாந்தத் தத்துவங்களை ஆங்கிலத்தில் வெளியிட்டவர். நீதிபதி. புலமை நிறைந்தவர். சைவசித்தாந்த சமாஜம் தோன்றக் காரணமானவர்.

அவர் ஸ்ரீ செந்திநாதையரின் சிவஞானபோத வசனாலங்கார தீபத் தின் முன்னுரையில், முதன் முதலாக பண்டிதர். பி. சுந்தரம் பிள்ளை அவர் களே தமிழ் சிவஞானபோதம் என்ற கருத்தை வெளியிட்டதைத் தன்னுடைய 'சித்தாந்த தீபிகை' நூலில் வந்த சிவ ஞானபோத ஆங்கில மொழிபெயர்ப்பு பற்றிய பதிப்புரையிலே கண்டித் துள்ளார்.

திரு. பிள்ளை அவர்கள் இவ்வாறு நவீனக் கருத்தை வெளியிடக் காரணம், அக்காலத்தில் மிகுந்திருந்த மெத்தப் படித்த தமிழறிஞர்களிடம் மிஷனரி திராவிட சிந்தனை ஆதிக்கம் மற்றும் அதன்மீது இருந்த மோகம்.

சைவசமயத்தில் இத்தகைய வகை யில் பல குழப்பங்கள் ஏற்பட **திராவிட மிஷனரி வாசம் கொண்ட தமிழறிஞர் கள்** முக்கியக் காரணம் என்றே சொல்ல வேண்டும்.

இந்நிலையில், ஜெ.எம். நல்லுசாமிப் பிள்ளை, ஞானியார் சுவாமிகள் ஆகி யோர் காலத்தில் சைவசித்தாந்த மகா சமாஜம் என்ற பெயரில் இருந்த அமைப்பு, 1916–க்குப் பின் ஏற்பட்ட திராவிட வாசனையால் சைவ சித்தாந்தப் பெருமன்றம் என்று மாறி யது போல், ஆகம சிவஞானபோதமும் தமிழ் சிவஞானபோதமாகியது. ஆகம நெறியாக விளங்கிய சைவ சித்தாந்த நெறி, தமிழர் நெறியாகியது.

சிவஞான சுவாமிகள் சிவஞான போதத்தை சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு என்று கூறுவதற்குக் காரணம், அவர் காலத்தில் இருந்த சம்ஸ்கிருத ஆக்கிர மிப்பு என்ற போலிக் கொள்கையைப் பரப்பி சுவாமிகளைச் சிறுமைப் படுத்தினர்.



வடமொழிச்

சிவஞானபோதத்து

முதற்சூத்திர வியாக்கியானம்

தமிழ்மொழிபெயர்ப்பும்

மாதவச்சிவஞானயோகிகள்



சிவஞானபோதமாபாடியம்.

மங்கலவாழ்த்து.



சிவஞானபோதமாபாடியமும்

*மறைமலை அடிகள், கா.சு. பிள்ளை போன்ற பெருமன்றத்தைச் சார்ந்தோர் சிவஞானபோதம் தமிழ் முதல் நூலே என்றனர்.*

*ஆக, தமிழ் சிவஞானபோதம் என் பதை நிரூபிக்க வேண்டிய கட்டாயத் திற்குத் தள்ளப்பட்ட இந்த நவீன தமிழ்ச் சைவர்கள், மேற்கண்ட சைவசித்தாந்தப் பெருமன்றம் இதழாகிய* ***'சித்தாந்தம்' இதழில் ம. பாலசுப்பிரமணிய முதலியார்*** *காலத்தில் 1949–இல் "சிவ ஞானபோதம் தமிழ் முதல் நூலே 120 காரணங்கள்" என்ற தொடரை எழுதிப் பின் புத்தகமாக 1950 வெளியிட் டார்கள்.*

*பாரம்பரிய ஆதீனங்கள் இக் கொள்கையை ஏற்கவில்லை. மரபு ரீதி யான சைவர்கள் இக்கொள்கையைப் புறக்கணித்தனர்.*

*இருந்தாலும் 1950–களில் தமிழ், தமிழ் என்று முழங்கிய காலம். எனவே இந்நூல் சைவசமயத்தில் குழப்பத்தை ஏற்படுத்தியது. இந்நிலையில் இந்நூலை, அருளாளர்கள் வாக்குகளைக் கொண்டு மறுத்த த.சி.ச. ராமசங்கு பாண்டியன் அவர்கள் "தமிழ் சிவஞானபோதம் முதல் நூலா? வழி நூலா?" என்ற நூலை விரிவாக எழுதி வெளியிட் டார்கள். ஐயா ஈஸ்வரமூர்த்திப் பிள்ளை அவர்களும் "சிவஞானபோதம் மொழிபெயர்ப்பே" என்ற நூலை வெளி யிட்டார்கள்.*

*இவ்வாறு சைவசமய மரபில் மொழி சார்ந்த குழப்பம் ஏற்பட மூலக்காரணம் மிஷனரி, திராவிடத் தாக்கமே ஆகும். ஆனால், இதை அறியாத சில சைவர் கள், சிவஞானபோதம் தமிழ் மூலமே என்றால்தான் தமிழன் என்ற சான்றிதழ் கிடைக்கும் என்று எண்ணிக் கொண் டிருக்கிறார்கள்.*

*இனத்தால் நீ தமிழனா, ஆரியனா என்பது முக்கியமல்ல. சிவனை வழி படும் சைவன் என்றால் வேத ஆகமம் உமக்கு முதல் நூல். அருளாளர்கள் வாக்கே பிரமாணம்.*

*மேலும் அடியேன் கூட இன்று சம்ஸ்கிருத உபமன்யு பக்தவிலாசத்தின் மொழிபெயர்ப்பே பெரியபுராணம் என்று பல எடுத்துக்காட்டுகள் காண் பித்துப் புலமை செய்ய முடியும். ஆனால், அது தகுமோ? காரணம் பெரியபுராணம் தமிழ் முதல் என்பது ஆன்றோர் வாக்கு.*

**'சிவஞானபோதம்' தமிழ் முதல் நூலே மொழிபெயர்ப்பல்ல – 120 காரணங்கள் கூறும் – ம. பாலசுப்பிரமணிய முதலியார் :**

**சை**வ சித்தாந்த சந்தானக் குரவர் கள் நால்வருள் முதல்வராகிய மெய் கண்டார் அருளிச்செய்ததுதான் 'சிவ ஞானபோதம்'. அத்தமிழ் முதல் நூலை மெய்கண்டார் வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கவில்லை. இதுதான் உண்மை.

இதற்கு மாறாக, ஸ்ரீ கண்டருத்திரர் நந்திதேவருக்கு, ரௌரவ ஆகமத்தில், பன்னிரண்டாம் அத்தியாயத்தில், எழுபத்து மூன்றாவதாகிய பாச விமோ சனப் படலத்தில், பன்னிரண்டு வட மொழிச் சூத்திரங்களை உபதேசித்தார் என்றும்; அவற்றை முறையே சநற்குமா ரரும், சத்தியஞான தரிசனிகளும், பரஞ் சோதி முனிவரும் உபதேசத்தில் பெற் றனர் என்றும்; பரஞ்சோதி முனிவர்,

மெய்கண்டாருக்கு உபதேசித்தார் என்றும்; மெய்கண்டார் தமக்குக் கிடைத்த பன்னிரண்டு வடமொழிச் சூத்திரங்களைத் தமிழில் மொழிபெயர்த்துச் 'சிவ ஞானபோதம்' என்று பெயர் வைத்தார் என்றும் கூறப்படுகிறது.

இந்த வரலாறு பொய்யாக இருப்பினும், "பொய்யுடை ஒருவன் சொல் வன்மையினால் மெய்போலும்மே மெய் போலும்மே" என்கிற நியாயம் பற்றிச் சைவர்களில் பலரைப் பல நூற்றாண்டுகளாக இது ஏமாற்றி வந்துள்ளது. இப்பொய் வரலாற்றை 120 காரணங்கள் காட்டி மறுத்து உண்மையை நிலை நாட்டுவதே இச்சிறு கட்டுரையின் நோக்கமாகும்.

1. தாம் அருளிய முதல் நூல், மொழி பெயர்ப்பே என்று மெய்கண்டார் எங்கும் கூறவேயில்லை.
2. தாம் மொழிபெயர்த்தது உண்மையானால், அந்தச் செய்தியை – அவசியமாகக் கூற வேண்டிய – மிகுந்த பொருத்தமாகக் கூறக்கூடிய இடங்கள் பலவற்றுள் ஓரிடத்திலேனும் தவிராமல் அவர் அதைக் கூறியிருப்பார்.
3. உண்மையை ஒளிக்க வேண்டும் என்ற எண்ணம் மெய்கண்டாருக்கு ஒருபோதும் இருந்திருக்க மாட்டாது.
4. முதன் முதலாகக் கடவுள் வாழ்த்தில், வடமொழிச் சூத்திரங்கள் வந்த வரலாற்றைக் "கல்லால் நிழல் மலை வில்லார் அருளிய" என்பதன் பின் "சொல்லாறிருதொடர் வல்லார் அடிதொழ" என்று குறித்துவிட்டுப் பின்பு "பொல்லார் இணைமலர் நல்லார் புனைவரே" என்று முடித்திருக்கலாம்.
5. இந்த நல்ல சந்தர்ப்பத்தை விட்டு விட்ட போதிலும், அடுத்த பாட்டில் அவையடக்கம் கூறும் இடத்திலாவது, தாம் வடமொழி மூலத்துக் கியைய, மொழிபெயர்த்திருப்பதாகவும், சிற்சில குறைபாடுகள் இருப்பினும் அறிஞர்கள் பொறுத்தருள வேண்டும் என்றும் கூறியிருப்பார்.
6. இதற்கு முற்றிலும் மாறாக, முதல் நூல் செய்கிற ஆசிரியர் ஒருவர், எப்படி அவையடக்கம் கூறுவாரோ, அப்படியே தாமும் கூறியிருக்கிறார்.
7. தாம் மொழிபெயர்த்தது உண்மையாயிருந்தால், வடமொழியில் முதல் சூத்திரத்தில் இல்லாத, "என்மனார் புலவர்" என்ற சொற்களைச் சேர்த்திருப்பது மிகப்பெரிய மோசமும் குற்றமும் ஆகும்.
8. உண்மையை மறைப்பதோடு (Suppressio Veri) உண்மையல்லாத ஒன்றைக் கூறும் (Suggestio Falsi) குற்றமும் இங்கு ஏற்படும்.
9. ஸ்ரீ கண்டருத்திரர் திருவாக்கை, அளவை நூல் உணர்ந்த உலகத்து மக்கள் மேல் வைத்துக் கூறுவது பெருந்தவறு.
10. சைவர்களுக்கு எல்லையில்லாத நம்பிக்கையைத் தரக்கூடிய பிரமாண மான ஸ்ரீகண்டருத்திரர் திருவாக்கை, உலக மக்கள் பசு வாக்காகவே மதித்து "என்மனார் புலவர்" என்று திரித்துக் கூறி, அவர்களுடைய நம்பிக்கையை வேண்டுமென்றே குலைக்கும் குற்றமும் மெய்கண்டாரைச் சாரும்.
11. வடமொழியிலுள்ள பன்னிரண்டாவது சூத்திரத்தில் "ஏவல் வித்யாத் சிவஜ்ஞானபோதே சைவார்த்த நிர்ணயம்" என்ற பகுதியை, மெய்கண்டார் தமது பன்னிரண்டாம் சூத்திரத்தில் அடியோடு விட்டிருக்கிறார். தாம் மொழிபெயர்த்தது உண்மையானால், இதை விடாமல் சேர்க்க வேண்டிய அவசியமும் பொறுப்பும் மெய்கண்டாருக்கு உண்டு.
12. மொழிபெயர்ப்புக் கொள்கை உண்மையானால், பற்பல இடங்களில் ஸ்ரீகண்டருத்திரர் திருவாக்கை மாற்றியும், விட்டும், வேறு பலவற்றை அத்திருவாக்கோடு சேர்த்தும், வேறு எந்த மொழிபெயர்ப்பாளரும் செய்யத் துணியாத, பல அடாத காரியங்களை மெய்கண்டார் செய்துள்ளார் என்று கொள்ள வேண்டிவரும் (விவரம் 61 முதல் 119 வரை பார்க்க).

13. “கண்ட இருதயகமல முகைகள் எல் லாம் கண்திறப்பக் காசினிமேல் வந்த அருட் கதிரோன்... மெய் கண்ட தேவன் மிகுசைவ நாதன்” என்று புகழப் பெறும் சந்தான முதற் குரவர், இத்தகைய மோசம், குற்றம், அடாத செயல்களைச் செய் திருக்கவே மாட்டார். ஆகையால் மொழிபெயர்ப்புக் கொள்கையே தவறானது.

14. மெய்கண்டாருடைய தலைமாணாக் கராகிய அருணந்தி சிவாசாரியார், தமது ஆசிரியரை, மொழிபெயர்ப் பாளராகக் கூறவேயில்லை.

15. சகல ஆகம பண்டிதர் என்று புகழ் பெற்ற இவர், ரௌரவ ஆகமத்தில் இந்தச் சூத்திரங்கள் இருந்தால், மெய்கண்டார் இவைகளை மொழி பெயர்த்திருந்தால், இச்செய்திகளைக் கட்டாயமாகக் கூறியிருப்பார்.

16. மெய்கண்டார் நூலை முதல் நூல் பிரமாணமாகக் கொள்வதைவிட, ஆகம சூத்திரங்கள் பன்னிரண்டை யும் அசைக்க முடியாத பிரமாண மாகக் கொண்டிருப்பார்.

17. வேதத்தைப் பொது என்றும் சிவா கமங்களையே சித்தாந்தம் என்றும் கூறும் இவர், தமது ஆசிரியர் முதல் நூலுக்குப் பெரிதும் ஒத்த சூத்திரங் கள் பன்னிரண்டு ரௌரவ ஆகமத் தில் இவர் காலத்தில் இருந்திருந் தால், ஒருபோதும் விட்டிருக்கவே மாட்டார்.

18. “மெய்கண்டான் நூல் சென்னியில் கொண்டு சைவத்திறத்தினைத் தெரிக்கலுற்றாம்” என்று கூறு கிறாரே தவிர, ரௌரவ ஆகம சூத் திரங்களையோ, அவற்றின் மொழி பெயர்ப்பையோ சென்னியிற் கொள்வதாகக் கூறவில்லை.

19. தாம் அருளிய “இருபா இருபது” என்ற சாத்திரத்திலும், மெய்கண் டாரைச் சிவமாகவே புகழ்கின்றாரே தவிர, மொழிபெயர்ப்பாளர் என்று எண்ணவேயில்லை.

20. இந்தச் சாத்திரத்தில், பல வினாக் களை விண்ணப்பம் செய்யும் இடத் தில், வடமொழிச் சூத்திரங்களுக்கும் மெய்கண்டார் சூத்திரங்களுக்கும் உள்ள வேறுபாடுகளில் ஒன்றை யேனும் பற்றி ஒரு வினாவிலேனும் எழுப்பவேயில்லை.




21. குரு மரபு கூறும் இடத்திலும் வட மொழிச் சூத்திரங்களும் மொழி பெயர்ப்புச் செய்தியும் கூறப்படவே யில்லை.

22. “முன் நாள் இறைவன் அருள்நந்தி தனக்கியம்ப நந்திகோதில் அருட் சனற்குமாரற்குக் கூறக், குவலயத் தின் அவ்வழி எம் குருநாதன் கொண்டு, தீதகல எமக்களித்த ஞான நூலைத் தேர்ந்து” என்ற சொற் றொடரை ஆராயும் இடத்து, மெய் கண்டார் கொண்டது வழி என்றும், கொடுத்தது நூல் என்றும் தெளி வாகப் புலப்படும்.

23. மெய்கண்டார் வடமொழிச் சூத் திரங்களைப் பெற்றது உண்மை யானால், அவ்வழி என்னாமல் அம் மொழி என்று கூறியிருப்பார்.

24. மேற்கூறிய பத்து (14–23) காரணங் களில் இருந்து, ரௌரவ ஆகமத்தி லுள்ள பன்னிரண்டு சூத்திரங்களும், அவைகளை மெய்கண்டார் மொழி பெயர்த்தார் என்ற வரலாறும், அருணந்தி சிவாசாரியார் காலத்தில் இல்லவேயில்லை என்று துணிந்து கூறலாம்.

25. இவ் வரலாறு அவர் காலத்தில் இருந்திருப்பின் இதைத் தழுவியே னும் அல்லது மறுத்தேனும், தெளி வாக ஒரு சொல்லேனும் அவர் அருளி யிருப்பார்.

**(இன்னும் உள்ளன)**

# ஓம்சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 36 ஏப்ரல் 2018 இதழ் : 3

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**

ஆசிரியர் & வெளியிடுபவர்: **ம. மாணிக்கம்**

*Editor & Publisher* : **M. MANICKAM**

அச்சிடுபவர் : **து. ராஜ்குமார்**

*Printer* : **T. RAJKUMAR,**

**Rukmani Offset Press**

ருக்மணி ஆப்செட் பிரஸ்,

E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,

கோவை – 641 021.

இணையாசிரியர் : **பெ. சிதம்பரநாதன்**

கதை, கவிதைகளில் வரும் பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

படைப்புகளைச் சுருக்கவோ, திருத்தி அமைக்கவோ ஆசிரியருக்கு உரிமை உண்டு.

**தனிப் பிரதி ரூ.15/-**
**ஆண்டு சந்தா ரூ. 265/-**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/-**
(10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD. A/c OMSAKTHI" என்ற பெயரில் D.D.–யாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :
**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**
வெளியிட்டோர் :
**சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

E-mail :
omsakthieditorial@gmail.com




**சமையல்**

## சத்துமாவு அத்திப்பொடி அல்வா

**தேவையான பொருட்கள் :**

*சத்துமாவு – 1 கப், அத்திப்பொடி – 1/4 கப் (அத்திப்பழங்களைக் காய வைத்துப் பொடித்தால் அத்திப்பொடி கிடைக்கும்), வெல்லம் – 3/4 கப், நெய் – 1/2 கப், நறுக்கிய முந்திரி, திராட்சை, பிஸ்தா தலா 1/2 டீஸ்பூன், ஏலக்காய்த்தூள் – சிறிதளவு.*

**செய்முறை :**

1. அடுப்பில் வாணலியை வைத்து அதில் 1 டீஸ்பூன் நெய்விட்டுக் காய்ந்ததும், அதில் சத்துமாவை வறுத்துக் கொள்ளவும். பின் அத்திப்பொடியையும் லேசாக வறுத்து எடுத்துக் கொள்ளவும்.
2. பின் வாணலியில் வெல்லத்தைப் போட்டுப் பாகு போலக் காய்ச்சி, இறக்கி ஆறவைத்து, அதனை வடிகட்டி மீண்டும் வாணலியில் பாகை ஊற்றி, ஒரு கொதி வந்ததும், வறுத்த சத்துமாவைப் போட்டுக் குறைந்த தீயில் கிளறவும்.
3. அதனுடனேயே அத்திப்பொடியையும் போட்டுச் சிறு தீயில் கிளறவும். இடையிடையே கலவையைச் சுற்றி நெய் விடவும்.
4. அல்வா பதத்திற்கு வரும்போது பொடிகள் வெந்து, நெய் மேலே மிதக்கும் சமயத்தில் நெய்யில் வறுத்த முந்திரி, திராட்சை, பிஸ்தா சேர்க்கவும்.
5. பின்னர் அல்வாவை இறக்கி அதில் பொடித்த ஏலக்காய் சேர்த்துக் கலந்து பரிமாற சுவையான, சத்தான 'சத்துமாவு – அத்திப்பொடி அல்வா' தயார்.

*– பி.கே. பிரேமிகா,* சென்னை.

கட்டுரை

# பாரதிதாசன் கவிதைப் பெருவெளி 21


பாரதிதாசன்

## வள்ளுவம் பூத்த நெஞ்சம்

சமூகப் பிரச்சனைகளில் புதுமையும் புரட்சியும் பாரதிதாசன் கவிதைகளில் பொலிவது உண்மையே எனினும் மொழி, இலக்கியம், தமிழ் மூத்தோர் மரபு ஆகியவற்றைப் பேணு வதில் பழமை பாராட்டுவது கவிஞ ரின் இயல்பு.

நாம் ஏற்கெனவே பார்த்திருப்பது போல, சைவ சமயக் கருத்தியலில் பாரதிதாசனுக்கு ஒரு சாய்வு இருந் ததை 'எதிர்பாராத முத்தம்' புலப் படுத்துவதைக் கண்டுள்ளோம். பாரதி தாசனுக்குத் திருக்குறள் ஒரு வாழ் வியல் தத்துவமாகத் தோன்றியதில் வியப்பில்லை. திருவள்ளுவரை, 'தமிழ் இறைவனார்' என்று போற்றவும் அவர் தயங்கவில்லை.

"பழந்தமிழ் நாட்டின் பண்பே பண்பென

அன்னார் ஆய்ந்த அறமே அறமென

ஒழுக்கமே ஒழுக்க இலக்கணம் ஆமென

வள்ளுவர் நாட்டினார்"

எனப் பெருமிதம் கொள்வார் பாரதிதாசன்.

"பொதுமறையான திருக்குறளில்

இல்லாத தில்லை

இணையில்லை முப்பாலுக் கிந்நிலத்தே"

என்றும், "வள்ளுவனைப் பெற்றதால் பெற்றதே புகழ் வையகமே" என்றும் உவந்து மெய்சிலிர்ப்பது பாரதிதாசன் திருவுள்ளம்.

படிக்க வேண்டிய நூல் என்ற ஒன்றிருந்தால் அது திருக்குறள் அன்றி வேறு யாது என்று கேட்க விழைந் தவர் போல் அவர் சொல்லுவார்.

"நூலைப் படி – திருக்குறள்

நூலைப் படி"

திருக்குறளுக்குப் பழைய உரைகள் பல இருந்தாலும், வள்ளுவர் உள்ளத்தை ஓர்ந்து செய்த உரைகளாக அவை இல்லை என்ற குறை பாரதி தாசனுக்கு இருந்தது. எனவே, சரி யான உரை காண வேண்டுமென்ற எண்ணம் அவ ருக்கு இருந்தது. எனினும் முழுமை யாக அவர் உரை காணவில்லை.



சிற்பி பாலசுப்பிரமணியம்

ஏறத்தாழ எண்பத்தைந்து குறட்பாக் களுக்கு அவர் நவின்ற உரை மட்டுமே நம் கைக்கு எட்டியுள்ளது. அவற்றுள் சில நம் சிந்தனையைத் தூண்டுவதாக அமைந்திருக்கக் காணலாம்.

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து

மறைமொழி காட்டி விடும்"

என்ற குறளுக்குக் கவிஞர் மாறுபட்ட உரையொன்று நல்குகின்றார்.

"உலகின் கண் உண்மை நிறைந்த நூலைச் செய்த தமிழ்ச் சான்றோரின் பெருமையைப் பொய்ம்மை உடைமையால் மறைந் தொழிந்த மொழிகள் எடுத்துக்காட்டி விடும்"

என்பது கவிஞர் உரை. நிறைமொழி – தமிழ்ச் சான்றோர் நூல்கள் என்றும், மறைமொழி – உலகை விட்டு மறைந்த மொழி என்றும் கவிஞர் சிந்தித்துப் பார்த் திருப்பது புதுமை யே என லாம்.

திருவள்ளுவர்

மற்றொரு குறளுக்குக் கவிஞர் செய்த புத்துரை அனைவரும் அறிந்தது.

"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்

பெய்யெனப் பெய்யும் மழை"

என்ற குறளுக்குக் கணவனைத் தொழும் பெண்மணி ஆணையிட் டால் மழை பொழியும் என்ற கருத்தை மாற்றி, அத்தகு நல்லாள் "பெய் என்று எண்ணிய அளவில் பெய்தால் ஒத்த பயன் மழை" என்று பொருள் கூறு வார். மழை போன்றவள் என்பது கவிஞரின் புத்துரை.

ஆனால், ஒரு குடும்பத் தலைவி தெய்வத்தைத் தொழா விட்டாலும், கணவனைத் தொழுவதைப் பாரதி தாசன் ஏற்றுக் கொள்பவராகவே காட்சி தருகிறார். பெண்ணியவாதி கள் சிலர் இதற்கும் எதிர்ப்புக் கூறு வதைக் காணுகின்றோம். ஆனால், பாரதிதாசன், அன்பில் திளைக்கும் தலைவனும் தலைவியும் கொண்ட காதல் அன்பின் விளைவாக இத் தொழுகையைக் கருதுகின்றார்.

'தொழுதெழுவாள்' என்ற தலைப் பிலேயே பாரதிதாசன் ஒரு கவிதை படைத்திருக்கிறார். ஒரு குடும்பத் தலைவி தன் தோழிக்குக் கூறுவதாக அமைந்த கவிதை தொழுகையை நியாயப்படுத்துகிறது.

அவள் சொல்லுகிறாள், "என் தலைவன் இரவு உண்டான்; சற்றே உலாவினான்; பின்னர் கண்ணுறங்கும் அறை வாயிலில் காத்து நின்றான்; என் மாமி என்னிடம் 'உறங் கப் போ' என்று சொன்னாள்.

என் கணவன் என்னை இனிது வரவேற்று, கதவைச் சாத்தி 'நறுமலர்ப் பஞ்சணை மேல் நலியாதுட்கார வைத்தான்' கமழ் தேய்வு பூசினான்; கனியும் பாலும்

தந்தான்; அன்புடன் பேசினான்.

"அமைவுற என் கால் தொட்டே
அவனுடையால் துடைத்து"

மகிழ்ந்தான். இவ்வாறு கூசாமல் தன் அனுபவங்களையெல்லாம் தோழியிடம் பகிர்ந்து கொள்ளும் குடும்பத் தலைவி, எனக்கு அவன் தாய்போல் பணிவிடை செய்தான் என்கிறாள்.

"வண்மையால் கால் துடைப்பான்
மறுப்பினும் கேட்பா னில்லை"

என்பது ஒரு வகையில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறது.

இத்தகைய உழைக்கு உறைவிடமாக இருப்பவன் வருந்தும்படி ஒருபோதும் நான் நடந்து கொள்ள மாட்டேன். ஏனெனில்,

"மதியிலாள் என்று நெஞ்சம்
அன்புளான் வருந்து வானேல்
மதிகுன்றும் உயிர் போன்றாற்கு
மறம் குன்றும்..."

என்று தன் ஆளன் மேல் கொண்ட மதிப்பை இல்லத்தரசி பகிர்ந்து கொள்கிறாள்.

தன் கணவன்பால் கொண்ட பேரன்பை விளக்கும் தலைவி மேலும் கூறுகிறாள். "மற்றவர்கள் போல் நான் வேறு வேறு பொருள்களைத் தொழ மாட்டேன். நிலம், நீர், காற்று, நெருப்பு என்று எதனையும் தொழ மாட்டேன்.

"நிலம் தொழேன்; நீர் தொழேன் விண்
வளி தொழேன்; எரி தொழேன் நான்
அலங்கல் சேர் மார்பன் என்றன்
அன்பனைத் தொழுவ தன்றி... "

என்பது அவள் கொண்ட மனத்திட்பம். அவன் காட்டிய அன்புக்கு இத்தகைய கைம்மாறு செய்வது தன் கடமையென உணர்கிறாள் அவள்.



காலைப் போதில் விழித்தெழுந்ததும் கணவனைத் தொழுகிறாள் அவள். இதனை,

"இயங்கிடும் உயிரன் னோனை
இருகையில் தொழு தெழுந்தேன்"

என்று உணர்ச்சி ததும்ப எடுத்துரைக்கிறாள்.

அவன் அரசகுமாரன் போலும்! அவனைக் காணக் குடிமக்கள் வருகின்றனர். குடிமக்கள் தங்கள் வறுமையின் கொடுமையை அவள் முகம் நோக்கி முறையிடுகிறார்கள்.

"ஒழித்தது வறுமை அன்னாய்
உதவுக என்று நைந்தார்."

உடனே கருணை கூர்ந்த இப்பெண்மணி, தன் அன்புக் கணவனிடம்,

"பிழைத்தது மழை என் அத்தான்
பெய்"

என்று வேண்டுகிறாள். அதனைக் கேட்டதும் அவனுடைய மழை போன்ற கொடைக் கை பொழியத் தொடங்குகிறது – நெல்லும் பொன்னுமாக. இதனை

"மழைத்தது மழைக்கை செந்நெல்
வண்டிகள் நடந்த யாண்டும்"

என்று பாவேந்தர் பாடி முடிக்கிறார்.

இக்கவிதை திருக்குறளுக்கு ஒரு விளக்கவுரை போன்று விரிவுறக் காண்கிறோம். இது கவிஞருக்குத் திருக்குறளின்பால் இருந்த எல்லையற்ற ஈடுபாட்டின் வெளிப்பாடாக அமைகிறது. வாய்ப்பு நேரும்

போதெல்லாம் குறளின் மாண்பைத் தம் அழகிய கவிதைகளில் பதிவு செய்யப் பாரதிதாசன் தயங்கிய தில்லை.

"வள்ளுவனார் இப்பெரிய வையகத்தைக்
காப்பதற்கோர்
தெள்ளு தமிழ்ப்பாட்டுச் செப்பினர் – அது
பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை"

என்பது அவர் பாராட்டுக் கவிதை களில் ஒன்று.

"வள்ளுவர்க்கு நிறமில்லை, மதமும் இல்லை
மதங்கட் கப்பாலிருந்தே குறள்செய் துள்ளார்"

என்று தன் கருத்தை வலியுறுத்துவார்.

இசைப்பாடல்கள் பலவற்றில் வள்ளுவரும் திருக்குறளும் ஊடும் பாவு மாய் ஒன்றியிருக்கக் காணலாம்.

"வாழ வழி வகுத்தார் வள்ளுவனார் – தமிழ்
மறை புகன்றார் – நல்ல
முறை நவின்றார்
நம்மனோர்
வாழ வழி வகுத்தார் வள்ளுவனார்"

## மணவழகரைத் தெரியுமா?



தமிழ் இலக்கியத்திற்குத் தொண்டு செய்தவர்களில் மிகவும் குறிப்பிடத் தக்கவர் "மணவழகர்." 'மணவழகர்' என்கிற பெயருக்கு உரியவர் வேறு யாருமல்ல, திரு. வி. கல்யாணசுந்தரனார் தான்.

'புரட்சிக் கவிஞர்' பாரதிதாசன் திரு.வி.க.–வைப் பற்றி ஒரு கவிதையில் அவரை 'மணவழகர்' எனக் குறிப்பிட்டு உள்ளார்.

கல்யாணத்தை 'மணம்' என்றும் சுந்தரத்தை 'அழகன்' என்றும் குறிப்பிட் டுள்ளார்.

– எஸ்.என். ராஜாராம்

என்பது ஓர் இசைப்பாடலாய் உருக் கொள்கிறது. திருக்குறள் செப்பும் அறங்களில் மானுட வாழ்க்கை வளமும் நலமும் பெறும் என்று நம்பி னார் பாரதிதாசன். பல்வேறு குறட் பாக்களை 'மணி மிடை பவளம்' போல் வைத்து அவர் எழுதிய இசைப் பாடல் ஒன்று மறக்கவொண்ணாதது.

"முழங்கிடுகின்றதே அறம்
முட்டுப்படும் உலகே – இனவேற்றுமை
பட்டுக் கெடும் உலகே நம் திருக்குறள்
முழங்கிடுகின்றதே அறம்
'உள்ளத்தால் பொய்யா தொழுகின்
உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம்
உளன்' எனல் கேட்டீரோ?
முழங்கிடுகின்றதே அறம்"

சில அரிய குறட்பாக்களைத் தேர்ந் தெடுத்து அவற்றின் சாரமான பொருளை விளக்கி இந்த இசைப் பாடல் கம்பீரமாக ஒலிக்கக் காண லாம்.

புறநானூற்றில் 'அறம் பாடிற்றே ஆயிழை கணவ' என்று திருக்குறள் நினைவுகூரப் படுகிறது. அறம் என்ற அந்தப் பெயரையே முன்வைத்து இந்த இசைப்பாடல் ஒலிப்பதைக் காண்கிறோம்.

பாரதிதாசன் பேரிலக்கியப் பரப்பை ஆராய ஆராய அவரு டைய தமிழ் உள்ளத்தில் வீற்றிருந்த இரு பெருந்தகைகள் வள்ளுவரும் பாரதி யும் என்ற முடிவுக்கு நாம் வர முடி யும்.

வள்ளுவன் வகுத்ததே அறம்; பாரதி பேசியதே பொருள்; பாரதி தாசன் பாடலே இன்பம் என்ற உணர்வு இம்மூவரையும் எண்ணுகிற போது நமக்குள் பொங்கிப் பெருகு கிறது.

கட்டுரை

# சீர்மிகு சித்திரை!

'**சூ**ர்யம் நத்வா க்ரஹபதிம்
ஜகத் உற்பத்தி காரணம்'

என்று பராசரர் குறிப்பிடுகிறார். அதாவது 'கிரகங்களுக்கு அரசனும், பூமியின் உற்பத்திக்குக் காரணமுமானவன் சூரியன்' என்கிறார்.

சூரியன் ஒளி தருவதால்தான் பூமியில் உயிர் உள்ளவை, உயிர் அற்றவை யாவும் தன்னிலையில் உள்ளன. சூரியனின் கதிர் வீச்சு இல்லையென்றால், பூமி வெறும் கடினப் பனிக் கோளமாக மட்டும்தான் இருக்கும்.



'நம் நாள் எப்போது தொடங்குகிறது?'

'சூரியன் எப்போது தோன்றும்?'

'நம் வாரம் எப்போது ஆரம்பிக்கிறது?'

'ஞாயிறன்று.' That is sunday.

ஆக, சூரியன் வலுத்திருக்கும் நாளில் வாரம் தொடங்குகிறது.

ராசிகளில் சூரியன் பிரவேசிக்கும் போது நம் மாதம் தொடங்குகிறது.

அதேபோல் நம் வருடமும், எந்த ராசியில் சூரியன் அதிக பலத்துடன் பிரவேசிக்கிறானோ அன்றுதான் தொடங்குகிறது.

மேஷ ராசியில் சூரியன் உச்சத்திலும், சிம்மத்தில் ஆட்சியும் புரிகிறான். அதாவது சித்திரையில் உச்சம். ஆவணியில் ஆட்சி!

சித்திரையிலோ, ஆவணியிலோ புத்தாண்டு தொடங்க வேண்டும்.

ஆவணியில் வருட ருதுவும் ஆரம்பிக்கிறது. சூரியனுக்கும் ஆட்சி நடக்கிறது. ஆவணியில் வருடம் தொடங்கினால் என்னவென்றால், ஆவணி தட்சிணாயத்தில் வருகிறதே! சூரியனின் ஆட்சி என்றாலும் அப்போது அவன் நன்மையாளன் என்று கூற முடியுமா?

சோதிட சாத்திரத்தில் ஆட்சியில் உள்ளதைவிட 'உச்சத்தில்தான் கிரகங்கள் மிக நன்மை தருபவர்கள்' என்று உள்ளது. ஆகவே சூரியன் தனது உச்ச ராசியான மேஷத்தில் நுழையும்போதுதான் – அதாவது சித்திரை முதல் நாள்தான் வருடப் பிறப்பு ஆகும்.

பகவானுக்கு எத்தனையோ உருவங்கள் உண்டு. காலம் எனும் உருவத்தையும் அவர் கொண்டுள்ளார். அந்த உருவத்திற்கு மேஷ ராசி – தலை. ரிஷப ராசி – முகம், மிதுன ராசி – தோள்கள், கடக ராசி –

இதயம், சிம்மம் – வயிறு, கன்னி – இடுப்பு, துலா ராசி – அண்டப் பை, விருச்சிக ராசி – ஆண் குறி, தனுர் ராசி – தொடைகள், மகர ராசி – முட்டிக்கால், கும்பராசி – முழந்தாள், மீன ராசி – பாதங்கள் என்று பராசரர் 'ஹோரா சாஸ்திர'த்தில் சொல்கிறார்.

ஆதவனின் மேஷ ராசிப் பிரவேசம்தான் காலச் சக்கரத்தின் ஆரம்பம். சித்திரை முதல் நாள்தான் அந்தத் திருநாள். சிசு, தலையால் பிறப்பதுதான் வழக்கம். தலையாய ராசியான மேஷராசி கொண்ட சித்திரைதான் நமது புத்தாண்டு.

நில உலகில் எத்தனையோ கலாச்சாரங்கள்! காலண்டர்களும் ஏராளம். காலத்தைக் காட்டுவதுதான் 'காலண்டர்.'

பொதுவாக இப்போது உலகெங்கிலும் நடைமுறையில் உள்ள காலண்டர் க்ரிகோரியன் காலண்டர் (Gregorian Calender) என்பார்கள். பதினாறாம் நூற்றாண்டில் எட்டாவது க்ரிகோரி என்னும் போப் 1582–இல் அக்டோபர் மாதத்தில் 4–ஆம் தேதிக்குப் பின் பத்து நாட்களை விலக்கிவிட்டு அக்டோபர் 15–ஆம் தேதியை அடுத்த நாளாக அறிவித்துத் திருத்தம் செய்து காலண்டர் வெளியிட்டாராம்.

இந்தக் காலண்டருக்கு மூலம், ரோமானியக் காலண்டர்தான். அவர்களுக்கு ஜனவரி முதல் தேதியைப் புத்தாண்டாகக் கொண்டாடும் வழக்கம் இருந்தது. ஆரம்பத்தில் ஒரு வருடத்திற்குப் பத்து மாதங்கள்தான் வைத்திருந்தார்கள்.

ரோமானியர்கள் வருடம் ஜனிப்பதை 'ஜனவரி' என்றார்கள். சப்தம மாதத்தை செப்டம்பர். அஷ்டம மாதத்தை அக்டோபர், நவம மாதத்தை நவம்பர், தசம மாதத்தை டிசம்பர் என்று வைத்து வருடத்தை முடித்து வந்தார்கள். சீனர்கள் போல் பத்து மாதங்கள்தான் வருடத்திற்கு என்றிருந்தது.

ரோமானியப் பேரரசன் ஜூலியஸ் சீசர் தன் பெயரில் ஒரு மாதம் வேண்டுமென அதை



ஷைலஜா

‘ஜூலை’ என்று சொல்லி பத்தோடு பதினொன்றாக்கினார், சீசரைக் கொன்று அரசாண்ட ‘அகஸ்டஸ் சீசர்’ போட்டிக்குத் தன் பெயரில் ஆகஸ்ட் மாதத்தைச் சேர்த்தார். ‘ஜூலையைப் போல ஆகஸ்டும் 31 தேதிகள்தான், நான் ஒன்றும் மட்ட மில்லை என்று ஆணையிட்டார். இதற்காக ஃபிப்ரவரியிலிருந்து தலா ஒரு நாளைப் பிடுங்கித் தங்கள் மாதங் களில் சேர்த்தார்கள். ஃபிப்ரவரியை 28 நாட்களாக்கினார்கள்.

நமது மத்திய அரசு, 1957–இல் காலண்டர் ரிஃபார்ம்ஸ் கமிட்டியை அமைத்து ஜனவரி முதல் தேதியை சிவில் பணிகளுக்குப் புத்தாண்டுக் கணக்காகவும், மதச் சார்பான வருடம் சைத்ர மாதம் (மார்ச் 21) தொடங்குவதாகவும் அதிகாரப் பூர்வமாக இந்திய தேசியச் சட்டத் தின்கீழ் அறிவித்தது. அது அரசின் நடைமுறையில் உள்ளது.

‘ஆண்டு’ என்ற சொல் ஆட்சி தொடர்பானது. நவக்கோள்களின் நாயகன் ஆதவனின் ஆட்சி தொடர்பானது. சித்திரையில் உச்சம் பெற்று ஆதவன் உலகை ஆளத் தொடங்கி உயர்வானில் பன்னிரு ராசிகளில் பவனி வரும் காலமே ‘ஆண்’டாகும். தை முதல் நாளில் சூரியனுக்கு அதிக பலமில்லை.

இத்தகைய பெருமைமிகு சித்திரை மாதம் ஒரு மங்கல மாதமாகும். திருமணம், புதுமனைப் புகுவிழாக்கள் செய்ய ஏற்ற மாதம். சித்திரையில் பிறந்து சிறந்தோங்கியவர்கள் கௌதம புத்தர், ஸ்ரீராமானுஜர், மோதிலால் நேரு, கோபாலகிருஷ்ண கோகலே, ரவீந்திரநாத் தாகூர், பாரதிதாசன், அம்பேத்கர், புதுமைப்பித்தன் முதலியோர் ஆவர்.

திருநெல்வேலி மற்றும் மதுரை மாவட்டங்களில் சாகுபடியாகும் ஒரு வகை நெல்லுக்குச் ‘சித்திரைக்கார்’ என்று பெயர் உள்ளது.

‘சித்திரைப் பத்தில் நெல் விதைப்பு செல்வம் பொங்கும்’ என்னும் பழ மொழி குமரி மாவட்டத்தில் உள்ளது.

கன்னியாகுமரியில் சித்திரை மாதப் பௌர்ணமியன்று சூரிய அஸ்தமனத்தையும் சந்திர உதயத் தையும் ஒரே நேரத்தில் காணலாம்.

மதுரை மற்றும் ஸ்ரீரங்கத்தில் ‘சித்திரை வீதி’கள் உண்டு. நாகர்கோவிலிலிருந்து 5 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள ஓர் ஊரின் பெயர் ‘சித்திரைத் திருநாள் மகாராஜபுரம்!’

முக்கனிகளில் மாம் பழத்திற்குச் ‘சித்திரைக்கனி’ என்று பெயர்.

வாழ்க்கை இன்பமும், துன்பமும் நிறைந்ததுதான் என்பதை உணரவே சித்திரை வருடப் பிறப்பன்று பாயசத்துடன், வேப்பம்பூப் பச்சடியும் செய்து உண் கிறோம்.

●



## இசைத் தூண்கள்!

“அழகர் கோயில், ஆழ்வார் திருநகரி, குற்றா லம், சுசீந்திரம், செண்பக நல்லூர், தட்பத்ரி, தாடிக் கொம்பு, திருப்பதி, திருவனந்த புரம், திருநெல்வேலி, தென்காசி, பெங்களூர், மதுரை, ஹம்பி ஆகிய இடங்களில் உள்ள கோயில்களில் இனிமையான பலவகை ஒலி யெழுப்பும் ‘இசைத் தூண்கள்’ இருக்கின்றன!”

– பே.சண்முகம்

கட்டுரை

# சுவாமி விபுலானந்தரின் ஒப்பியல் பார்வையில் திருக்குறள்



ஒப்பியல் ஆய்வில் புகழ்பூத்த பேராசிரியர் கலாநிதி க. கைலாசபதி ''முத்தமிழ் முனிவரின் ஒப்பியல் நோக்கு'' எனும் கட்டுரையில் (1969) கூறியதாவது,

''வளர்ந்து வரும் தமிழியல் ஆராய்வுகளில் ஒப்பியல் கல்விக்கு முக்கிய இடமுண்டு. அடிகளார் இத்துறை முன்னோடிகளுள் ஒருவர் எனலாம். அடிகளார் காலத்துத் தமிழ் அறிஞரில் பெரும்பாலானோர் ஆங்கில இலக்கியம், வரலாறு என்பனவற்றை அறிந்திருந்தனரெனினும், அவற்றைத் தமிழ் இலக்கிய நோக்குடன் இணைத்துக் கொண்டார் என்பதற்கில்லை.

பழமையும் புதுமையும் மேற்றிசைச் செல்வத்தையும், கீழைத்தேச நாகரிகத்தையும் ஆழ நோக்கி அவை யாவற்றிலும் உயிர்த் துடிப்புடன் உள்ளவற்றை எடுத்துக் காட்டியவர் அடிகள்.''

அறத்துப் பாலாராய்ச்சி (ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் ஜனவரி – பிப்ரவரி 1924) திருக்குறள் முதலதிகாரமும் – திருச்சிரபுரத் திருப்பதிகமும் (தமிழ்ப் பொழில் – துணர் 16), THE BOOK OF BOOKS IN TAMIL LAND -I (Vedantakesari - October. 1940) எனும் கட்டுரையில் விபுலானந்தர் திருக்குறளை ஒப்பாய்வு செய்துள்ளார்.

'அறத்துப்பாலாராய்ச்சி'யில் திருக்குறட் பாவைத் திருத்தியமைக்கும் முயற்சியைக் கண்டித்துள்ளார். சான்றாக, 'அறுதொழிலை' என்பதை 'அறிதொழில்' என்று திருத்தியதைக் கண்டித்துள்ளார். 'அவிசொரிந்து' எனத் தொடங்கும் குறட்பாவை வேத எதிர்ப்புக் கண்ணோட்டத்தில் விளக்கமளிப்பதையும் விபுலானந்தர் ஏற்கவில்லை. 'இதனினும் இது நன்று' எனும் தருக்க நெறியில் பொருள் கொள்ள வேண்டும் என வாதிட்டுள்ளார். ''கொள்வோன், இடம், சார்பு'' என்றும் கூறுகின்றார் விபுலானந்தர். வேத நூலினுண்மையையும் திருக்குறள் தழுவியுள்ளது என்பதும் அவருடைய வாதமாகும்.

'திருக்குறள் முதலதிகாரமும் திருச்சிரபுரத்துத் திருப்பதிகமும்' எனும் கட்டுரையில், ''திருவள்ளுவ நாயனாரது கடவுள் வாழ்த்தும் ஆளுடைய பிள்ளையார் அருளிச் செய்து 'புவம், வளி, கனல், புனல்' என்னும் குறிப்பினையுடைய திருச்சிரபுரத்துத் திருப்பதிகமும் சிற்சில ஒப்புமைப் பகுதிகளோடு திகழ்கின்றன'' என்று ஒப்பாய்வு நோக்கில் விளக்கியுள்ளார், விபுலானந்தர்.



சுவாமி விபுலானந்தர்

இந்த ஒப்பாய்வில் ஒரு பகுதி வருமாறு :

2–ஆம், 3–ஆம், 4–ஆம், 5–ஆம், 6–ஆம், 7–ஆம் குறள் வெண்பாக்கள், 5–ஆம், 1–ஆம், 2–ஆம், 3–ஆம், 6–ஆம், 8–ஆம் தேவாரப் பாடல்களோடு ஒருபுடை ஒப்புமையுடையவாகலின் ''வாலறிவன்'' யோகிகளுள்ளத்திலே தோன்றும் இறைவனையும், 'மலர்மிசையேகினான்', 'பதும நன்மலரது மருவிய சிவனையும்', 'வேண்டுதல் வேண்டாமை யிலான்' இடும்பை தீர்க்குங் காவற் கடவுளாதலின், 'அறிதுயி லமர் அரிவுரு வியல் பரனை'யும்,



பெ.சு. மணி

'இறைவன்', 'முழுவதும் அழிவகை நினைவொடு முதலுரு வியல்பரனையும்'யும், 'பொறிவாயி லைந்தவித்தான்', 'பொறியொழி அருதவ முயல் பவர் தனதடியடைவகை நினையரனை'யும், 'தனக்குவமை யில்லாதான்' 'அரியும் அயனும் அறிவரிய' 'முதல்வனையும் குறித்து நின்றன வாமோ' என எண்ண இடமுண்டு.

மேலும், 'ஆதிபகவன் முதற்றேயுலகு' என்றாராதலின், எயிற்றினாலே உலகினை எடுத்து நிறுவிய ஆதிவராகம் வழிபட்ட தலைவனே 'ஆதி பகவன்' என்பதும், பொருள், இன்பம் என்னும் இருபெருங் கடலிடைப் படிந்து நின்ற இலங்கையர் கோனை யுய்யக்கொண்ட அறக்கடலாகிய பேரருளாளன் 'அறவாழி யந்தணன்' என்பதும் ஒருவகையாக அறியக் கிடக்கின்றன.

மேலே 'விஞ்ஞான தீபம்' இந்திய விஞ் ஞானப் பட்டதாரி பௌராணிகமான கதைகளை மேற்கோளாகக் காட்டி, 'ஆதி பகவன், அறவாழி யந்தணன்' எனக் கடவுள்களுக்கு பொருள் கொண்டது வியப்பிற்குரியது என்று கருதவும் இட முள்ளது எனலாம்.

**அறத்துப் பாலாராய்ச்சி :** சுவாமி விபு லானந்தர் எனும் துறவிப் பெயரைக் கொண்டதற்கு முன்பாக 'பிரபோத சைதன்யம்' எனும் பிரம்ம சரியப் பெயரிலும் எழுதிய கட்டுரை 'அறத்துப் பாலாராய்ச்சி' கட்டுரையாகும். இயற்பெயரான மயில்வாகனர் பெயரைத் தொடர்ந்து, பிரபோதசை தன்யர் பெயரைக் கொண்டு, சென்னை இராம கிருஷ்ண மடத்தில் சேர்ந்த காலத்தில் எழுதப் பெற்ற 'அறத்துப்பாலாராய்ச்சி'யில் குறட்பாக் களைச் சில ஆய்வாளர்கள் திருத்தியமைக்க முயன்றதை மறுத்துள்ளார் பிரபோதசைதன்யர். கட்டுரை சென்னை ஸ்ரீ இராமகிருஷ்ண மடத்தின் மாத வெளியீடான ஸ்ரீ இராமகிருஷ்ண விஜயம் (1924 பிப்ரவரி) இதழில் பின்வருமாறு தொடங்கப் பெற்றுள்ளது :

''மஹாரிஷிகள் அருந்தவமியற்றி வருந்திப் பொருள் கண்ட வேதாகமங்களுக்குத் தற்காலத்து ஆராய்ச்சியாளர் சிலர் மிகவும் எளிதாகப் பொருள் கூறிவிடுகின்றனர். இவருள் ஒருவர் 'ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்' என்னும் திருக்குறட்பாவைத் திருத்தியமைக்க முயன்று 'அறுதொழிலை', 'அறிதொழில்' ஆக்கினார். இவர் அறிதொழில் இதுவாயின், அறிவனுரை கடல்வாய்ப் பட்டொழிந்ததெனக் கூறுவதும் இவர்க்குத் தகவுடையதே. முதனூலைச் சமுத்திரத்துள் அமிழ்த்திவிட்டால், 'அரங்கின்றி வட்டாடி'யாங்குத் தாம் நினைத்தவாறெல்லாங் கூறலாமென்றெண்ணினார் போலும்.

''அவிசொரிந்தாயிரம் வேட்டலினொன்ற னுயிர் செகுத்துண்ணாமை நன்று'' என்னும் மறை மொழியைத் தன்னுண் மருவி நின்றதாகலின், தமிழ் வேதம் இருக்காதி வேதங்களொடு மாறு கொண்டதெனவும் இங்ஙனம் மாறுகொண்ட மையானும் பிற காரணங்களாலும் இருக்காதி வேதங்கள் பிரமாண நூல்களாகக் கருதத்தகுவன வல்லவெனவும், ஆராய்ந்து முடிவு செய்தாரிவ் வாராய்ச்சியாளர். இவர் அறியாமையினாலோ, மறதியினாலோ, பிறிதெக்காரணத்தினாலோ, மூவகைத்தாகிய கொள்வோன், இடம், சார்பு என்னும் உரையியைபுகளை ஆராயாது முடிவு செய்து விட்டாரென இவரது ஆராய்ச்சி வெளிப் படுத்துகின்றது.

''பண்டை நாளிலிருந்த பெரியோர் சரித்திர வாராய்ச்சி செய்வதைத் தமக்கொரு தொழிலாகக் கொண்டாரல்லர்'' எனப் பண்டை நாளிலிருந்த பெரியோரை இழியாது இழித்து கூறுந்தற்கால ஆராய்ச்சியாளர், அன்னார் வழுவாது கைக் கொண்டு வந்த தருக்கநூன் மரபினையும் இழித் தொதுக்கி விட்டனரோ? அங்ஙனம் இழித் தொதுக்காது விடின், இருக்காதி வேதங்கள் கூறிய ஒரு முடிபையும், திருவள்ளுவப் பயன் கூறிய ஒரு முடிபையும், ஒப்பவைத்து நோக்கு மிடத்து, கொள்வோன், இடம், சார்பு என்னும் இவை பொருந்துமாறறிந்தன்றோ நோக்குதல் வேண்டும். இருக்காதி வேதங்கள் பல்லாயிரம் இடங்களில், ''புலையுங் கொலையுங் களவுந் தவிர் மின், உலக வாழ்க்கையோ கணப்பொழுதிலகன்று விடுவது, ஆதலால், ஐம்புலனடக்கி யுள்ளத்தைப் புறம் போகவிடாது நிறுத்திச் சாந்த நிலையினின்ற பரம்பொருளாகிய கடவுளை வழிபடுமின், ஆயிரம் யாகங்களைச் செய்து அடைகின்ற சுவர்க்கலோக வின்பமும் கழிந்து போகு நீர்மையது. ஆதலால், அவையனைத்தையுந் துறந்து நித்திய வாழ்வை யடையும் மார்க்கத்தைத் தேடுமின்'' என முரசறை கின்றனவே. இங்ஙனங் கூறிய வாக்கியங்களுள் ஒன்றினையல்லவோ 'அவிசொரிந்து' என்னும் மறைமொழியோடு ஒப்பவைத்து நோக்குதல் வேண்டும்.

என்றின்னோரன்ன நியாயங்களை நாம் ஆராய்ச்சியாளருக்குச் சொல்லப்புகுமிடத்து அவ ரெம்மை விளித்து, ''இவ்வாறெல்லாம் தீர விசா ரித்துப் பொருந்தும் வாக்கியத்தைப் பொருந்த

வைத்து நோக்குதல் ஆராய்ச்சி யாளராகிய எமக்குரிய கடமை யல்ல. வேதந்தன்னுள்ளே முரணி நிற்குமெனின் எமக் கென்ன, யாம் எமக்கிசைந்த ஒரு சொற்றொடரையெடுத்துக் காட்டி எமது கட்சியை நிறுவு வோம்'' என ஆராய்ச்சியாளர் கூறுவதுமியல்பு. அங்ஙன மாயின், ''ஒரு நூலினுள்ளே பொருளின்பத்தைக் காதலித்த இல்லற வியலோனுக்குக் கூறிய ஒரு குறட்பாவோடு ஒப்பவைத்து நோக் குதல் தோல்வித்தானத்தின் பாலதாமோ, அறி ஞரவைக்களத்து நிலைபெறுவதற்குரிய முடி பாமோ'' என ஐயுறுதல் எமக்கு இயல்பு.




**வேதங்களில் கூறப்படும் யாகங்கள் (வேள்வி கள்) :** இனி, உயிர்க்கொலையோடு கூடிய யாகங் களை எல்லா மக்களுங் கட்டாயஞ் செய்து முடிக்க வேண்டுமென்று வேதங்கள் விதிமுறையாகக் கட்டளையிடுகின்றனவா; அன்றேல், அத்தகைய யாகங்களை விழைவு நிறைவு (காமிய) வினை களாக வைத்து, இன்னது செய்தோன் இன்ன நன்மையையும், அதனோடு இன்ன தீமையையும் பெறுவான் என்று உரைத்துச் செல்கின்றனவா, எனவும் ஆராய்தல் வேண்டும்.

மேலும், ''அவிசொரிந்து'' என்னும் முதனிலை யையுடைய குறட்பா, இல்லறத்தானுக்குரியதா? துறவறத்தானுக்குரியதா? இருபாலாருக்கு முரியதா? விழைவுநிறை விடத்ததா? விதிமுறை யிடத்ததா? என்றின்னவற்றை யெல்லாமாராய்தல், உண்மை காணவிழைவோருக்கு இன்றியமையாத தாமென்பது. ''இஃது எம்முள்ளத்துக்கு இன்ன வாறு தோற்றுகிறது'' என வாளா மனப்பாங் குரைக்கும் மயக்கவுணர்ச்சியில் வீழாது, உண்மை காண்டற்குக் கருவியாகிய இலக்கண நூல், தருக்கநூல் வழிநின்று இம்மறைமொழியை யாராய் தலும் வேண்டும்.

அங்ஙன மாராய்வுழி, இது தன்னுள் இரு வகைக் கருமங்களைக் கூறியதெனவும், அவற் றுள் ஒன்றினும் பார்க்க மற்றொன்று மிக்கதென உரைக்கும் மார்க்கத்தால் இருகருமங்களையுந் தழுவிய சார்பினது எனவும் அறிதல் கூடும். ஒரு கருமம் இந்திரன் முதலிய இறைவர் பதங் களையடைய விழைவோனுக்குரியது, மற்றொன்று வீட்டின்பத்தை நாடினோனுக்குரியது, ''இதனினும் இது நன்று'' என்றமையால் இரண்டும் நன்றெனத் தழுவப்பட்டன. அதிகாரப்பட்டு நின்றது துறவறமாதலின், இக்குறட்பா துறவினது உயர்வு கூறிற்று. இங்ஙனமே பிறாண்டும், ''நன்றாகுமாக்கம் பெரிதெனினுஞ் சான் றோர்க்குக் கொன்றாகுமாக் கங்கடை'' என்புழியும் யாகாதி கருமங்களினால் வரும்பயன் ''நன்று'' எனவும் ''பெரிது'' என வும் தழுவப்பட்டது. ஆண்டும் அதிகாரப்பட்டு நின்றது துறவு ஆதலின், இது கடையாய ஆக்கம். இதனினும் மிக்க தலையாய ஆக்கம் பிறிதொன்று உண்டு என்னத்துறவு வலியுறுத்தப்பட்டது.

துறவு நிலையினின்றானை நோக்கித் ''தாம் வீழ்வார் மென்றோட்டு யிலினினிதுகொல் தாமரைக் கண்ணா னுலகு''என இன்பநிலைக் குறட்பாவைக் காட்டிப் பரிகசிப்பதும், இன்பமும் பொருளும் விழைந்து நின்ற இல்லறத்தானை நோக்கி, ''அடல் வேண்டுமைந்தன் புலத்தை விடல் வேண்டும் வேண்டிய வெல்லாமொருங்கு'' எனப் பரிகசிப்பதும், பரிகாச வார்த்தையாமேயன்றி உற்றுழியுதவும் வார்த்தையாகாது. அவனவன் விழைந்து நின்ற பொருளினுள் மிக்கதொன்றி னைக் காட்டுவதே அறிஞர்க்குரிய முறையாகும். ஆதலின், நாயனார் துறவு நிலையினின்றார்க்குத் துறவின் பெருமையைக் காட்டுதற்குத் தொடங்கி அத்துறவினாலடையும் பயனாகிய வீட்டின்பம் இந்திரப் பதவியினும் மேலானது என்பதைக் கூறி னார். அங்ஙனங் கூறுமிடத்தும் அவிசொரிந் தாயிரம் வேட்டலை ''நன்று'' எனத் தழுவினாரே யன்றித் தீது எனக் கடிந்து விலக்கினாரல்லர்.

'THE BOOK OF BOOKS OF TAMIL LAND' எனும் கட்டுரைத் தொடர் எழுதத் திட்ட மிட்டு சுவாமி விபுலானந்தர் முதலில் திருக் குறளைக் குறித்து எழுதினார். விபுலானந்தரின் திருக்குறள் ஒப்பாய்வுச் செய்திகள் சில குறிப்பிடத் தக்கன.

அரிஸ்டாட்டில், கௌடில்யர், திருவள்ளுவரி டையே காணப்பெறும் ஒப்புமைகளைத் தனியே எழுத வேண்டும் என்று கூறிய விபுலானந்தர் அரிஸ்டாட்டிலின் சொல்வன்மை குறித்த கருத் துக்களின் சாராம்சம் திருக்குறள் பொருட்பாவில் 64 முதல் 73 வரையில் உள்ள அதிகாரங்களின் குறட்பாக்களில் உள்ளது என்று விபுலானந்தர் ஒப்பாய்வு நோக்கில் குறிப்பிட்டுள்ளார்.

அரிஸ்டாட்டிலின் சொல்வன்மை, மற்றும் சில தமிழ் இலக்கியங்களில் உள்ள ஒற்றுமைகளை விளக்கி விபுலானந்தர் 1936–இல் அண்ணா மலைப் பல்கலைக்கழகத்தில் மூன்று சிறப்புச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். இந்தப் பொழிவுகள் அச்சில் வெளிவந்தனவா என்பதை அறிய முடியவில்லை. ஆனால், 1939–இல் யாழ்ப் பாணத்தில் நிகழ்த்திய ‘‘சொல்வன்மை’’ எனும் சொற்பொழிவில் அண்ணாமலைப் பல்கலைக்கழக உரைகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இவ்வுரை யில் திருக்குறள் – அரிஸ்டாட்டில் பற்றிய செய்தி யில்லை.

‘நட்பாராய்தல் – திருவள்ளுவரும் அரிஸ்டாட் டிலும்’ எனும் கட்டுரையில் பேராசிரியர் முனைவர் ப. மருதநாயகம் ‘‘நட்பைப் பற்றிப் பேசும் மேலை அறிஞர்களுள் ஓரளவிற்கு வள்ளுவர்க்கு நெருக்க மானவர் அரிஸ்டாட்டிலே’’ என்று குறிப்பிட் டுள்ளார். ‘‘அரிஸ்டாட்டில் மட்டுமே வாழ்க்கை அனுபவங்களிலிருந்து பகுத்தறிவிற்கேற்ப எவ் விடத்திற்கும் பொருந்தக்கூடிய முடிவுகளை எடுக்கும்போதும், நன்றும் தீதும் மனிதனின் ஆற்ற லுக்கு உட்பட்டவையென்று அழுத்தமாக அறிவிக் கும்போது மனிதன் அக்கறை காட்ட வேண்டிய வற்றுள் நட்பை மிக உயர்ந்த நிலைக்கு ஏற்றும் போதும் வள்ளுவரை நமக்கு நினைப்பூட்டுகிறார்’’ என்று கூறியுள்ளார்.

கி.மு. 580–இல் பிறந்த கிரேக்கத் தத்துவ ஞானி பித்தோகோரஸின் படைப்புகளில் ஒன்றான ‘‘The Golden verses’’கள் திருக்குறளுடன் நெருக்கமாக ஒத்துள்ளன என்று விபுலானந்தர் குறிப்பிட்டுள்ளது, அக்காலத்தில் புதிய செய்தி யாகும்.

1904–இல் வெளிவந்த இந்நூலின் பதிப்புக்கு அன்னிபெசண்ட் அம்மையார் ஒரு முன்னுரை எழுதியுள்ளார். இதில் ஒரு பகுதி வருமாறு, ‘‘One of the master builders of old was Pythagores; he brought from the wisdom of the BUDDHA and translated into Greek thought, adding to its and austere grandeur the beauty characteristic of Greece, as Grecian art made tenderer the stern outlines to Indian sculpture.’’

‘‘பித்தோகோரஸ் பௌத்த சமயத்தின் பிரதி நிதி. ஆன்மாவின் மறுபிறவிக் கோட்பாடு, ஐந்து பூதங்கள் பற்றிய கொள்கை, வடிவக் கணிதத்தில் பித்தோகோரஸ் சூத்திரம், சோயா அவரை சாப்பிடத் தடை, பித்தோகோரஸ் குழுவினர் சகோதரத்துவத்தின் சமய தத்துவப் பண்புகள் யாவும் ஐயமற இந்திய மூலமாகும்’’ என்று விபுலானந்தர் சாற்றியுள்ளார்.

‘கோல்டன் வெர்ஸஸ்’ இரு பிரிவுகளைக் கொண்டது. முதல் பிரிவில் நல்ல மனிதனை உரு வாக்கும் மனிதப் பண்புகள் செயல்முறைக்கேற்ப விளக்கப்பட்டுள்ளன. இரண்டாவது பிரிவில் நல்ல மனிதனைத் தெய்வீக நிலைக்கு உயர்த்தும் தியான முறைகள் கூறப்பட்டுள்ளன.

விபுலானந்தர் ‘கோல்டன் வெர்ஸஸ்’களின் எண்ணிக்கை 82 என்றும், அவை ஒவ்வொன்றும் ஒரு வரியில் அமைந்துள்ளன என்றும் குறிப்பிட் டுள்ளார். இந்நூலைப் பற்றியும், பித்தோ கோரஸைப் பற்றியும் பின்வருமாறு விபுலானந்தர் எழுதியுள்ளார்.

‘‘தினசரி தியானங்களைக் கொண்டது, இந்நூல். பித்தோகோரஸ் ஆன்மாக்களைப் பயிற்றுவிப்பர் என்று சரியாகவே கொண்டாடப் படுகின்றார். பௌதிக, அன்பார்ந்த, அறிவார்ந்த, தெய்வீக வாழ்க்கைக்குத் தேவைப்படும் அனைத்து முக்கியமான இலட்சியங்களை ‘கோல்டன் வெர்ஸஸ்’ வழங்குகின்றன. அவற்றை ஒழுங்காக நடைமுறையில் கொண்டு வரும் பொழுது, ஆத்மாவின் அனைத்து உண்மையான, விழுமியப் பண்புகள் வந்தடைகின்றன. இவை, கட்டுப்பாடு மிக்க வாழ்க்கையில் இயல்பான பண்பு களாகப் புறத்தூண்டுதலின்றித் தாமாகவே வந்தடைகின்றன.’’

‘கோல்டன் வெர்ஸஸ்’ முழுவதையும் நாற்பத்து நான்கு குறட்பாக்களில் காணலாம் என்றும் விபுலானந்தர் குறிப்பிட்டுள்ளார்.

‘கோல்டன் வெர்ஸஸ்’ வரிகள் சிலவற்றை யும், அவற்றுடன் ஒத்துள்ள குறட்பாக்கள் சில வற்றையும் விபுலானந்தர் திருக்குறள் ஒப்பாய்வில் எடுத்துக் காட்டியுள்ளார்.

**‘‘கோல்டன் வெர்ஸஸ்’’**

Wealth comes and goes

Of ills, the Goddess Fortune gives to man

Bear meekly thou thy lot, nor grieve at it,

But cure it as thou canst, remember this;

Fate gives the least of evil to the good.

Many the resonings that on mens ears

Fall; good and bad - admire not all of such

Nor shun them neither.

மேற்காணும் கவிதை வரிகளுடன் ஒப்பிடத் தக்க குறட்பாக்கள் எண்களை மட்டும் (332, 339, 379, 423) விபுலானந்தர் குறிப்பிட்டுள்ளார். அந்த குறட்பாக்கள் பின்வருமாறு தரப்படு கின்றன.

1. கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ் செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று – (332)

2. உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு – (339)

3. நன்றுஆங்கால் நல்லவாக் காண்பவர் அன்றுஆங்கால்
அல்லற் படுவது எவன் – (379)

4. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு – (423)

இவ்வாறு பின்வரும் கோல்டன் வெர்ஸஸ் களையும், அவற்றுடன் ஒப்புமை பெறும் குறட்பாக் களின் எண்களை மட்டும் வழங்கியுள்ளார், விபுலானந்தர்.

"If one speaketh false,

Be calm, and practise ever this that now

I say, Let no man's word or deed seduce thee

To do or say aught not to thy best good.

First think, then act; lest foolish be thy deed

Unhappy he who thoughtless acts and speaks."

இவற்றோடு ஒற்றுமையுள்ள குறட்பாக்கள் எண்கள் பிறகு 159, 157, 467–களைத் தந்துள்ளார் விபுலானந்தர். இவையாவன...

1. துறந்தாரின் தூய்மை உடையார் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர் – 159.

2. திறன்அல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறன்அல்ல செய்யாமை நன்று – 157.

3. எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு – 467.

தொல்காப்பியம், மணிமேகலை, சிலப்பதி காரம், சீவகசிந்தாமணி, திருக்களிற்றுப் பாடியார், திருக்கலியானையுலா முதலான பல்வேறு நூல் களுடனும் திருக்குறளை ஒப்பாய்வு செய்துள்ளார் விபுலானந்தர்.

**முடிவுரை :** சுவாமி விபுலானந்தர் வைதிக நெறி, வேதமரபுகளைத் திருக்குறளில் எவ்வாறு அமைந்துள்ளது எனும் கோட்பாட்டை வலியுறுத்தி யவர். வேத மரபு வழியாக உரை கூறுவதை முற் றிலும் எதிர்த்துப் பல ஆய்வுகள் வெளிவந்துள் ளன என்பதும் குறிப்பிடத்தக்கது.



அரிஸ்டாட்டில்

அறத்துப்பால் ஆராய்ச்சிக் கட்டுரையைப் பின்வருமாறு முடித்துள்ளார் சுவாமி விபுலானந்தர்.

"இப்பெற்றியை யறியாத சமண பௌத்த நூலாசிரியர்கள் யாகாதிகருமங்களையும் அவற் றைக்கூறிய வேதநூலையும் இழித்துரைத்தார்கள். நாயனார் முக்காலமு முணர்ந்த அறிவராதலால், வான்வழங்குவதற்கு யாகாதிகருமங்கள் வேண்டப் படுவன வெனவும், உலக நிலை வெறுவதற்குப் புதல்வரைப் பெறுதல் அவசியமெனவும், உணர்ந்து கொலை, காமம் என்னும் இவற்றை நன்றாமாற றிந்து தழுவி, வேதநூலினுண்மையை யுணர்ந்து, தாமும் அவ்வாறே நூல் செய்தார். நாயனாரும் வேதமும் காட்டிய வழி நில்லாது சமண மதம் பற்றி நின்ற இல்லறத்தார் பலர் துறவறத்தாருக்கெனச் சிறப்புற வகுத்துக்கூறிய விரதங்களைத் தாமும் அனுட்டிக்க முயன்றமையால் தமக்குரிய பொருளின்பங்களையும் துறவு நிலையோருக்குச் சிறப்பாகவுரிய வீட்டினையும் இழந்து தம்மையும் தமரையுந் தமது நாட்டினரையுந் துயரமும் வறுமை யும் பீடிக்குமாறு நடந்து கொண்டனர்." – பிரபோத சைதந்யர்.

மருத்துவம்

# வாய்ப்புண்



டாக்டர் எஸ். நிரஞ்சனாதேவி

**வா**ய்ப்புண் என்பது, உதட்டில் அல்லது நாக்கில் சிறு சிறு கொப்புளங்கள் போன்று தோன்றி, சில நாட்களில் உளுந்துப் பருப்புப் போன்று வெள்ளைநிறக் குழிப்புண்ணாக மாறும். அதில் எரிச்சல், வலி ஏற்பட்டு உணவு மற்றும் நீர் அருந்தும்போது வலி ஏற்படும். அதனைக் கவனிக்காமல் விட்டால், கழுத்தில் நெறி கட்டும், காய்ச்சல் வரும்.

**வாய்ப்புண் வர முக்கியக் காரணங்கள் :** 1. ஊட்டச்சத்துக் குறைபாடு. 2. நோய் எதிர்ப்பாற்றல் குறைவாக இருத்தல். 3. இரைப்பையில் புண். 4. இரவில் வேலை பார்ப்பது, இரவில் கண் விழித்து அதிக நேரம் படிப்பது, தூக்கம் கெடுவது, மன அழுத்தம் முதலியவையாகும்.

மேலும் நீண்ட நாட்களாகச் சரிவிகித உணவு உண்ணாதவர்களுக்கும், இரும்புச் சத்து, ஃபோலிக் ஆசிட் (Folic Acid) குறைபாடு ஏற்பட்டு வாய்ப்புண் வரும்.

வாய்ப்புண் வருவதற்கு மற்றொரு முக்கியமான காரணம், செயற்கை வண்ண உணவுகள், மருந்து ஒவ்வாமை எனவும் கூறலாம்.

அதிகமாகக் கவலைப்பட்டாலும் மன அழுத்தம் அதிகரித்து வைட்டமின் பி–12 குறைவினால் வாய்ப்புண் வரும்.

பல் சொத்தை இருந்தாலும், உணவின் அழுக்குகள் பற்களின் இடையில் தங்கித் துர்நாற்றம் ஏற்பட்டு, அதன் ஒவ்வாமையால் வாய்ப்புண் வரும்.

வெற்றிலை, புகையிலை, அதிகச் சுண்ணாம்பு, புளி, காரம் சேர்ப்பதாலும் வாய்ப்புண் வரும்.

இவை அனைத்தும் சாதாரணக் காரணங்கள்தான். இவற்றை நாமே கண்டறிந்து வாய்ப்புண்ணைக் குணமாக்கி விடலாம்.

எய்ட்ஸ் (உயிர்க்கொல்லி நோய்), சின்னம்மை முதலிய கிருமிகள் தாக்கி வரும் நோயினாலும், புற்றுநோய் முதலிய பெருநோயினாலும் வாய்ப்புண் வருவது இயல்பு.

Candida Albicans முதலான பூஞ்சைக் கிருமிகளின் பாதிப்பால் நாக்கில் கட்டித்தயிர் போல

வெண்படலம் உருவாகிப் புண் ஏற் படும்.

**சிகிச்சை :** பெரும்பாலான வாய்ப் புண்கள் சரியான உணவுகள் மூலமே குணமாகிவிடும். அதேநேரத்தில் வாய்ப்புண் வெகுநாட்களாக இருந் தால், புற்றுநோயாக மாற வாய்ப் புள்ளது.

சத்துக் குறைபாடு என்றால், சத்து மாத்திரை மற்றும் இரும்பு டானிக் (Iron Tonic) அருந்த வேண்டும்.

கிருமித் தாக்குதல் (Infection) கார ணமாக வாய்ப்புண் இருந்தால், குணப் படுத்துவதற்குச் சரியான மருத்துவம் மேற்கொள்ளுதல் வேண்டும்.

சித்த மருத்துவத்தில் குங்கிலிய வெண்ணெய் உள்ளது. அதை வாய்ப் புண்ணின் மேல் தடவி வர, புண்கள் ஆறும்.

உள்ளுக்குச் சாப்பிட இரும்புச் சத்து மாத்திரையும் உள்ளது. மேலும் காசுக்கட்டி மாத்திரையினைச் சப்பிச் சாப்பிட்டுவர, வாய்ப்புண் குண மாகும்.

திரிபலா சூரணத்தினைக் கொண்டு பல் துலக்கிவர, வாய்ப்புண் ஆறும்.

**உணவு முறை :** கீரை, பால், தயிர், மீன், நண்டு முதலியவற்றை உணவில் அதிகம் சேர்க்க வேண்டும்.

காய்கறிகளில் சுண்டைக்காய், தக்காளி, அவரைக்காய் முதலிய வற்றை அதிகம் சேர்க்க வேண்டும்.

பழங்களில் பேரீச்சம்பழம், அத்திப் பழம், ஆப்பிள், சப்போட்டா முதலிய வற்றை அதிகம் எடுத்துக்கொள்ள வேண்டும்.

மேலும் விபரங்களுக்கு கோவை கஸ்தூர்பா காந்தி சித்த மருத்துவ மனை மற்றும் ஆராய்ச்சி மையத்தை அணுகலாம் அல்லது 0422 – 2580796 எண்ணில் தொடர்பு கொள்ளலாம்.

# வாசகர் கடிதங்கள்

**அ**ருட்செல்வரின் 95–ஆவது பிறந்த நாளை நினைவுகூரும் வகையில் 'ஓம் சக்தி' மார்ச் மாத இதழின் முகப்பினை அலங் கரித்திருந்த அருட்செல்வரின் இயல்பான வண்ணப்படம், அப்புண்ணியவான் இன்று நம்மிடையே இல்லை எனப் பெரிதும் ஏங்க வைத்திருந்தது.

– இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

**'ஓ**ம் சக்தி' மார்ச் இதழில் 'ஒரே சமயத்தில் நான்கு தேர்தல்களை' எப்படி நடத்த வேண்டும் என்பதை 15 ஆண்டு களுக்கு முன்பே அருட்செல்வர் சுட்டிக் காட்டியிருப்பது அவரது தீர்க்கதரிசனத் திற்குக் கட்டியம் கூறுவதாகும்.

– யூ. பைஸ் அஹமத், நாமக்கல்.

**ச**ன் நியூஸ் தொலைக்காட்சியில் ஒளி பரப்பான டாக்டர் ம. மாணிக்கம் அவர் களின் நேர்காணல் 'ஓம் சக்தி' மார்ச் இதழில் வெளியாகியிருந்ததைப் படித்து வியந்தேன். கேள்விகளுக்கு அவர் அளித்த பதில்கள் வெகு சிறப்பானவை!

– கே.ஜி. ராஜேந்திரபாபு, பெங்களூர்.

**ஜெ**யகாந்தனின் சிருஷ்டிப்பின் ரக சியத்தை ஆணி அடித்தாற்போன்று நன்கு விளக்கியிருந்தார் கட்டுரையாளர் ராஜேந்திரபாபு. இலக்கியச் சுவையோடு இருந்தது.

– ஆர்.கே. லிங்கேசன்,
மேலகிருஷ்ணன்புதூர்.

**'பா**ரதிதாசன் கவிதைப் பெருவெளி' கட்டுரையில், பாரதி, பாரதிதாசன், குமர குருபரர், மில்டன் ஆகியோரின் சிந்தனை களை அற்புதமாக விளக்கியிருந்தார் கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம்.

– பாரதிசுந்தர், குறண்டி.

**மா**ர்ச் மாத 'ஓம் சக்தி' இதழில் கூத் தம்பூண்டி வரலாற்றுத் தொன்மையின் சின்னங்கள், குடைவரைக் கோயில்கள் பற்றிப் படித்து அறிந்தேன், அதிசயித்தேன், பெருமைகளை நுகர்ந்தேன். கட்டுரை யாளருக்கு மனம் கனிந்த பாராட்டுக்கள்.

– எஸ். சுந்தர், திருநெல்வேலி.

**'ஓ**ம் சக்தி' மார்ச் இதழில் வெளிவந்த இரண்டு சிறுகதைகளும் அருமை. பெற் றோர்களைப் புறக்கணித்துச் சொத்துக் களுக்குச் சொந்தம் கொண்டாடும் நிலையை இரு கதைகளும் சுட்டிக் காட்டின!

– அரு. லெட்சுமி, கோவை.

**'ந**வீன நீர்வழிச்சாலைத் திட்டம்' தமிழ்நாட்டு மக்களின் கண்ணீரைத் துடைக்கும் அற்புதமான திட்டம். அத் திட்டத்தை வாசகர்களுக்கும், மக்களுக் கும் எடுத்து விளக்கி விழிப்புணர்வை ஏற்படுத்திய பொறியாளர் ஏ.சி. காமராஜ் அவர்களுக்குப் பாராட்டுக்கள்.

– லிங்கம் சின்னசாமி, தாராபுரம்.

**"ரா**மநவமி" வருவதை முன்னிட்டு வெளியாகியிருந்த "ஸ்ரீ ராமநவமிச் சிந் தனைகள்" கட்டுரையைப் படித்து நெஞ் சம் நெகிழ்ந்தேன். மனநிறைவைத் தந்த கட்டுரை!

– உஷா முத்துராமன், திருநகர்.

**சீ**னாவில் உள்ள சிறுவன் ஒருவன் யோகா மூலம் பத்து லட்சம் சம்பாதிக்கும் செய்தி, அந்த யோகாவைக் கொடை யாகத் தந்த இந்திய மண்ணின் வள்ளல் தன்மையை எண்ணி வணங்க வைக்கிறது.

– முத்தமிழருவி மாரிமுத்து,
அ. வாடிப்பட்டி.

**மா**ர்ச் மாத இதழில் ஔவையாரின் பாடல்களைப் பற்றிக்கூறியது தற்காலத் தில் கட்டாயத் தேவை ஆகும்.

– இரா. தியாகராசன், இலால்குடி.

**அ**றிவை (மதியை) குளிர் நிலவுப் பெண்ணாக்கிப் பல்சுவைத் தமிழ் வண் ணங்களில் கவிதைச் சுவைகூட்டிக் கருத்துச் சுவையேற்றியும், கவிதை வடித்த கவிஞர் சென்னிமலை தண்டபாணிக்கு அன்பு கனிந்த பாராட்டுக்கள்!

– வி.எஸ். கிருஷ்ணமூர்த்தி,
வரட்டணப்பள்ளி.

**க**ர்நாடகம் – 'கதக்' கலைக் கோயில் கள் கட்டுரை பல தகவல்களுடன் பயனு டையதாய் இருந்தது. ஆன்மிக உணர்வை ஊட்டியது.

– சு. இலக்குமணசுவாமி, மதுரை.



# கழிவுகளை வெளியேற்று!

**எஸ். ஹாஜா**

உண்ணும்
உணவின் கழிவு - சில
மணிநேரத்தில்
மலமாய் வெளியேற

உறிஞ்சும்
காற்றின் கழிவு
கண் இமைக்கும் நேரத்தில்
கார்பன் டை ஆக்ஸைடாய் வெளிவர

உணவுக் கழிவுகள்
உடனுக்குடன்
வெளியேற
உடல் சுத்தமாகும்.

கோபம், வெறுப்பு,
போட்டி, பொறாமை - இக்கழிவுகள்
மனதிற்குள்
மலைபோல குவிந்துகிடக்கின்றன.

அவை
மாதங்களாய், வருடங்களாய்
அதனுள் -
மக்கி நாறுகின்றன.

உள்ளக் கழிவுகள்
உடனுக்குடன்
வெளியேற
எண்ணம் சுத்தமாகும்.

சிறுகதை

# திரிசுழலம்



சரியான நேரத்தில் மானஸி பொதுக் கூட்டத்திற்கு வந்து சேர்ந்தாள். ஹாலின் வராந்தாவிலும், வெளியே நிற்கும் மரங்களின் நிழலின் அடியிலும் மக்கள் கூடி நின்று கொண்டிருந்தார்கள். தன்னுடன் வந்த பெண்ணை மானஸி அழைத்துக்கொண்டு போய் ஹாலின் உள்ளே போடப்பட்டிருந்த நாற்காலிகளில் ஒன்றின்மீது உட்கார வைத்தாள். வந்திருந்த பெண், தன் மகனை மார்போடு சேர்த்து அணைத்து வைத்தபடி உட்கார்ந்தாள்.

திடீரென்று பக்கத்திலிருந்து ஒரு கேள்வி.

“டாக்டர் மானஸிதானே நீங்க?” என்று கேள்வி கேட்டவரை மானஸி கூர்ந்து பார்த்தாள்.

“மிஸ்டர் பிரதாபன்?” மானஸி ஆச்சரியத்தோடு கேட்டாள்.

“அப்பொ, மானஸி என்னை மறக்கல?”

பதிலுக்கு அவள் சிரித்துக் கொண்டாள்.

“நோட்டீஸில் பெயரைக் கண்டதும் நான் சந்தேகப்பட்டேன், இது நமக்குத் தெரிந்த மானஸியாகத்தான் இருக்கும் என்று!”

“ஆனால், நோட்டீஸில் நான் பார்த்த சிறப்பு அழைப்பாளர் பிரதாபன் என்று நான் நினைக்கலை. பிரதாபன் அமெரிக்காவிலோ, இங்கிலாந்திலோ இருப்பாய் என்று நான் நினைச்சிருந்தேன்.”

“அது சரி.”

இப்படி உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தபோது, வாலன்டியர்களில் ஒருவர் வந்து, அவர்கள் இருவரையும் மேடைக்கு வரும்படி அழைத்தார். மேடைக்குப் போன இருவரும் அருகருகே உட்கார்ந்து கொண்டார்கள்.

“நோட்டீஸில் பேரைக் கண்டவுடனே நான் விசாரித்தேன், இந்த டாக்டர் மானஸி யார்னு? விசாரித்ததில், கல்லூரி ஆசிரியை என்று மட்டும் தெரிய வந்தது.”

அதைக் கேட்டதும் மானஸி சிரித்துக் கொண்டாள்.

> **“இது என்னுடைய மகன் பிரகாசன்! இவனுக்கு எத்தனை வயசுன்னு உங்களில் யாராவது யூகித்துச் சொல்ல முடியுமா?”**

மலையாள மூலம் : **திருமதி சரோஜினி உன்னித்தான்**



"மானஸியின் குடும்பம் எங்கே இருக்கு?"

"எங்கூடத்தான் இருக்காங்க."

"ஹஸ்பெண்ட் என்ன பண்ணுறார்?"

"எனக்குக் கணவர் கிடையாது!"

டாக்டர் பிரதாபன் ஆச்சரியத்தோடு அவளுடைய கழுத்தைப் பார்வையிட, கழுத்தில் தாலிச்சரடு இல்லை என்பது அப்போதுதான் அவருக்குத் தெரிய வந்தது.

"உனக்கு இன்னும் திருமணமாகலியா?"

"இல்லை."

"அப்போ நீ குடும்பம்னு சொன்னது?"

"என் தாயையும், தந்தையையும்."

"நீங்க நல்லா இருக்கிறீங்களா?"

"ஆமாம்."

"டீச்சர்?"

"அம்மாவுக்குக் கொஞ்சம் வாதத்தின் தொல்லை உண்டு. இப்போ அவங்களால ஏறி, இறங்கி நடக்க முடியாது. ரொம்பக் கஷ்டப்படுறாங்க."

அப்போது ஒலிபெருக்கியிலிருந்து வந்து கொண்டிருந்த பாடல் நின்றது. அதையொட்டி அறிவிப்புச் செய்யப்பட்டது.

"நம் மதிப்பிற்குரிய அமைச்சர் அவர்கள் வந்து கொண்டிருக்கிறார். உடனே வந்து சேர்ந்து விடுவார். எல்லோரும் அமைதி காக்கும்படிக் கேட்டுக் கொள்கிறோம்!"

"உடனே வந்து சேர்ந்து விடுவார் என்று சொன்னால், அப்போ இன்னும் குறைஞ்சது அரை மணி நேரமாவது ஆகும் என்று அர்த்தம்!" கூட்டத்திலிருந்து யாரோ முணுமுணுப்பது கேட்டது.

"சரி, பிரதாபன் சாரின் குடும்பத்தைப் பற்றி ஒன்றும் சொல்லலியே...?" மானஸி கேட்டாள்.

"அப்பா, போன வருசம் இறந்து போனாங்க. அம்மா இடைக்கிடையே திருவனந்தபுரத்திலிருக்கும் தங்கச்சி கிட்டெ போயிடுவாங்க. தங்கச்சியோட ஹஸ்பெண்ட் குவைத்துல வேலை பார்க்கிறாரு. அவங்களுக்கு ஒரு மகன். அவன் ஃபிஃப்த் ஸ்டாண்டர்டுல படிக்கிறான்."

"பிரதாபனின் மனைவியும், குழந்தைகளும்?"

"ஓ, எனக்கு அப்படி ஒன்றும் கிடையாது! திருமணம் பண்றதுக்கான நேரம் கிடைக்கல எனக்கு!"

டாக்டர் பிரதாபன் இதழின் ஓரமாகப் புன்னகை ஒன்று தவழ்ந்தது.

"மானஸி ஏன் மேரேஜ் பண்ணலை?"

"மனசுக்குப் பிடித்தமான ஒரு ஆள் கிடைக்கலே, அதனால்தான்!"

டாக்டர் பிரதாபன் எடுத்துக் கேட்டபோது, மானஸி தன் கதையை விரிவாகச் சொல்லத் தொடங்கினாள்.

"படித்துக் கொண்டிருக்கும்போதே எனக்குப் பல சம்பந்தக் காரியங்கள் வரத்தொடங்கியிருந்தன. படித்து



தமிழில் : **ஏ.எம். சாலன்**

முடித்த பின்னால் எனக்குத் திரு மணம் பண்ணி வைத்தால் போதும் என்று நான் பிடிவாதமாகச் சொன்ன தால், வீட்டில் என் அம்மாவும், அப் பாவும் என்னை வற்புறுத்தவில்லை.

"நான் படித்துப் பட்டங்கள் பல வாங்கும் வரையிலும் என்னுடைய வீட்டார் காத்திருந்தார்கள். 'திருமண பீரோ'வில் என் பெயரைப் பதிவு செய்து வைத்தார்கள். படிப்பும், தகுதி யும் அதிகமாகிப் போனதால் பல பேருடைய பொருத்தங்கள் எனக்குப் பொருந்தாமலாயிற்று.

"கடைசியில் எல்லாம் ஒத்துவந்த போது, நான் பிறந்த ஊர் காசர்கோடு என்பதால் பலர் 'இந்தச் சம்பந்தம் எங்களுக்கு வேண்டாம்!' என்று சொல்லி நழுவிப் போய்விட்டார்கள்."

"உன் பிறந்த ஊருக்கு அப்படி யென்ன குழப்பம்?"

"அது தெரியாதா? கேரளத்தில் காசர்கோட்டுக்காரின்னா யாரும் பெண் கேட்டு வரமாட்டாங்க! காசர் கோட்டிலுள்ள பெண்ணுக்குத் தற் காலம் உடல்நலக் குறைவு இல்லை யென்றாலும்கூட, போகப்போக உடல்நலக் கோளாறு ஏற்படலாம் இல்லையா?

"ஒருமுறை பூனாவில் வேலை பார்த்துக்கொண்டிருந்த ஓர் எஞ்சினியர் என்னைப் பெண்பார்க்க வந்திருந்தார். அவருடைய நண்பரும் உடன் வந்திருந்தார். அவருக்கு என் னையும், எனக்கு அவரையும் பிடித் திருந்தது. பேசி முடித்து ஒரு வாரம் ஆனதும், மாப்பிள்ளை வீட்டிலிருந்து ஒரு கடிதம் வந்தது, 'என் மகனுக்குக் காசர்கோட்டிலுள்ள பெண் வேண் டாம்!' என்று.

"அதற்குப் பிறகு வீட்டிற்குப் பெண் பார்க்க வருபவர்களுக்கு முன்னால் வந்து நிற்பதில்லை. இப்போதும் ஒன் றும் முடங்கிப் போய்விடவில்லை. பார்ப்போம், காசர்கோட்டுக் காரியைக் கட்டிக்கொண்டு போக தைரியமுள்ள ஓர் ஆண்பிள்ளை இறங்கி முன்னே வரட்டும்!"

"ஓ... இப்போதுதான் மன நிம்மதி" என்று சொல்லிச் சிரித்தான் பிரதாபன்.

பிரதாபனின் மனத்திரையில் இப்போது ஒரு பதினேழு வயதுள்ள பெண்ணின் சித்திரம் தோன்றியது. உயர்ந்து மெலிந்த அழகான ஓர் இளம் பெண்! தன் வாலிபப் பருவத்தில் அப்பெண்ணின்மீது தன்னையறியா மல் ஒரு நெருக்கம் ஏற்பட்டிருந்த தில்லையா? அதை வெளியே காட்டிக் கொள்ள அன்று மனத்தைரியம் போதாது. பிரதாபன் மிகவும் மதிக்கிற கோகுலதாசன் என்ற கணக்கு வாத் தியாருக்கும், நிர்மலாதேவி என்ற இங்கிலீஷ் டீச்சருக்கும் பிறந்த ஒரே மகளல்லவா!

பிளஸ் டூ படிப்பு முடிந்ததும் அப்பாவுக்குத் திருவனந்தபுரத்திற்கு இடம் மாற்றம் கிடைத்தது. அன்னிக்கு சாரிடமும், டீச்சரிடமும் விடை பெற்றுக் கொண்டு, அவங்க வீட்டு வெளி கேட்டைக் கடந்தபோது, மனதில் ஓர் இனிமையான நினைவு தங்கி நின்றது. அதற்குப் பிறகு, இன்று தான் அப்பெண்ணைப் பிரதாபன் சந்திக்கிறான்.

"நம் அமைச்சர் அவர்கள் வந்து விட்டார்கள். உடனே பொதுக் கூட்டம் தொடங்கப்படும். எனவே, எல்லோரும் அமைதியாக உட்காரும் படிக் கேட்டுக் கொள்கிறோம்" – ஒலி பெருக்கியில் அறிவிப்புக் கேட்டது.

அரங்கத்திற்குள்ளே 'திமுதிமு' வென ஆட்கள் வந்து சேர்ந்தனர். கூட்டம் களைகட்டத் தொடங்கியது. பெண்கள் ஆரத்தி எடுத்து வரவேற்க, அமைச்சர் மேடையை நோக்கி ராஜ நடை நடந்து வந்து கொண்டிருந்தார்.

பொதுக்கூட்டம் தொடங்கியது. அமர்வின் தலைவராக முனிசிபல்

சேர்மன் உட்கார்ந்து கொண்டிருந் தார். அமைச்சர் கூட்டத்தைத் தொடங்கி வைத்துப் பேசவேண்டும். வரவேற்புரையும், தலைவர் உரையும் முடிந்தபோது அமைச்சர் எதிரே உட் கார்ந்திருக்கும் மக்களைப் பார்த்துக் கரம் கூப்பியவாறு எழுந்தார். ஒரே கரவொலியும், ஆரவாரமும்.

அமைச்சர் உரையாற்றும்போது இடையிடையே குரல் தடுமாறியது. எண்டோசல்பான் உபயோகிப்பத னால் உடல்நலக்குறைவு ஏற்பட்டு அவதிப்படும் சக உயிர்களைக் காப் பாற்ற ஒவ்வொருவரும் தயாராக வேண்டும் என்று அமைச்சர் கூறி யதும் மக்கள் கைதட்டித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். எண் டோசல்பான் உபயோகிப்பதனால் பாதிக்கப்பட்டவர்களைப் பற்றியும், அவர்களை மீண்டும் வாழ்க்கைக்குத் திருப்பிக் கொண்டுவர வேண்டும் என் றும் அமைச்சர் பேசியபோது, மக்கள் எல்லோரும் கை தட்டி ஆரவாரம் செய்தனர்.

டாக்டர் பிரதாபச்சந்திரன் மேடையில் ஆற்றிய உரையின் ஒரு பகுதி, மானஸியின் இதயத்தைத் தொட்டது. “இந்த ‘விஷம்’ காரண மாக நல்ல பெண்ணுக்கும் – ஆணுக் கும் வாழ்க்கைத்துணை கிடைக்காமல் ஆகிக்கொண்டிருக்கிறது.”

அடுத்தது மானஸி பேச வேண் டும். அரங்கில் ஒரு நாற்காலியில் அவள் உட்கார வைத்திருந்த ‘அந்தப் பெண்ணை’ மானஸி கைகாட்டி அழைத்தாள். அந்தப்பெண் ஒரு குழந் தையைத் தோளோடு சேர்த்து அணைத்தபடி மேடைக்கு வருவதற் காக எழுந்தபோது வாலன்டியர்கள் போய் அப்பெண்ணைப் போக விடாமல் தடுத்தார்கள்.

“தயவு செய்து அவங்களைத் தடுக்காதீங்க, அவங்களை மேடைக்கு வர அனுமதியுங்கள்” மானஸி மைக்கின் மூலம் அறிவித்துவிட்டு அமைச்சரைப் பார்த்தாள்.

“அவங்க வரட்டும், விடுங்க” என் றார் அமைச்சர். மக்கள் அமைதியாக உட்கார்ந்து நிகழ்ச்சியைக் கவனிக்கத் தொடங்கினார்கள். அந்தப்பெண் மேடைக்குச் சென்று எல்லோரையும் தலைகுனிந்து வணங்கினாள்.

தேவாங்குக் குட்டியைப் போல் அந்தப் பெண்ணின் தோளின்மீது ஒட்டிக்கிடந்த குழந்தையை உயர்த்திப் பிடித்தவாறு அவள் தன் எதிரே உட்கார்ந்து கொண்டிருப்பவர்களைப் பார்த்துக் கேட்டாள்:

“இது என்னுடைய மகன் பிரகாசன்! இவனுக்கு எத்தனை வயசுன்னு உங்களில் யாராவது யூகித்துச் சொல்ல முடியுமா?” எல் லோரும் பார்க்கும்படியாக அப்பெண் தன் குழந்தையை மக்களுக்குக் காட் டியபடி, மைக்கின் பக்கத்தில் வந்து நின்று பேசத் தொடங்கினாள்.

“இவனுக்கு 13 வயசாச்சு. ஆனால், பார்க்கும்போது மூன்று அல்லது நான்கு வயசுப் பையன்போல் தோன் றும். இதே வயதில் உங்களுக்கும் மகளோ அல்லது மகனோ இருக்க லாம்! அவர்களெல்லாம் ஓடியாடி விளையாடுவார்கள். பள்ளிக்குப்

**பச்சைக் குங்குமம்**

**ஆரணி அருகில் உள்ள வாழைப் பந்தலில் பச்சை யம்மன் கோவில் உள்ளது. அந்த அம்மனுக்குப் பச்சை நிறக் குங்குமம் நிவேதனமாக வைக்கின்றனர். பச்சைக் குங்குமமே இங்குப் பிர சாதமாக வழங்கப்படுகிறது.**

**– ஆர்.கே. லிங்கேசன்**

போவார்கள். ஆனால், இவனைப் பாருங்கள்... கீழே கிடத்தினால் மல்லாக்க ஒரே கிடப்பாகத்தான் கிடப்பான். இவனால் ஒரு பக்கமாகச் சாய்ந்து படுக்க இயலாது."

அப்பெண்ணின் பேச்சு இடையில் நின்றது. அவள் விழிகளிலிருந்து மாலை மாலையாகக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. கண்ணீரைத் தன் சேலை நுனியினால் துடைத்துக் கொண்டு அப்பெண் மீண்டும் பேசத் தொடங்கினாள்.

"எனக்கு இவனைத்தவிர இன்னொரு பெண்ணும் இருக்கிறாள். இவனுடைய அக்கா! அவளுக்கு 17 வயசு ஆகுது. இன்னும் அவள் நடக்க இயலாமல் வீட்டுக்குள்ளேதான் இழைந்து இழைந்து நகர்வாள். அதுக்கு எட்டு வயசிலேயே திடீரென்று இரண்டு கால்களும் நடக்க முடியாமல் போயிற்று. அதைத் தொடர்ந்து கைகளும்! இப்போதும் கூட வாயில் சோற்றை ஊட்டித்தான் விட வேண்டும். பருவப்பெண் அவள். சுயமாக அவளால் எதுவும் செய்ய இயலாது. எல்லாவற்றிற்கும் அம்மாவின் உதவி வேண்டும் அப்பெண்ணுக்கு. இப்போதுகூட, பக்கத்து வீட்டிலுள்ள ஒரு பாட்டியை அழைத்துத் துணைக்கு உட்கார வைத்துவிட்டுத்தான் நான் இங்கே வந்தேன்.

"தோட்டத் தொழிலாளியாக வேலை பார்த்துக்கொண்டிருந்த என் கணவர் இரண்டு வருடங்களுக்கு முன்புதான் இறந்தார். அவரும்கூட ஒரு வருடம் வரையில் எழவும் முடியாமல், நடக்கவும் இயலாமல் படுத்த படுக்கையாகக் கிடந்து நரக வேதனையை அனுபவித்து விட்டுத்தான் போய்ச் சேர்ந்தார்."

அப்பெண் பேச்சை மேலும் தொடர முடியாமல் விம்மினாள். அதைப் புரிந்து கொண்ட மானஸி, அப்பெண்ணின் முதுகைத் தொட்டுத் தடவி ஆறுதல் படுத்தினாள். தன் மகனின் உடலின்மீது விரல்களால் வருடியபடி அப்பெண் மேலும் தொடர்ந்தாள்.

"இதோ, இவன் பிறக்கும்போது நல்லாத்தான் இருந்தான். எனக்கும் என் கணவருக்கும் ரொம்ப மகிழ்ச்சியாக இருந்தது. இருளடைந்த எங்கள் வாழ்வில் இவன் ஒளி வீசச் செய்வான் என்று நினைத்திருந்தோம்! அதனால்தான், நாங்க இவனுக்குப் 'பிரகாசம்' என்று பெயர் வைத்தோம்! மங்கி மங்கிப் போய்க் கொண்டிருக்கும் இந்தப் பிரகாசம், எந்த நிமிடம் வேண்டுமானாலும்..."

மேலும் தொடர முடியாமல் அந்தப் பெண் 'ஓ'வென ஒப்பாரி வைத்து விட்டாள். மானஸி அப்பெண்ணைப் பிடித்து நாற்காலியில் உட்கார வைத்தாள். பின், மைக்கின் அருகே போனாள்.

"மேடையில் அமர்ந்திருக்கும் சிறப்பு அழைப்பாளர்களே... கூடியிருக்கும் பொதுமக்களே... இந்தத் தாயைப்போல் தன் துக்கத்தை மறைத்துக்கொண்டு இன்னும் எத்தனையோ தாய்மார்கள் நம் நாட்டில் இருக்கிறார்கள். இவர்களுக்கு ஆறுதல் சொல்வதைத் தவிர, இனி அவர்களை நம்மால் பாதுகாக்க இயலாது. எதிர்காலத்தில் இன்னும் பல தாய்மார்கள் கவலைப்படாமல் இருக்க, நம்மால் ஏதாவது செய்ய முடியுமா? இதைப் பற்றித்தான் நாம் இனி யோசிக்க வேண்டும்.

"யார் யாரெல்லாமோ விஷத்தை விதைத்துக்கொண்டு, காசை அறுவடை செய்கிறார்கள் நம் நாட்டில். சிந்தித்துப் பாருங்கள். இதை நாம் எவ்வாறு தடுத்து நிறுத்துவது? எண்டோசல்பான் என்ற கொடிய விஷத்தைத் தடை செய்ய இன்னும் நாம் பத்து வருடங்கள் வரையில் காத்திருக்க வேண்டும். அதற்கு முன்னர் இந்த நாடு வெறும் தரிசு நிலமாக ஆகிவிடாதா? பாழ் ஜென்மங்கள் முளைக்கும் வெறும் ஒரு தரிசு நிலம்! சொல்லுங்க? நமக்கு எண்டோசல்பான்



போலுள்ள கொடிய விஷங்களி லிருந்து கிடைக்கும் சுகம் தேவை தானா? யோசித்துப்பாருங்கள். எனக்கு இதைத் தவிர வேறொன்றும் சொல்வதற்கில்லை.”

மானஸி தனக்குப் பின்னால் கிடந்த நாற்காலியில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

பார்வையாளர்கள் கைதட்டி ஆரவாரம் செய்தார்கள். ஒருவேளை அவர்கள் அதைப்பற்றிச் சிந்தித்திருக் கலாம்!

●



# என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களில் 'மகளிர் தினம்'

திருமதி ஹேமலதா அண்ணாமலை அவர்களுக்கு, என்.ஐ.ஏ. யுவசக்தி தலைவர் விருது வழங்கிச் சிறப்பிக்கிற காட்சி. அருகில் கவிதாயினி எம். உமா மகேஸ்வரி.

பொள்ளாச்சியில் எம்.சி.இ.டி., என்.பி.டி., வாணவராயர் வேளாண்மைக் கல்லூரி சார்பில் மார்ச் 8–ஆம் தேதி 15–ஆவது சர்வதேச மகளிர் தினம் கொண்டாடப்பட்டது.

திருமதி கௌரி மாணிக்கம், திருமதி அபிராமி ஹரிஹரசுதன், திருமதி ஞானாம்பிகை ஆகியோர் சிறப்பு விருந்தினர்களாகக் கலந்து கொண்டனர். 'என்.ஐ.ஏ. யுவசக்தி' அமைப்பின் தலைவர் திருமதி கௌரி மாணிக்கம் அவர்கள், திருமதி ஹேமலதா அண்ணாமலை அவர்களுக்கு மகளிர்தின விருது வழங்கிச் சிறப்பித்தார்.

கோவை கவிதாயினி எம். உமா மகேஸ்வரி தமது சிறப்புரையில் கம்பன், பாரதி, கண்ணதாசன், வைரமுத்து ஆகியோரின் பாடல்களிலுள்ள பெண்மையின் சிறப்புக்களைப் பட்டியலிட்டுப் பேசினார். இறுதியில் மகளிர் தின உறுதிமொழி கூறித் தனது பேருரையை நிறைவு செய்தார்.

விருது பெற்ற திருமதி. ஹேமலதா அண்ணாமலை அவர்கள், யோகப் பயிற்சி, நற்சிந்தனை, நேரம் தவறாமை என்ற மூன்று கொள்கைகளைப் பற்றிக் கூறினார். இவர், கோவை ஆம்பியர் எலக்ட்ரிக் வெஹிக்கிள்ஸ் பி. லிட்டின் முதன்மைச் செயல் அலுவலர் ஆவார்.

செல்வி தேவி பிரியா நன்றி கூற, நாட்டுப்பண்ணுடன் விழா நிறைவு பெற்றது.

– தகவல் :

**பேரா. சரவணன்.**



விழாவிற்கு வந்திருந்த திரளான மக்களும், மாணவர்களும்.



திருமதி. கருணாசாகரிக்கு வாணவராயர் இணையர் விருது வழங்கிய காட்சி!

# பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி வைரவிழா!

பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரியின் *60* ஆண்டு வைரவிழா வினை முன்னிட்டு, கோவை 'பக்தி நாட்டிய நிகேதன்' இயக்குநர் திருமதி. கருணாசாகரி குழுவினரின் 'நொய்யல் நதி' விழிப்புணர்வு நாட்டிய நாடகம் மிகச்சிறப்பாக நடைபெற்றது.

இவ்விழாவில் கல்லூரியின் தலைவர் டாக்டர் பி.கே. கிருஷ்ணராஜ் வாணவராயர், திருமதி. கருணாம்பாள் வாணவராயர், திருமதி. சம்யுக்தா சங்கர் வாணவராயர் ஆகியோர் சிறப்பு விருந்தினர்களாகக் கலந்து கொண்டார்கள்.

விழாவில், திருமதி. கருணாசாகரி அவர்களுக்கு "பக்தி நாட்டியச் சுடரொளி" என்ற விருதினைக் கல்லூரித் தலைவர் வழங்கிச் சிறப்பித்தார்.

இக்குழுவின் நோக்கம், நொய்யல் நதியை மீட்டெடுப்பதற்கான முயற்சிகளில் வெற்றிபெற *10* ஆயிரம் மாணவர்களுக்கு நொய்யல் நதி பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்துவதாகும். தொழிற்சாலைக் கழிவுகளால் தற்போது நொய்யல் நதி செயல்படாமல் உள்ளது.

கல்லூரியின் முதல்வர் முனைவர் பொ.மா. பழனிசாமி, நிர்வாக மேலாளர் திரு. ரகுநாதன் கலந்து கொண்டனர். இவ்விழாவை ஏற்பாடு செய்தவர் நுண்கலை மன்ற ஒருங்கிணைப்பாளர் முனைவர் ப. அனிதா.

– தகவல் : வரலாற்றுத்துறைத் தலைவர் முனைவர் ரெ. முத்துக்குமரன்.

*13–ம் பக்கத் தொடர்ச்சி*

**போப் : Thank God! God is there!**

வாடிகன் நகரில் 1981–இல் போப் அவர்களால் ஏற்பாடு செய்யப்பட்ட ஒரு விஞ்ஞானக் கருத்தரங்கு!

தலைசிறந்த வானியல் விஞ்ஞானிகளும் ஹாக்கிங்கும் கலந்து கொண்ட கருத்தரங்கின் முதல் அமர்வில் போப் ஜான்பால் – II அவர்களின் தொடக்க உரை, ஸ்டீபன் ஹாக்கிங்கிற்கு ஓர் எச்சரிக்கையாக வருகிறது.

போப் அவர்களின் உரையிலிருந்து : "Any scientific hypothesis on the origin of the world such as that of the primeval atom from which the whole of the physical world derived, leaves open the problem concerning the beginning of the universe. Science cannot by itself resolve such a question; what is needed is that human knowledge that rises above physics and astrophysics which is called metaphysics; it needs, as above all, the knowledge that comes from revelation of God."


ஸ்டீபன் ஹாக்கிங்

கருத்தரங்கில் உள்ள அனைவரின் கவனமும் இப்பொழுது ஹாக்கிங் பக்கம் திரும்புகிறது. அடுத்து வருகிறது ஸ்டீபன் ஹாக்கிங்கின் உரை.

"கடவுளைப் பற்றிப் பேச விஞ்ஞானிகளுக்கு என்ன 'யோக்யதை' இருக்கிறது?" என்ற தொனியிலமைந்த போப் பாண்டவரின் உரையை, வைத்த கண் வாங்காமல் கேட்டுக் கொண்டிருந்த ஸ்டீபனின் மனதில் ஆவேசம் வளரத் தொடங்கியது.

விஞ்ஞானிகளுக்கு 'யோக்யதை' இல்லையென்றால் அது வேறு யாருக்கு இருக்கிறது? என்று தனக்குத்தானே கேட்டுக் கொள்கிறார்.

உண்மையைச் சொன்ன ஒரே குற்றத்திற்காகக் கலீலியோவைத் தனிமைச் சிறையில் தத்தளிக்க விட்டவர்கள். புரூனோவை உயிரோடு மதவாதிகள் எரித்தார்கள். மதவாதிகளெல்லாம் கடவுளைப் பற்றிப் பேசலாம் என்றால், ஒரு விஞ்ஞானி ஏன் பேசக்கூடாது? என்று நினைக்கிறார்.

போப்பாண்டவர் பேசி முடித்த அடுத்த அமர்வில், ஸ்டீபனின் உரை வருகிறது. அந்த அமர்வில் போப்பாண்டவர் இல்லை. உரையின் சாராம்சம் :

"நாம் வாழ்ந்து கொண்டிருக்கிற இப்பிரபஞ்சம், இன்று விரிந்து, விரிந்து சென்று கொண்டேயிருக்கிறது. ஒரு காலகட்டத்தில் அது சுருங்க ஆரம்பிக்கும். சுருங்கிச் சுருங்கி மேலும் சுருங்க முடியாத நிலையை அடையும் போது, மறுபடியும் அது விரிய ஆரம்பிக்கும். விரிய ஆரம்பித்தவுடன் எப்படி, எப்போது தனிமங்கள் உருவாயின; நட்சத்திரங்கள் எவ்வாறு உருவாயின? அவற்றின் கதி என்ன? விதி என்ன? என்பதையெல்லாம் எடுத்துரைக்கும் கணிதங்கள் இருக்கின்றன;

இதில் கடவுள் எங்கே வருகிறார்? அவர் வருவதற்கு என்ன அவசியம்? அவருக்கு இங்கே என்ன வேலை?" என்று சற்றுக் கடுமையாகவே வருகிறது ஸ்டீபனின் உரை.

உரையின் சாராம்சம் போப்பாண்டவருக்கு அனுப்பப்படுகிறது.

எந்த இடத்தில் நின்று நாம் பேசுகிறோம் என்ற பயம் சிறிதுமில்லாமல், 24 மணி நேரமும் கடவுளின் பிரதிநிதிகளான கிறித்துவ குருமார்களின்

வாடிகன் நகரில், ஸ்டீபனின் உரை இடியாக இறங்குகிறது.

அவையில் நிசப்தம். கருத்தரங்க இறுதியில் விஞ்ஞானிகளுக்குப் போப் தரிசனம் தரவிருப்பதாக அறிவிப்பு வருகிறது.

போப்பாண்டவரின் கோடைக்கால மாளிகையில் தரிசனத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டு, விஞ்ஞானிகளும் மற்ற முக்கியப் பிரமுகர்களும் அமர்ந்திருக் கிறார்கள். ஒரு மேடையில் உயர்ந்த நாற்காலியில் போப் அமர்ந்திக்கிறார். ஒவ்வொருவரும் வந்து போப் முன்னே நின்று, மரியாதை செலுத்தி ஓரிரு வார்த் தைகள் பேசுவதாக ஏற்பாடு.

'பிரபஞ்சம் இயங்குவது ஒருசில கணக்குகளின்படிதானே தவிர, கட வுளின்படி அல்ல' என்று ஆவேசமாகப் பேசிய ஸ்டீபன் ஹாக்கிங்கும் அங்கே நாற்காலியில் அமர்ந்தவாறு வருகிறார்.

போப்பாண்டவரும் ஸ்டீபனும் என்ன பேசிக் கொள்வார்கள் என்ற ஹேஸ்யம் அறை முழுவதும் நிறைந்திருக்கிறது. யாருமே எதிர்பாராத







சம்பவம் அப்போது நடந்தது. போப் பாண்டவரின் முன்பாக ஸ்டீபனின் 'வீல்சேர்' வந்து நின்றது. மெதுவாகப் போப்பாண்டவர் எழுந்தார், மேடையி லிருந்து இறங்கி, ஸ்டீபனுக்கு அருகில் மண்டியிட்டு அமர்ந்தார். ஸ்டீபனிடம் ஓரிரு நிமிடங்கள் அதிகமாகவே பேசி னார். எழுந்து ஆடைகளைச் சரிசெய்து கொண்டு வாய் நிறையச் சிரித்து வழியனுப்பிவிட்டு, மேடையிலுள்ள தனது நாற்காலியில் மீண்டும் வந்த மர்ந்தார். அவையினர் கண்கள் குள மாயின!

அனைவரின் கண்ணீரும் சாட்சி யாக இருக்க, போப்பாண்டவர் காட் டிய கரிசனம்தான் தெய்வீகம் என் பதோ! போப்பாண்டவரையே மண்டி யிட வைத்தது எது? அதுதான் ஆன் மிகத்தின் அடையாளமோ!

கடவுளையே நம்பாதவரிடம் போப் மண்டியிடுவதா? என்ற சர்ச்சை அங் கும் இங்கும் எழாமலில்லை."

– நூல் : 'மூலத்தைத் தேடும் முதன்மை ஞானி : ஸ்டீபன் ஹாக்கிங்', வெளியீடு : 'விஜயா பதிப்பகம்', கோவை. ஆசிரியர் : அருள்நிதி டாக்டர் ஜி. அழகர் ராமானுஜம்.

அட்டைப்படக் கட்டுரை



# முருதீஸ்வரர் திருக்கோவில்

வடக்குக் கர்நாடகத்தில் உள்ள முருதீஸ்வரர் கோயில் அரபிக் கடலுக்குள்ளேயே இருக்கிறது. போது பிரபலமாகி வருகிறது. உடுப்பியிலிருந்து சுமார் 300 கி.மீ.-க்கு அப்பால் இந்தக் கோயில் உள்ளது.

அங்குள்ள சிவன் சிலை உலகத்திலேயே இரண்டாவது உயரமான சிலையாகும்.

முருதீஸ்வரர் என்பதில் உள்ள 'ம்ருடா', 'ஈஸ்வரா' என்பவை துணியால் சுற்றப்பட்ட ஈஸ்வரர் என்று பெயர். இதைப் பற்றிய ஒரு புராணக் கதை உள்ளது.

ஆத்மலிங்கம் என்று சொல்லப்பட்ட ஈஸ்வரன் சிலையைச் சுற்றி இருந்த துணிதான் 'ம்ருடா' என்பது. துணியால் சுற்றப்பட்ட ஈஸ்வரனை விநாயகர் வீசியெறிய, அது விழுந்த இடம்தான் அரபிக் கடலில் இந்தக் கோயில் இடம்.

இப்புராணக்கதை ராவணனோடு தொடர்புடையது. ராவணன் செய்த கடும் தவத்திற்குச் சிவபெருமான் ஆத்மலிங்கத்தைப் பரிசாக அருளினார், ஒரு நிபந்தனையுடன். ராவணன் தன் இருப்பிடம் செல்லும்வரை இந்த லிங்கத்தை எங்கும் வைக்கக் கூடாது.

நித்ய கர்மாக்களைச் செய்து கொள்வதற்காக ராவணன் அதை விநாயகரிடம் ஒப்படைத்துவிட்டு நித்ய கர்மாக்களைச் செய்தபோது, ஏற்பட்ட தாமதத்தால் விநாயகர் அந்த ஆத்மலிங்கத்தை சுற்றப்பட்ட துணியோடு வீசியெறிந்து விடுகிறார். வீசியெறியப்பட்ட ஆத்மலிங்கம் விழுந்த இடம்தான் முருதீஸ்வரர் கோயிலாக இப்

1935 வரை இச்சிறிய கோயில் பிரபலமாக வில்லை. இந்த 80 ஆண்டுக் காலத்தில் இந்தக் கோயில் கர்நாடகம் முழுவதும் பிரபலமாகி, இந்தியா முழுவதும் பிரபலமாகி விட்டது.

1935-இல் ஆர்.என். ஷெட்டி என்பவர் முருதீஸ்வரர் மீது கொண்ட பக்தியால் அந்தக் கோயிலைக் காப்பாற்ற நினைத்தார். அதற்கு அவரிடத்தில் வசதியில்லை. பொதுமக்களிடமிருந்து பொருளுதவி பெற்றும் எதிர்பார்த்த அளவுக்குக் கிடைக்கவில்லை.

முருதீஸ்வரர் அருளால் சாலை ஒப்பந்தக்காரராகப் பணியைச் செய்துகொண்டிருந்த அவர், அதில் கிடைத்த லாபத்தால் செல்வந்தரானார்.

45 ஆண்டுகளுக்கு முன்பு 1973-ஆம் வருடம் கன்னியாகுமரியிலுள்ள விவேகானந்தர் மண்டபத்தைப் பார்ப்பதற்கான வாய்ப்பு தற்செயலாக அவருக்குக் கிடைத்தது. அதைப் பார்த்தவுடன் இவருக்கு ஓர் ஆசை. இந்துமகா சமுத்திரத்தில் இப்படி ஒரு விவேகானந்தர் மண்ட



முருதீஸ்வரர் ஆலய இராஜகோபுரம்

பம் இருக்கும்போது, அரபிக் கடலில் உள்ள இந்தப் பழைய கோயிலைச் சிறப்பான ஒரு கோயிலாக அமைக்கலாமே என்ற எண்ணம் இவருக்குத் தோன்றியது.

விவேகானந்தர் மண்டபத்தை அமைத்துக்கொடுத்த சிற்பி திரு. எஸ்.கே. ஆச்சாரியுடன் தொடர்பு கொண்டு, 1977–இல் அவருடைய தலைமையில் இக்கோயிலைக் கட்டினார். 1987–இல் கட்டுமானப் பணிகள் முடிந்தன.

கோயிலுக்குள் சென்றால் நம்மைப் பிரமிக்க வைக்கும் படியாகச் சிவபெருமான் அமர்ந்த கோலத்தில் உள்ள காட்சி இம்மாத இதழின் அட்டையின் முகப்பாக வெளியாகியிருக்கிறது.


முருதீஸ்வரர் கோவிலில் 'ஓம் சக்தி' இணையாசிரியருடன் திருமதி சரோஜினி. மற்றும் முத்துக்குமார் – திருமதி லதா.

தரிசனம் முடிந்தவுடன் அப்படியே அன்னதானத்தில் கலந்து கொள்வதற்கு வழிகாட்டுகிறார்கள். ஆயிரக்கணக்கான பக்தர்கள். விசாலமான மண்டபம்.

முருதீஸ்வரர் கோயிலை மையமாக வைத்து அந்தக் கடற்கரை நகரம் வளர்ந்துள்ளது. அங்கு நல்ல ஹோட்டல் வசதி உண்டு. இரவு தங்கலாம். கடற்கரை அழகை ரசிக்கலாம். ஒரு புறம் பக்திக்கும், மறுபுறம் சுற்றுலாவுக்குமாக அமைந்துள்ள இந்த ஆலய நகரம் இப்போதுதான் பிரபலமாகி வருகிறது.


முருதீஸ்வரர் ஆலயம்

போகிற வழியில் நேத்ராவதி ஆற்றைத் தாண்டித்தான் செல்வோம். அந்த ஆறு வயிறு நிறையத் தண்ணீரை நிரப்பிக்கொண்டு செல்கிறது. காரில் நாங்கள் சென்றபோது டிரைவரிடம் அந்த ஆற்றைப் பற்றிக் கேட்டபோது, 'அது நேத்ராவதி ஆறு' என்று சொன்னார். 'இவ்வளவு தண்ணீரும் எங்கே போகிறது?' என்று கேட்டோம். கொஞ்சம்கூட அலட்டிக் கொள்ளாமல் அவர் 'அரபிக் கடலுக்குத்தான்' என்றார்.

'தமிழகத்திற்குத் தரக்கூடாதா?' என்று எங்கள் ஆதங்கத்தைச் சொன்னபோது, அந்த டிரைவர்கூட, 'தமிழகத்திற்குத் தண்ணீர் தருவதற்கு நாங்கள் சம்மதிக்க மாட்டோம்' என்றார். இப்படி அவர்கள் ஒரு நோன்பு கொண்டாடுகிறார்கள். முருதீஸ்வரர்தான் இவர்களுக்கு நல்ல புத்தி தரவேண்டும் என்று வேண்டிக் கொண்டோம்.

– ந.நி.

விழாவின் தொடக்கத்தில் குத்துவிளக்கேற்றும் நிகழ்ச்சியில் கல்லூரி முதல்வர் கே.ஆர். முத்துசாமி, தொழிற்சங்கத் தலைவர் திரு. எஸ்.என். பாலசுப்பிரமணியம், முதுநிலைப் பொதுமேலாளர் திரு. என். செழியன் ஆகியோர் கலந்து கொண்ட காட்சி

# ஆப்பக்கூடல் சக்தி பாலிடெக்னிக் கல்லூரியின் 37–ஆவது ஆண்டுவிழா!

**24**.2.2018 அன்று நடந்த கல்லூரியின் ஆண்டுவிழாவில் திரு. எஸ்.என். பாலசுப்பிரமணியம், சக்தி சுகர்ஸ் முதுநிலைப் பொது மேலாளர் திரு. என். செழியன், முதல்வர் கே. ஆர். முத்துசாமி ஆகியோர் கலந்து கொண்டனர்.

தேவகோட்டை நகைச்சுவைப் பேரரசு எஸ். ராமநாதன் சிறப்புரை வழங்கினார். கல்லூரியின் போட்டிகளில் முதல், இரண்டாம் இடங்களைப் பிடித்த 569 மாணவ மாணவியருக்குப் பரிசுகள், சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.

சக்தி சுகர்ஸ் செயல் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்களின் வழிகாட்டுதல்படி, ரூ. 58 லட்சம் மதிப்பில் கல்லூரியின் உள்கட்டமைப்பு மேம்படுத்தப்பட உள்ளது என்ற தகவலோடு விழாவின் சிறப்புக்குத் தேவகோட்டை எஸ். ராமநாதன் அவர்களின் சிறப்புரை அருமையாக அமைந்தது. பேரா. முனைவர் கே. மோகன் அவர்களின் நன்றியுரையோடு விழா நிறைவு பெற்றது.

– ந.நி.




கோப்பையை வென்ற மாணவர்களோடு கல்லூரி முதல்வர் மற்றும் பேராசிரியர்கள்.

